உ

# தொல்காப்பியம்

## இளம்பூரணம்

# பொருளதிகாரம்

## களவியல், கற்பியல், பொருளியல்


பதிப்பாசிரியன்:

வ. உ. சிதம்பரம்பிள்ளை







பிரசுரித்தவர்கள்:

வாவிள்ள இராமஸ்வாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்

சென்னை.

1933

# பதிப்பாசிரியர் குறிப்பு



இப்பகுதியில் இப்பொழுது வெளியிடப்படுவது தொல்காப்பியம் பொருளதிகார இளம்பூரணருரையில் இரண்டாவது பகுதி. இதிலே களவியல் கற்பியல் பொருளியல் என்பன அடங்கியுள்ளன. ஏனை இயல்களும் அச்சில் இருக்கின்றன. விரைவில் இளம்பூரணமுழுமையும் வெளிவரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதனை வெளியிடுதற்குக் கிடைத்த கடிதப் பிரதிகளில் ஒன்று காலஞ்சென்ற த. மு. சொர்ணம்பிள்ளையவர்களுக் குரியதாகும். அவர்கள் பிரதிசெய்யும்பொழுது உரையில் இல்லாத பலசொற்றொடர்களை இடையிடையே பெய்திருக்கிறார்கள் என்பது பல காரணங்களால் ஊகிக்கக்கூடியதாயிருக்கிறது. பிறிதொரு பிரதி ஸ்ரீமான் தி. நா. சுப்பிரமணிய ஐயரிடமிருந்து கிடைத்தது. இது சொர்ணம்பிள்ளை யவர்களது பிரதியைப்பார்த்து எழுதிய கடிதப் பிரதியின் பிரதியென்று தெரியவருகிறது. இதிலும் பலவகையான இடைச்செருகல்கள் உள்ளன. மூன்றாவது பிரதி ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுக் குரியது. இது 1912 ல் ஸ்ரீமான் தி. த. கனகசுந்தரம்பிள்ளை யவர்கள் ஏட்டுப்பிரதியைப்பார்த்து எழுதிய கைப்பிரதியாகும். இதுவே இடைச்செருகல்களைத் தெரிந்துகொள்வதற்கும் மூலத்தின் சுத்தபாடத்தை நிச்சயிப்பதற்கும் பெரிதும் பயன்பட்டது. இதனையே த. மு. சொர்ணம் பிள்ளை யவர்கள் இரவலாகப் பெற்றுத்தமக்குத் தோற்றியவாறு பலவிடங்களில் மாற்றியுங் கூட்டியும் பிரதிசெய்து கொண்டார்கள்.

இப்பொழுது வெளியிடும் பகுதியில் ஒரு சில இடங்களில் இளம்பூரணருரை மறைந்து போய்விட்டது. இவ்விடங்களில் நச்சினார்க்கினியருரையைத்தழுவி உரையெழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வகையான இடங்கள் அங்கங்கே அடையாளமிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இருதலைப்பகரத்துள் அமைத்துள்ள எழுத்துக்களும் சொற்களும் இன்றியமையாமைபற்றிப் புதிதாகச் சேர்க்கப்பட்டன வாகும்.

# மூன்றாவது-களவியல்.

அசு. இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்
டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், களவியல் என்னும் பெயர்த்து; களவொழுக்கம் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். அஃதாதல் ஈண்டு உரைக்கின்றதனால் பயன் இன்றாம் களவென்பது அறம் அன்மையின் [எனில்], அற்றன்று; களவு என்னும் சொற் கண்டுழியெல்லாம் அறப்பாற்படாதென்றல் அமையாது. களவாவது, பிறர்க்குரியபொருள் மறையிற் கோடல். இன்னதன்றி, ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் [1]அறநிலைவழா மன்றலால், இஃது [2]அறமெனப்படும். அன்னதாதல் இச்சூத்திரத்தானும் விளங்கும்.

அஃதற்றாக, மேலை யோத்தினோடு இவ்வோத்திற்கு இயைபு என்னை யெனின், மேல் கைக்கிளைமுதற் பெருந்திணை இறுவாயாக எழுதிணை யோதி அவற்றின் புறத்து நிகழுந் திணைகளு மோதிப் போந்தார். அவ் வெழுதிணையினும் ஒருதலைவேட்கையாகிய கைக்கிளையும் ஒப்பில்கூட்ட மாகிய பெருந்திணையும் ஒ[ழி]த்து இருவரன்பும் ஒத்த நிலைமையாகிய நடுவண் ஐந்திணைக்கண்ணும் புணர்ப்பும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலுமாகிய உரிப்பொருள் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளினும் நிகழுமாதலின், அவ்விருவகைக் கைகோளினுங் களவாகிய கைகோள் இவ்வோத்தினுள் உணர்த்துதலான் அவற்றின் பின் கூறப்பட்டது. இது நடுவணைந்திணைக்கண் நிகழும் பொருட்பாகுபாடாயின், அகத்திணையியலின் பின் வைக்கற்பாலது எனின், ஆண்டு வைக்கக்கருதின் "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" [புறத்திணை-௫௬] என்னும் மாட்டேறு பெறுதாம், அதனிடைக் களவியலும் கற்பியலும் கிடத்தலான் என்க.

மற்றும், அஃது யாங்ஙனம் உணர்த்தினாரோ எனின்,

"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினு மறைந்த சார்வொடு
மறையென மொழிதன் மறையோ ராறே" [செய்யுளியல்-௧௭௮]

என்பதனான் இந்நால்வகையும் இதனுள் உரைக்கப்படுகின்றதென்று கொள்ளப்படும். காமப்புணர்ச்சி யெனினும், இயற்கைப் புணர்ச்சி யெனினும், முன்னுறு புணர்ச்சி யெனினும், தெய்வப்புணர்ச்சி யெனினும் ஒக்கும். இவையெல்லாம் காரணப்பெயர். அஃதாவது, ஒத்தார்இருவர் தாமே கூடுங் கூட்டம். இடந்தலைப்பாடாவது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிற்றைஞான்றும் அவ்விடத்துச் சென்று எதிர்ப்படுதல். பாங்கற்கூட்டமாவது, இப்புணர்ச்சி பாங்கற் குரைத்து, நீ யெமக்குத் துணையாக வேண்டு[3]மென்ற

1. 'அறநிலைவழாமனிற்றலால்' என்றிருப்பின் நலம். 2. 'இஃதாமெனப்படும்' என்று பிரதியிலுள்ளது. 3. 'மென்றவழி' என்றிருத்தல் வேண்டும் போலும்.

அவன் குறிவழிச் சென்று தலைமகள் நின்ற நிலையை யுணர்த்தச் சென்று கூடுதல். தோழியிற்கூட்டமாவது, இவற்றின் பின்னர் இக்கூட்டம் நீடச்சேறல் வேண்டித் தோழியை இரந்து பின்னின்று அவள் வாயிலாகக் கூடுதல். இவை நான்கும் இம்முறையே நிகழும் என்று கொள்க. இனி இம்முறை நிகழாது இடையீடு பட்டு[ம்] வரும். அஃதாமாறு, தலைமகள் எதிர்ப்பட்டுழி அன்புடையா ரெல்லார்க்கும் இயற்கைப் புணர்ச்சி முட்டின்றிக் கூடுதல் உலகிய லன்மையான் தலைமகளை யாதானும் ஓரிடத்து எதிர்ப்பட்ட தலைமகன் அவள் காதற்குறிப்புணர்ந்து நின்று, கூட்டத்திற்கு இடையீடு உண்டாயுழியும் ஆண்டுச் சென்ற வேட்கை தணியாது நின்று, முன்னை ஞான்று கண்டாற்போலப் பிற்றை ஞான்றும் காணலாகுமோ என ஆண்டுச் சேறலும், தலைமகளும் அவ்வாறே வேட்கையான் அடர்ப்புண்டு ஆண்டுவருதலும் ஆகியவழிப் புணர்ச்சி நிகழும். ஆண்டு ஆயத்தாரானுதல் பிறரானுதல் இடையீடு பட்டுழித் தன்வருத்தத்தினைப் பாங்கற்கு உணர்த்தி அவன் தலைமகள் நின்றுழி யறிந்து கூற ஆண்டுச்சென்று புணரும். அவ்விடத்தும் இடையீடு பட்டுழித் தோழிவாயிலாக முயன்றெய்தும். இவ்வாறம், ஒரோவொன்று இடையீடுபட்டு வருதலும் உளவாம். அவ்வாறாயின், இயற்கைப் புணர்ச்சி இடையீடுபட்டுழி வரைந்தெய்தல் தக்கதன்றோ எனின், வரைந்தெய்துந்திறம் நீட்டிக்குமாயின் வேட்கை நிறுத்தலாற்றாதார் புணர்ச்சி கருதி முயல்ப. இவ்வாறு சான்றோர் செய்யுள் வந்தனவும் உளவோ எனின், சான்றோர் செய்யுட்களும் இவ்வாறு பொருள்கொள்ள ஏற்பன உள. அவையாவன:—

"மருந்திற் றீரா மண்ணி ஞுகா
தருந்தவ முயற்சியி னகற்றலு மரிதே
தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய
தேனிமிர் நறவின் றேறல் போல
நீதர வந்த நிறையருந் துயரநின்
ஞடுகொடி மருங்கி னருளி னல்லது
பிறிதிற் றீரா தென்பது பின்னின்
றறியக் கூறுது மெழுமோ நெஞ்சே
நாடுவளங் கொண்டு புகழ்நடுதல் வேண்டித்த
ஞடுமழைத் தடக்கை யறுத்துமுறை செய்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்த
விளங்குமுத் துறைக்கும் வெண்பற்
பன்மாண் சாயற் பரதவர் மகட்கே!"

இதனுள் "ஆடுகொடி மருங்கி னருளி னல்லது பிறிதிற் றீராது" என்பதனுன் இயற்கைப் புணர்ச்சி இடையீடு பட்டுப் புணர்ச்சிகருதிக் கூறியவாறு காண்க.

"மயில்கொன் மடவாள்கொன் மாநீர்த் திரையுட்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளிர்—குயில்பயிலும்
கன்னி யிளஞாழற் பூம்பொழிலி னோக்கிய
கண்ணின் வருந்துமென் னெஞ்சு." [திணைமொழி-௨௬]

இதனுள் ஐயநிலையைப் பாங்கற் குரைத்தலின் புணர்ச்சியின்றாயிற்று.

"கொண்டன் மாமழை [1]குடக்கேர்பு குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசே ரைம்பா றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்

1. 'கடைக கொபுரதது குழைதத' எனப் பிரதியில் உள்ளது.

பெருங்க ணுய முவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கு நிலவுமணன் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
யருளினு மருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா னெஞ்சே யென்னதூஉ
மருந்துய ரவலந் தீர்க்கு
மருந்து பிறிதில்லையா னுற்ற நோய்க்கே.'' [நற்றிணை-௱௪௰]

இதனுள் ' அருளினும் அருளாளாயினும் ' என்றமையால் கூட்டமின்மையும், ' பின்னிலை முனியல் ' என்றமையால் இரந்து பின்னிற்பானுகத் [1]துணிந்தமையும், தோழியிற் கூட்டத்து இயற்கைப் புணர்ச்சிக்கு ஒருப்பட்டமையும் உணர்க.

''நறவுக்கம ழலரி நற[வு] வாய்விரிந்
திறங்கிதழ் கமழு மிசைவாய் நெய்தற்
கண்ணித் தலையர் கருங்கைப் பரதவர்
நின்னைய ரல்லரோ நெறிதா ழோதி
யொண்சுணங் கிளமுலை யொருஞான்று புணரி
னுண்கயிற் றுறவலை நுமரொடு வாங்கிக்
கைதை வேலி யிவ்வூர்ச்
செய்தூட் டேனே சிறுகுடி யானே.''

பெரியீரெனச் சேட்படுத்தவழிக் கூறியது.

''கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
யரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்மலர் கமழுங் கூந்தற் [2]றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி
னிளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழி படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூ
லஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து
துஞ்சி யாமத்து முயங்கினள் பெயர்வோ
ளான்ற கற்பிற் சான்ற பெரிய
ளம்மா வரிவையோ வல்லள் [3]தெனுஅ
தாஅய் நன்னுட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய வுருகெழு கவாஅ
னேர்மலை நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் கொல்லெனத் துணியுமென் னெஞ்சே.'' [அகம்-௧௧௮]

இது தோழியிற்கூடிய தலைமகன் கூற்று.

'' அவரை பொருந்திய பைங்குர லேனற்
கவரி மடமா கதூஉம் படர்சாரன்
கானக நாட மறவல் வயங்கிழைக்
கியானிடை நின்ற புணே.'' [ஐந்திணையெழு-௬]

1. 'துணிந்தமையானும்' எனப்பிரதியில் உள்ளது. 2. 'றூவிசை' என்பது பிரதி. 3. தெஅனுங்காய்' என்பது பிரதி.

இதனானே மூந்துற்ற கூட்டமின்மை யுணர்க. இனி ஒரு கூட்ட[மு]ம் நிகழாது ஆண்டு வந்தடைவேட்கை இருவர்க்கும் தணியாது நின்று வரைந்தெய்தலும் ஒன்று. இவ்வகையி னான் இக்களவொழுக்கம் மூவகைப் படும்.

இனி இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், காமப்புணர்ச்சிக்கு இலக்க ணவகையாற் குறியிடுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இன்பமும் பொருளு ... காணுங் காலை என்பது—இன்பமும் பொருளும் அறனும் என்று சொல்லப்பட்டு, அன்பொடுபுணர்ந்த நடுவண் ஐந்திணையிடத்து நிகழும் காமக்கூட்டத்தினை ஆராயுங்காலத்து என்றவாறு.

அன்பொடு புணர்ந்த ஐந்திணை என்றதனால் கைக்கிளை பெருந்திணையை ஒழித்து நின்ற முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனக்கொள்ளப்படும். அவை அன்பொடு புணர்ந்தவாறு என்னை யெனின், கைக்கிளைபெருந்திணையைப் போலாமை, ஒத்த அன் பினராகிப் புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் இரங்கலும் நிகழ்த்துப வாகலானும், அவை நிகழுங்கால் அத்திணைக்கு உறுப்பாகிய இடமும் காலமும் கருப்பொ ருளும் துணையாகி நிகழுமாகலானும், இவை அன்பொடு புணர்ந்தன என்க. அஃதேல், ஐந்திணைப் புறத்த வாகிய வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்பனவும் அன் பொடு புணர்ந்தனவாம் எனின், அவை அன்புடையார் பலர்கூடி நிகழ்த்துபவை, யாக லின், அன்பொடு புணர்ந்தனவாம்.

"அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை" [குறள்-எசு] என்பதனானும் கொள்க.

இனி இவ்வைந்திணையும் இன்பமும் பொருளும் அறமு மாயினவாறு என்னை யெனின், புணர்தல் முதலாகிய ஐந்துபொருளும் இன்பந்தருதலின் இன்பமாயின. முல்லை முதலாகிய ஐந்திணைக்கும் உறுப்பாகிய நிலமும் காலமும் கருப்பொருளும் இவற்றின் புறத்தாகிய வெட்சி வஞ்சி உழிஞை தும்பை எ[ன்ப]னவும் வாகையுள் ஒரு கூறும் பொருளாகலானும், புணர்தன் முதலாகிய உரிப்பொருளான் வருவதோர் கேடின்மையானும், பொருளாயின. இவ்வொழுக்கங்கள் அறத்தின்வழி நிகழ்தலா னும், பாலையாகிய வாகைப்படலத்துள் அறநிலை கூறுதலானும், இவை அறமாயின. அஃதேல், கைக்கிளை பெருந்திணையும் இவற்றின் புறமாகிய பாடாண்பாட்டும் காஞ்சி யும் அறமுதலாகிய மூன்றுமன்றி அன்பொடு புணர்தல் வேண்டுமெனின், காஞ்சி அன பொடு புணராமையும் பாடாண்பாட்டு அன்பொடு புணர்தல் ஒருதலையன்மையும் அவ் வோத்தினுள் கண்டுகொள்க. ஏனையிரண்டும் அன்பொடு புணராமை மேற் சொல்லப் பட்டன. இனி அவை அறனும் பொருளுமாய் இன்பமாகா. அஃதேல், அறனும் பொரு ளும் ஆகாமையும் வேண்டுமெனின், குலனும் குணனுங் கல்வியு முடையராகிய அந்தணர் என விசேடித்தவழி ஏனையோர்க்கு இம்மூன்று பொருளு மியைதல் வேண்டுமென்னும் நியம மின்மையின் ஏற்றவழிக் கொள்ளப்படும்.

இனி ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம் என்பது புணர்தல் முதலாகிய உரிப் பொருளும் அந்நிலமும் காலமும் கருப்பொருளும், களவினும் கற்பினும் வருதலின், அவை ஒரோவொன்று இருவகைப்படும். அவற்றுள், புணர்ச்சியாகிய இருவகையினும் களவாகிய காமக்கூட்டம் எனக்கொள்க.

இன்னும் அன்பொடுபுணர்ந்த ஐந்திணைமருங்கிற் காமக்கூட்டம் என்றதனால் எல்லாநிலத்தினும் காமக்கூட்டம் நிகழப்பெறும் என்று கொள்க. அவ்வாறுதல் சான் றோர் செய்யுளகத்துக் காண்க.

மறையோர் தேஎத் ... யோரியல்பே என்பது—மறையோரிடத் தோதப்பட்ட

மணம் எட்டனுள்ளும் துறையமை நல்யாழினை யுடையராகிய துணைமையோர் நெறி என்றவாறு.

மறையோர் என்றது அந்தணரை. தேஎம் என்றது அவரதாகிய நூலை. மணம் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. பிரமமாவது, கன்னியை அணிகலனணிந்து பிரமசாரியா யிருப்பா னொருவனுக்குத் தானமாகக்கொடுப்பது. பிரசாபத்தியமாவது, மகட்கோடற் குரிய கோத்திரத்தார் மகள் வேண்டியவழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது. ஆரிடமாவது, ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக்கொடுப்பது. தெய்வமாவது வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவற்கு வேள்வித்தீ முன்னர்க் கொடுப்பது. காந்திருவமாவது ஒத்த இருவர் தாமே கூடுங்கூட்டம். அசுரமாவது, வில்லேற்றினானுதல் திரிபன்றி யெய்தானுதல் கோடற்குரியனெனக் கூறியவழி அது செய்தாற்குக் கொடுத்தல். இராக்கதமாவது, தலைமகள் தன்னினும் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது. பைசாசமாவது, களித்தார்மாட்டுந் துயின்றார்மாட்டுங் கூடுதல்.

"அறநிலை யொப்பே பொருள்கோ டெய்வம்
யாழோர் கூட்ட மரும்பொருள் வினையே
யிராக்கதம் பேய்நிலை யென்றிக் கூறிய
மறையோர் மன்றல் லெட்டவை யவற்றுட்
டுறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பினதன்
பொருண்மை யென்மனார் புலமை யோரே."

என்பதனானுங் கொள்க. துறையமை நல்யாழ்த் துணைமையோராவார் கந்திருவர். அவர் இருவராகித் திரிதலின் துணைமையோர் என்றார். [1]துணையன்பாவது அவர் ஒழுகலாறோடொத்து மக்கண்மாட்டு நிகழ்வது. ஈண்டுக் காமக்கூட்டமென வோதப்பட்டது மணவிகற்பமாகிய வெட்டனுள்ளுங் கந்திருவமென்றவாறு. மாலைசூட்டல் யாதனுள் அடங்குமெனின், அதுவும் ஒத்த அன்பினராய் நிகழ்தலிற் கந்திருவப் பாற்படும்.

அறனும் பொருளு மின்பமும் என்றது, இன்பமும் பொருளும் அறனும் என்றது என்னை [எனின்], பலவகை யுயிர்கட்குமவரும் இன்பம் இருவகைப்படும். அவை யாவன, போக நுகர்தலும் வீடுபெறுதலும் என. அவற்றுள் வீடுபேறு துறவறத்தினின்றார்க்கல்லது எய்தல் அரிதாயிற்று. போகநுகர்தல் மனையறத்தார்க் செய்துவது. அவரெய்தும் இன்பமும் அவ்வின்பத்திற்குக் காரணமாகிய பொருளும் அப்பொருட்குக் காரணமாகிய அறனும் எனக்காரிய காரணம் நோக்கிவைத்தார் என்க.

இதனாற் சொல்லியது ஈண்டுக்களவென்றோதப் படுகின்ற ஒழுக்கம் அறம்பயவாத புறநெறி யன்று; வேதவிதியாகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு. (க)

கூ௰. ஒன்றே வேறே யென்றிரு பால்வயி
னொன்றி யுயர்ந்த பால தாணையி
னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே.

என்—னின், இது காமக்கூட்டத்தின்கண் தலைமகனும் தலைமகளும் எதிர்ப்படுந்திறனும் அதற்குக் காரணமும் உணர்த்துதல் நுதலிற்று.

ஒன்றே வேறே என்றிருபால்வயின் என்பது—ஒருவனும் ஒருத்தியுமாக இல்லறஞ் செய்துழி, அவ்விருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேறாக்குதலுமாகிய இருவகை ஊழினும் என்றவாறு.

1. 'துணை ... யல்பாவது' என்றிருத்தல் வேண்டும் போலும்.

ஒன்றியுயர்ந்த பாலதாணையின் என்றது—இருவருள்ளமும் பிறப்புத்தோறும் ஒன்றி நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையின் என்றவாறு.

உயர்ந்ததன் மேற்செல்லும் மன நிகழ்ச்சி உயர்ந்த பாலாயிற்று. காமநிகழ்ச்சியின் கண் ஒத்த அன்பினராய்க் கூடுதல் நல்வினையான் அல்லது வாராதென்பது கருத்து.

ஒத்த கிழவனும் கிழத்தியுங் காண்ப என்பது:

ஒப்பு பத்துவகைப்படும். [அவை]

> "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
> டுருவு நிறுத்த காம வாயி
> னிறையே யருளே யுணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த வொப்பினது வகையே." [மெய்ப்-உடு]

என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துள் [கூறியபத்துமாம்.] [அவற்றுள்] பிறப்பாவது, அர்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர், குறவர், நுளையர் என்றாற் போல வருங் குலம். குடிமையாவது அக்குலத்தினுள்ளா ரெல்லாருஞ் சிறப்பாக ஒவ்வாமை யின் அச்சிறப்பாகிய ஒழுக்கம்பற்றிய [குடிவரவு.] குடிவரவைக் குடிமை என்றார்.

> " பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான்." [குறள்-கூஎஉ]

எனப் பிறரும் குலத்தின்கண்ணே சிறப்பென்பது ஒன்றுண்டென்று கூறினாராகலின். ஆண்மையாவது, ஆண்மைத்தன்மை. அஃதாவது, ஆள்வினையுடைமையும் வலி பெய ராமையுமாம்.

> "மொழியா ததனை முட்டின்றி முடித்தல்" [மரபியல்-௱எ]

என்பதனால் தலைமகள் மாட்டுப் பெண்மையும் கொள்ளப்படும். அது பெண்டிர்க்கு இயல் பாகிய நாணம் முதலாயினவும் பெண்ணீர்மையும். ஆண்டென்பது, ஒருவரி னொருவர் முதியரன்றி ஒத்த பருவத்தராதல். அது குழவிப்பருவங் கழிந்து பதினாறு பிராயத்தானும் பன்னிரண்டு பிராயத்தாளு மாதல். உரு என்பது வனப்பு. நிறுத்த காமவாயில் என்பது நிலைநிறுத்தப்பட்ட புணர்ச்சிக்கு வாயில். அஃதாவது, ஒருவர்மாட்டு ஒருவர்க்கு நிகழும் அன்பு. நிறை என்பது அடக்கம். அருள் என்பது பிறர் வருத்தத்திற்குப் பரியும் கருணை. உணர் வென்பது அறிவு. திரு என்பது செல்வம். இப்பத்து வகையும் ஒத்த கிழவனும் கிழத்தியும் எதிர்ப்படுவர் எனக் கொள்க.

மிக்கோ ... யின்றே என்பது—இக்குணங்களால் தலைமகன் மிக்கானாயினுங் கடியப்படாது என்றவாறு.

எனவே, இவற்றுள் யாதானும் ஒன்றினாயினும் தலைமகள் மிக்காளாயின் ஐந்திணை யிற் கடியப்படும் என்றவாறும்.

பாலதாணையிற் ... காண்ப என்பது—ஒருவரை யொருவர் கண்டுழியெல்லாம் புணர்ச்சி வேட்கை தோற்றுமையிற் பாலதாணையான் ஒருவரையொருவர் புணர்தற்குறிப் பொடு காண்ப என்றவாறு. மிக்கோனாயினும் என்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. எற்றுக்கு, எதிர்மறையாக்கி 'இழிந்தோனாயினும் கடியப்படாது' என்றாற் குற்றமென்னை யெனின், செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணிவருகின்ற பெருமை யாதலின், இழிந்தா னொடு உயர்ந்தாட்குளதாகிய கூட்டமின்மை பெருவழக்காதலின் அது பொருளாகக் கொள்ளாம் என்பது. ஈண்டுக் கிழவனும் கிழத்தியும் என ஒருவனு மொருத்தியும் போலக் கூறினாராயினும்,

"ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப." [பொருளியல்-உ௭]

என்பதனானும், இந்நூல் உலகவழக்கே நோக்குதலானும் அவர் பலவகைப்படுவர். அஃதா மாறு அந்தணர் அரசர் வணிகர் வினைஞர் என்னும் நால்வரொடும் அநுலோமர் அறுவரை யும் கூட்டப் பதின்மராவார். இவரை நால்வகை நிலத்தோடு உறழ நாற்பதின்மராவர். 1இவரையும் அவ்வந்நிலத்திற் குரிய ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னுந் தொடக்கத் தாரோடு கூட்டப் பலராவர். அவரையும் உயிர்ப்பன்மையான் நோக்க வரம்பிலராவர். (உ)

௯௧. சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப
இழிந்துழி யிழிபே சுட்ட லான.

என்—னின், ஐயம் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

ஒருவன் ஒருத்தியைக் கண்ணுற்றுழி அவ்விருவகையும் உயர்வுடையராயின் அவ் விடத்து ஐயம் சிறந்தது என்று சொல்லுவர். அவர் இழிபுடையராயின், அவ்விடத்து அவள் [இழி] பினையே சுட்டி யுணர்தலான் என்றவாறு. சிறப்பு என்பது மிகுதி. ஐயமிகுதலா வது மக்களுள்ளாள் அல்லள் தெய்வமோ என மேலாயினரோடே ஐயுறுதல். சிறந்துழி என்பதற்குத் தலைமகள்தான் சிறந்துழியும் கொள்ளப்படும்; அவளைக் கண்டவிடம் ஐயப்படு தற்குச் சிறந்துழியும் கொள்ளப்படும். உருவமிகுதியுடையளாதலின் ஆயத்தாரிடைக் காணி னும் தெய்வம் என்று ஐயுறுதல். இதனாற் சொல்லியது உலகத்துத் தலைமகனும் தலைமக ளுமாக நம்மால் வேண்டப்பட்டார் அந்தணர் முதலாகிய நான்கு வருணத்தினும் ஆயர் வேட்டுவர் குறவர் பரதவர் என்னும் தொடக்கத்தினும் அக்குலத்தாராகிய குறுநில மன் னர் மாட்டும் உளராவரன்றே; அவரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடிவா னும் உயர்ந்த தலைமகனும் தலைமகளு [மாயினோர்] மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டும் அவ் விழிமரபினையே சுட்டியுணராநிற்குமாதலான் என்றவாறு.

'காரரப் பெய்த' என்னும் முல்லைக் கலியுள் [கலித்-௱௧]

"மண்ணுத் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணிலார் புண்ணுக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ வாயர் மகள்."

என ஐயமின்றிச் சுட்டியுணர்ந்தவாறு காண்க.

இனி உயர்புள்வழி ஐயம் நிகழுமாறு:

"உயர்மொழிக் கிளவி யுறழுங் கிளவி
யையக் கிளவி யாடூஉவிற் குரித்தே." [பொருளியல்-௩௩]

என்றாராகலின், ஐயப்படுவான் தலைமகன் என்று கொள்க. தலைமகள் ஐயப்படாத தென்னையெனின், அவள் ஐயப்படுங்கால் தெய்வமோ வென்று ஐயுறல் வேண்டும். அவ்வாறு ஐயுற்றால் அச்சம் வரும். அது ஏதுவாகக் காம நிகழ்ச்சி யுண்டாகாது. (௩)

௯௨. வண்டே யிழையே வள்ளி பூவே
கண்ணே யலமர லிமைப்பே யச்சமென்
றன்னவை பிறவு மாங்க ணிகழ
நின்றவை களையுங் கருவி யென்ப.

என்—னின், ஐயப்பட்டான் துணிதற்குக் கருவி உணர்த்துதல் நுதலிற்று.

எண்ணப்பட்ட வண்டு முதலாகிய எட்டும் 2பிறவுமாகி அவ்விடத்து நிகழாநின்ற ஐயம் களையும் கருவி என்றவாறு.

---

1. 'இவரொடும்' என்பது பிரதி. 2. 'பிறவுமாம்' என்றிருத்தல் வேண்டும்.

ஐயமென்பது அதிகாரத்தான்வந்தது. 'நிகழா நின்றவை' என்பது குறுகின்றது. வண்டாவது, மயிரின் அணிந்த பூவைச் சூழும் வண்டு. அது பயின்றதன் மேலல்லது செல்லாமையின் அதுவும் மக்களுள்ளாளென்றறிதற்குக் கருவியாயிற்று. இழையென்பது அணிகலன். அது செய்யப்பட்டதெனத் தோற்றுதலானும் தெய்வப்பூண் செய்யா அணியாதலானும் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. வள்ளி என்பது முலையினும் தோளினும் எழுதிய கொடி. அதுவும் உலகின் உள்ளதாகித் தோன்றுதலின் (அதுவும்) கருவியாயிற்று. அலமரல் என்பது தடுமாறுதல். தெய்வமாயின் நின்றவழி நிற்கும். அவ்வாறன்றி, நின்றுழி நிற்கின்றிலள் என்று சுழற்சியும் அறிதற்குக் கருவியாயிற்று. இமைப்பென்பது கண்ணிமைத்தல். தெய்வத்திற்குக் கண் இமையாமையின் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. அச்சமென்பது ஆண்மக்களைக்கண்டு அஞ்சுதல். அது தெய்வத்திற்கு இன்மையான் அதுவும் அறிதற்குக் கருவியாயிற்று. அன்னவை பிறவும் என்றதனுன் கானிலந்தோய்தல், வியர்த்தல், நிழலா[டு]தல் கொள்க. இவை கருவியாகத் துணியப்படும் என்றவாறு.

காட்சி முதலாகிய இத்துணையும் கைக்கிளைக் குறிப்பாம். இதற்குச்செய்யுள் வந்தவழிக்காண்க. இனிக் குறிப்பறிதல் கூறுகின்றாராகலின், அக்குறிப்பு நிகழும்வழி இவையெல்லாம் அகமாம். என்னை? இருவர்மாட்டு மொத்த நிகழ்ச்சி யாதலான். இவை தலைமகள் மாட்டுப் புலப்பட நிகழாது ஆண்டுக்குறிப்பினுற் சிறிது நிகழுமென்று கொள்க.

அவை வருமாறு:—

"உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று." [குறள்-௲கஅ]

எனவரும். பிறவும் அன்ன. (சு)

௯௫. நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.

என்—னின், மேல், தலைமகளை இத்தன்மையள் எனத் துணிந்த தலைமகன் குறிப்பறியாது சாரலுறின் பெருந்திணைப்பாற்படு மாகலானும், இக் களவொழுக்கம் ஒத்த உள்ளத்தாராதல் வேண்டுமாதலானும், ஆண்டு ஒருவரோடொருவர் சொல்லாடுதல் மரபன்மையானும், அவருள்ளக் கருத்தறிதல்வேண்டுதலின், அதற்குக் கருவியாய உணர்த்துதல் நுதலிற்று.

நாட்டமிரண்டும் என்பது—தலைமகன் கண்ணும் தலைமகள் கண்ணும் என்றவாறு. அறிவுடம்படுத்தற்கு என்பது—ஒருவர் வேட்கைபோல இருவர்க்கும் வேட்கை உளதாகுங்கொல்லோ எனக் கவர்த்து நின்ற இருவரது அறிவினையும் ஒருப்படுத்தற்கு என்றவாறு. கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும் என்பது—தமது வேட்கையொடு கூட்டி ஒருவர் ஒருவருக்கு உரைக்குங் காமக்குறிப்புரையாம் என்றவாறு.

இதன் பொழிப்பு:—இருவர்க்குங் கவர்த்து நின்ற அறிவை ஒருப்படுத்தற் பொருட்டு வேட்கையொடுகூட்டிக் கூறுங் காமக்குறிப்புச்சொல் இருவரது நாட்டமாகும் என்றவாறு.

ஆகும் என்பதனை நாட்டம் என்பதனொடு கூட்டியுரைக்க. இதற்குச்செய்யுள்:—

"பானலங் [1]தண்கழிப் பாடறிந்து தன்னையர்
நூனல நுண்வலையாற் கொண்டெடுத்த—கானற்
படுபுலால் காப்பாள் படைநெடுங்க ணோக்கங்
கடிபொல்லா வென்னையே காப்பு." [திணைமாலை-௩௨]

கண்ணினுன் அறிப என்றவாறு. (ரு)

1. 'தண்கழுநீர்' என்பது பிரதி.

௯௪. குறிப்பே குறித்தது கொள்ளு மாயி
ஞங்கவை நிகழு மென்மனா் புலவர்.

என்—னின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

ஒருவர்குறிப்பு ஒருவர் குறித்ததனைக் கொள்ளுமாயின், அவ்விடத்துக் கண்ணினான் வருங் குறிப்புரை நிகழும் என்றவாறு.

எனவே, குறிப்பைக் கொள்ளாதவழி அக்குறிப்புரை நிகழாது என்றவாறும். இத னாற்சொல்லியது கண்டகாலத்தே வேட்கை முந்துற்றவழியே இக்கண்ணினான் வருங் குறிப்பு நிகழ்வது: அல்லாதவழி நிகழாது என்றவாறு. இனிக் குறிப்பு நிகழுமாறும் அதன் வேறுபாடும் மெய்ப்பாட்டியலுள் கூறுப. ஈண்டும் சில உதாரணம் காட்டுதும்.

"நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்." [குறள்-௲௯௩]

எனவும்,

"அசையியற் குண்டாண்டோ ரேஎரியா ணோக்கப்
பசையினள் பைய நகும்." [குறள்-௲௯௮]

எனவும் வரும். பிறவு மன்ன. தலைமகன் குறிப்புத் தலைமகள் அறிந்தவழியும் கூற்று நிகழாது, பெண்மையான். (௯)

௯௫. பெருமையு முரனு மாடூஉ மேன.

என்—னின், இது தலைமகற்கு உரியதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

பெருமை யாவது—பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது—அறிவு.

இவை யிரண்டும் ஆண்மகனுக்கு இயல்பு என்றவாறு.

இதனானே மேற் சொல்லப்பட்ட தலைமகளது வேட்கைக்குறிப்புக் கண்ட தலை மகன், அந்நிலையே புணர்ச்சியை நினையாது, வரைந்து எய்துமென்பது பெறுதும்:

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு." [குறள்-௪௨௨]

என்பவாகலின். தலைமகன் இவ்வாறு கூறியதற்குச் செய்யுள்:—

"வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
மான்வென்ற மடநோக்கின் மயிலியலாற் றளர்பொல்கி
யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுங்
தெரிகல்லா விடையின்கட் கண்கவர் பொருங்கோட
வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி;

பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்கண்
ணேந்துகோட் டெழில்யானை [1]யொன்னுதார்க் கவன்வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ சின்மொழி;

1. யெண்ணுதார்க் (பி-ம்).

பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
[1]பிணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்;

வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேற்
றகையிணர் இளவேங்கை மலரன்ன சுணங்கினாய்
மதவலி கமழ்கடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை;

எனவாங்கு,

இனையன கூற விறைஞ்சுபு நிலநோக்கி
நினைகுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாளெ னறிவகப் படுத்தே." [கலித்-௫௭]

"உறுகழி மருங்கி னோதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற் கண்போன் மாமலர்ப்
பெருந்தண் மாத்தழை [2]யிருந்த வல்கு
லைய வரும்பிய சுணங்கின் வையெயிற்று
மையீ ரோதி வாணுதற் குறமகள்
விளையா டாயமொடு வெண்மண லுகுத்த
புன்னை நுண்டாது பொன்னி னொண்டு
மனைபுறந் தருதி யாயி னெனையதூஉ
மிம்மனைக் கிழமை [3]யெம்மொடு புணரிற்
றீது முண்டோ மாத ராயெனக்
கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென வியக்க
யாந்தற் குறுகின மாக வேந்தெழி
லரிவே யுண்கண் பனிவர லொடுக்கிச்
சிறிய விறைஞ்சின டலையே
பெரிய வெவ்வம் [4]யாமிவ ணுறவே." [அகம்-உ௩0]

இவை உள்ளப்புணர்ச்சியான் வரைதல் வேண்டிப் பாங்கற்கு [5]உரைத்தன. (எ)

௬௬. அச்சமும் நாணு மடனு முந்துறுத
னிச்சமும் பெண்பாற் குரிய வென்ப.

என்—னின், இது தலைமகட்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

அச்சமும் நாணும் பேதை[மை]யும் இம்மூன்றும் நாடோறு முந்துறுதல் பெண்டிர்க்கு இயல்பு என்றவாறு.

---

(பிரதி.)— 1. 'புணையமை யாய்மான்றே'. 2. 'யருந்த'. 3. 'யெவ்வமொடு'. 4. 'யாமினுறவே'. 5. 'உரைத்தது'.

எனவே, வேட்கையுற்றுழியும் அச்சத்தானுதல் நாணனுதல் மடத்தானுதல் புணர்ச்சிக்கு இசையாதுநின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது போந்தது. இவ்வாறு இருவரும் உள்ளப்புணர்ச்சியால்நின்று வரைந்தெய்தி மெய்யுறும். இதற்குச் செய்யுள்:—

“தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்
புல்வின[த் தாயர்] மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்று னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்த[1]றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்று னெல்லாநீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுவென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா[2]றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.” [கலித்-௱௧௧]

இது தலைமகள் உள்ளப்புணர்ச்சியின் உரிமைபூண்டிருந்தவாறும் வரைந்தெய்தக் கூறலுற்றவாறும் காண்க. (அ)

௬௭. வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

என்—னின், மெய்யுறுபுணர்ச்சி நிகழுங்காலம் உணர்த்துதல் நுதலிற்று.

மேல், “பெருமையு முரனு மாடூஉ மேன.” எனவும்,

“[3]அச்சமும் நாணு மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப.”

(பிரதி)— 1. ‘றகைபெருதகைஇய’. 2. ‘றியான் பெயர’. 3. ‘அச்சமு நாணும் பெண்பாலன’.

எனவும் ஓதியவதனுன் உள்ளஞ் சென்றவழியும் மெய்யுறுபுணர்ச்சி வரைந்தெய்தி நிகழ்ப வென்றாராம். அவ்வழிச் சாக்காடெல்லையாகிய மெய்ப்பாடுவரின் மெய்யுற்றுப் புணரப் பெறு மென்பது உணர்த்திற்று.

வேட்கைமுதலாகச் சாக்காடு ஈறாக ஓதப்பட்ட காமச்சிறப்புடையனவாற்றாற் களவு ஆமென்று சொல்லுவர் என்றவாறு.

ஆனும் ஆமும் எஞ்சி நின்றன. இவற்றை அவத்தையென்ப. அஃதேல், அவை[ப]த் துளவன்றே; ஈண்டுரைத்தன வெ[ா]ன்பதாலெனின், காட்சி விகற்பமுங் கூறினர், அஃது உட்படப் பத்தாம். காட்சி விகற்பமாகிய ஐயமுந் துணிவும் முதலது: வேட்கை இரண்டாவது: என்று கொள்க.

வேட்கை யாவது—பெறல்வேண்டு மென்னும் உள்ளநிகழ்ச்சி.

ஒருதலையுள்ளுத லாவது—இடைவிடாது நினைத்தல்.

"உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்
றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி
லார நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." [குறுந்-உஅசு]

மெலித லாவது—உண்ணாமையான் வருவது.

ஆக்கஞ்செப்ப லாவது—உறங்காமையும் உறுவவோதலும் முதலாயின கூறுதல்.

"ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்க
ணுரவுக்கட லொலித்திரை போல
விரவி னானுந் துயிலறி யேனே." [ஐங்குறு-௱எஉ]

எனவரும்.

நாணுவரையிறத்த லாவது—நாண் நீங்குதல்.

"காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு." [குறள்-௲உ௱எ]

நோக்குவ வெல்லாம் அவையே போற லாவது—தன்னாற் காணப்பட்டன வெல்லாந் தான் கண்ட உறுப்புப்போலுதல்.

"ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங்
காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு
மாந்தளிர் கையிற் றடவரு மாமயில்
பூம்பொழி னோக்கிப் புகுவன பின்செல்லுந்
தோளெனச் சென்று துளங்கொளி வேய்தொடு
நீள்கதுப் பிஃதென நீரற லுட்புகும்." என்றாற்போல்வன.

மறத்தல்—பித்தாதல். மயக்கமாவது—மோகித்தல். சாக்காடு—சாதல். இவற்றுள் சாதல் பத்தாம் அவத்தையாதலால் ஒழிந்த எட்டுங் களவு நிகழ்தற்குக் காரணமாம் என்று கொள்க. இது தலைமகட்கும் தலைமகற்கும் ஒக்கும். இவற்றிற்குச் செய்யுள் வந்த வழிக் காண்க. (௯)

௯௮. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்த
னன்னய முரைத்த னகைநனி யுறாஅ
வந்நிலை யறிதன் மெலிவுவிளக் குறுத்த
றன்னிலை யுரைத்த றெளிவகப் படுத்தலென்
றின்னவை நிகழு மென்மனார் புலவர்.

என்—னின், இஃது இயற்கைப் புணர்ச்சிக் குரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

தனியினால் தலைமகளை யெதிர்ப்பட்ட தலைமகன் தனது பெருமையும் அறிவும் நீக்கி வேட்கைமீதூரப் புணர்ச்சிவேண்டினானாயினும், தலைமகள்மாட்டு நிற்கும் அச்சமும் நாணும் மடனும் நீக்குதலும் [1]வேண்டுமென்றே. அவை நீக்குதற்பொருட்டு இவையெல்லாம் நிகழு மென்பது. உலகத்துள்ளா ரிலக்கணமெல்லாம் உரைக்கின்றா ராகலின், இவ்வாசிரியர் உரைக்கின்றவாற்றான் நிகழ்தல் பெரும்பான்மை யாகவும்,

"சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி" [தொல். களவியல்-௰௪]

என ஓதுதலின், இவையெல்லாம் நிகழ்தலின்றிச் சிறுபான்மை வேட்கைமிகுதியாற் புணர்ச்சி கடிதின் முடியவும் பெறுமெனவுங் கொள்க.

முன்னிலையாக்கல் என்பது—காமக்குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கை யாற் சாரநினைத்தவழித் தலைமகளும் வேட்கைக் குறிப்புடையா ளாயினும் குலத்தின் வழிவந்த இயற்கையன்மையான் நாணமும் அச்சமும் [2]மீதூர அக்குறிப்பில்லாதாரைப் போல் நின்றவழி அவளை முன்னிலையாகப் படுத்துச் சில கூறுதல்.

"ஒள்ளிழை மகளிரொ டோரையு மாடாய்
வள்ளிதழ் நெய்தற் றொடலையும் புரியாய்
விரிபூங் கான லொருசிறை நின்றோ
யாரை யோநிற் றொழுதனம் வினவுதுங்
கண்டார் தண்டா நலத்தை தெண்டிரைப்
பெருங்கடற் பரப்பி னமர்ந்துறை யணங்கோ
விருங்கழி மருங்கி னிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை யென்றனெ ன[த]னெதிர்
முள்ளெயிற்று முறுவலுந் திறந்தன
பல்லித ழுண்கணும் பரந்தவாற் பனியே." [நற்றிணை-௱௫௫]

சொல்வழிப் படுத்தலாவது—தான் சொல்லுகின்ற சொல்லின்வழி அவள் நிற்கு மாறு படுத்துக் கூறுதல்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
றிருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் [3]கைம்மிகிற் றாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்

(பிரதி)— 1. 'வேண்டுமென்றே'. 2. 'மீதூர நின்றார்'. 3. 'கைமிக்குற் றாத லெளிதோ'.

கண்ணே கதவ வல்ல நண்ணா
ரரண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே.” [நற்றிணை-௩௯]

நன்னய முரைத்த லாவது—தலைமகளினது நலத்தினை யுரைத்தல்.

“சேரன் மடவன்னஞ் சேரன்னடை யொவ்வாய்
சேரன் மடவன்னஞ் சேரன்னடை யொவ்வா
யூர்திரை வேலி யுழக்கித் திரிவாள்பின்
சேரன் மடவன்னஞ் சேரன்னடை யொவ்வாய்.”[சிலப்.கானல்-உ௩]

நகைநனியுறாஅ அந்நிலையறித லாவது—தலைமகன் தன் நன்னயமுரைத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வாற் புறந்தோன்றும் முறுவற் குறிப்பு மிக்குத்தோன்றா அந்நிலையினைத் தலைவன் அறிதல்.

“மாணிழை பேதை நாறிருங் கூந்த
லாணமு மில்லா ணீருறை சூருடைச்
சிலம்பிற் கணைங்காய் முயன்ற செறியிய
ளொதும ளேக்கைக் காண்மோ நெஞ்சே
வறிதான் முறுவற் கெழுமிய
நுடங்குமென் பணைவேய் சிறுகுடி யோளே.”

மெலிவு விளக்குறுத்த லாவது—தலைவன் அகத்துறும் நோயாற் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பான் எடுத்துக்கூறலும். உதாரணம் வந்துழிக் காண்க.

குறிப்பாவன புறத்துறுப்பா யவர்க்1இன்றியமைவன.

தன்னிலை யுரைத்த லாவது—அப் புறநிகழ்ச்சியின் பொலிவிழவைக் கண்ட தலைமகண்மாட்டுத் தலைவன் தன் உள்ள வேட்கை மீதூர்வினை நிலைப்படக்கூறுதல்.

“சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்”

என்னும் நற்றிணைப்பாட்டுள்,

“காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ
... ... ...
... ... கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல.” [நற்றிணை-௩௯]

எனத் தன்னிலை யுரைத்தவாறு காண்க.

தெளிவு அகப்படுத்த லாவது—தலைவன் முன்னிலையாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப் புணர்ச்சியினை விழைந்து நின்றானாக, அப்புணர்ச்சியினைக் கூறுவார், முன்னம் ஒத்தபண்புடைமை உள்ளத்து இருவர்மாட்டும் வேண்டுதலின் தலைமகள் பண்பினைத் தலைவன் அறிந்து அத்தெளிவை தன்னகப்படுத்துத் தேர்தல்.

“யாயும் யாயும் யாரா கியரோ”

என்னும் குறுந்தொகைப்பாட்டுள்,

“அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.” [குறுந் - ௪0]

என இயற்கைப் புணர்ச்சி முன்னர்த் தலைவன் தலைவியர் உள்ளம் ஒத்தபண்பினைக் கூறிய வாறு காண்க.

1. ‘இன்றியமையாதன’ என்றிருக்கவேண்டும் போலும்.

இதுகாறும் இயற்கைப் புணர்ச்சிக்குரிய திறன்கூறி, மேல் இயற்கைப்புணர்ச்சி நிகழுமாறு கூறுகின்றார். அஃதேல், தன்னிலை யுரைத்தலைத் தெளிவகப்படுத்தலுடன் இணைத்து மெய்யுறுபுணர்ச்சி யாக்கிய பின்னர்த் தோன்றுந் துறையாகப் படுத்த[ா]லோ எனின், அது சான்றோர் வழக்கின்றாதலானும், மெய்யுறுபுணர்ச்சி முன்,

"மெய்தொட்டுப் பயிறல்" [களவியல் - ௰௧]

முதலியன யாண்டும் நிகழ்ந்தே தலைவிக்கு மெய்யுறுபுணர்ச்சி நிகழுமாதலானும், அஃதன்றென்க.

௯௯. மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்ட
விடம்பெற்றுத் தழாஅ லிடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்ற முளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பி னிருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலு
நிற்பவை நினைஇ நிகழ்பவை யுரைப்பினுங்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினு
மூரும் பேருங் கெடுதியும் பிறவு
நீரிற் குறிப்பி னிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியுந் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலுந்
தண்டா திரப்பினு மற்றைய வழியுஞ்
சொல்லவட் சார்தலிற் புல்லிய வகையினு
மறிந்தோ ளயர்ப்பி னவ்வழி மருங்கிற்
கேடும் பீடுங் கூறலுந் தோழி
நீக்கலி னாகிய நிலைமையு நோக்கி
மடன்மா கூறு மிடனுமா ருண்டே.

என்—னின், களவிற் கூட்டம் நான்கினிடத்தும் தலைவன் கூற்று நிகழுமாறும், காதல்மிக்கு ஆற்றாமை கையிகப்பின் தலைவனும் இயலும் கூறுதல் நுதலிற்று.

மெய் தொட்டுப் பயிற லாவது—பெருமையும் உரனுமுடைய தலைமகன் தெளிவகப்படுத்தியது காரணமாகக் காதல் வெள்ளம் புரண்டோடத் தலைவியின் மெய்யைத் தீண்டிப் பயிறல்.

"தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட
வில்லுடை யிளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த
புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்
குருதியொடு பறித்த செங்கோல் வாளி
மாறுகண் டன்ன வுண்க
ணாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே." [குறுந் - ௨௭௨]

பொய் பாராட்டலாவது—தலைவியின் ஐம்பால் முதலிய கடைகுழன்று சிதைவின்றேனும் அஃதுற்றதாக மருங்குசென்று தொட்டான் ஓர்காரணம் பொய்யாகப்படைத்து உரைத்துப் பாராட்டல்.

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னைய
ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார
மிடர்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய்." [சிலப். கானல் - ௰எ]

இடம்பெற்றுத் தழாஅ லாவது—பொய்பாராட்டல் காரணமாத் தலைவிமாட்டு [1]அணிமையிடம் பெற்றுத் தழுவக்கூறல். உதாரணம்:

"கொல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியதளு
நல்யாணர் நின்னையர் கூட்டுண்டு— செல்வார்தா
மோரம்பி னுலெய்து போக்குவர்யான் போகாமை
யீரம்பி னுலெய்தா யின்று." [திணைமாலை - ௨௨]

இடையூறு கிளத்த லாவது—நாண்மடன் நிலைக்களனுக் கொண்ட தலைவி தன் அறிவு நலன் இழந்து ஒன்றும் அறியாது உயிர்த்தனள். அஃது ஒக்குமோ எனின், ஒக்கும். புதிதாய்ப்புக்கார், ஊற்றுணர்வு என்றும்பயிலாத தம் மெல்லியன்மெய்யிற் பட அறிவிழப்பினும் [2]உள் நெக்கு உயிர்க்கும் என்க. அதுபற்றிப் புலையன் தொடு தீம்பால் போல் காதல்கூரக் கொம்பானும் கொடியானும் சார்ந்தாளைத் தலைவன் இப்பொழுது இவ்வூற்றின்பிற்கு இடையூறாய் நின்மனத்தகத்து நிகழ்ந்தவை யாவென வினவுதலும்.

நீடுநினைந்திரங்க லாவது—இருவர் இயலும் ஒருங்கு இணைந்தும், தலைவி பெருநாணால், பால்வழி உறுகவென எண்ணி மாற்றமுங் குறியுங் காட்டாது கண்புதைப் பாளைத் தலைவன் புறமோச்சி நிற்கவும் ஆண்டும் கலக்கலாம் பொழுது கூடாமைக்கு நினைந்து இரங்கல்.

கூடுதலுறுத லாவது—இங்ஙனமாய்க் காட்சி நிகழ்வின் பின்னர்ப் புணர்ச்சி எய்தலும்.

இதுவரை இயற்கைப்புணர்ச்சியாம் காரணங்கூறி, கூடுதலுறுதலால் மெய்யுறு புணர்ச்சி கூறினர். இவற்றிற்குச் செய்யுள்:

"வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு." [குறள்-௲௱௮]

இது கூடலுறுதல். பிற வந்துழிக்காண்க.

சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி என்பது—இயற்கைப் புணர்ச்சிக்குக் களனாக மேற்கூறப்பட்டவற்றுடன் அவ் வின்பக் கிளைத்தலையும் விரைவாக ஒன்றுப் பெற்ற விடத்து.

இத்தெய்வப் புணர்ச்சிக்குப் பொருள் கூறுங்கால், பயிறல், பாராட்டல், தழாஅல், கிளத்தல், இரங்கல், உறுதல், நுகர்ச்சி, தேற்றம் என்று சொல்லப்பட்ட இருநான்கு கிளவியும் என எண்ணப்படுத்துக.

"மெய்தொட்டுப் பயிறல்" முதலாக் "கூடுதலுறுதல்"வரை இயற்கைப் புணர்ச்சிக்கே உரிய கூறி,

"சொல்லிய நுகர்ச்சி" முதல் "இருநான்கு கிளவி"வரை இடந்தலைப்பாடும் சேர்த்து உணர்த்தினர். அற்றாயின் நுகர்ச்சியும் தேற்றமும் இயற்கைப் புணர்ச்சியன்றோ, இடந்

(பிரதி)— 1. 'அணிமையிடம்'. 2. 'உண்நொக்கு'.

தலைப்பாடாமாறு என்னை யெனின், நன்று கடாயினாய். மெய்யுறுபுணர்ச்சியினைப் பால் கூட்டும் நெறிவழிப்பட்டுப் பெற்றார்க்கு மெய்தொட்டுப் பயிறல் முதல் அறு துறையே இன்றியமையாத் துறையாக, ஏனைய இரண்டும் இடந்தலைப்பாட்டிற்கும் சேர்ந்த துறையாகலின், பொதுப்பட இரண்டற்கும் நடுவே வைத்துச் செப்ப மாக்கினாரென்க. நுகர்ச்சியும் தேற்றமும் எனப் பிரித்துக்கூட்டுக.

தீராத் தேற்ற மாவது—இயற்கைப்புணர்ச்சியுடன் முடியாத தெளிவு.

"வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்" [குறள் - ௲௱௬]

இஃது இயற்கைப் புணர்ச்சித் துறையன்று; இடந்தலைப்பாட்டின்கண் தலைமகன் கூறியது: நுகர்ச்சி பெற்றது.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள." [குறள் - ௲௱௧]

என்பதோ எனின், இயற்கைப்புணர்ச்சிக்கண் நுகர்ச்சி யுற்றமை கூறிற்று என்க.

"எம்மணங் கினவே மகிழ்ந முன்றி
னனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன
வெக்கர் நண்ணய லெம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரோ டுற்ற சூளே." [குறுந் - ௫௩]

இஃது இயற்கைப்புணர்ச்சிப் பின்றை சொற்ற தீராத்தேற்றவுரை. "இன்னிசை யுருமொடு" என்னும் அகப்பாட்டுள்,

"நின்மார் படைதலி னினிதா கின்றே
நும்மில் புல்ம்பா னுள்ளுதொறு நலியும்" [அகம் . ௫௮]

என்றது இடந்தலைப்பாட்டில் நேர்ந்த தேற்றம்.

"பேராச் சிறப்பின்" எட்டு என்றல்

பேரும் சிறப்பின ஆறு என்றலை எடுத்தோத்தாற் காட்டி நின்றது.

இதுவரை இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும். மேல் 'வாயில்பெட்பினும்' என்னுமளவும் பாங்கற்கூட்டம்; மேல் தொடர்பவை தோழியிற் கூட்டம்.

---

௧௮ - ம். சூத்திர வுரையில் 'நன்னயமுரைத்தல்' என்பதன் கீழுள்ள 'சேரன் மட்வன்னம்' என்ற செய்யுளின் இறுதியடியிலிருந்து ௧௧-ம் சூத்திரவுரையில் 'பெற்றவழி மகிழ்ச்சியும்' என்பதன் கீழுள்ள 'நீங்கிற்றெறாஉம்' என்னும் செய்யுள் வரையும் காணும் பகுதி ஏட்டுப் பிரதியிற் காணப்பெறவில்லை; காலஞ்சென்ற த. மு. சொர்ணம்பிள்ளை யவர்களுடைய கடிதப் பிரதியில் மாத்திரம் இருந்தது; நச்சினார்க் கினியரது உரையினின்றும் எடுத்துச் சேர்க்கப்பட்டுளது எனக் கருதுதற்கு இடமுண்டு. இதன்பின்னர் 'ஒடுங்கீரோதி' என்பதிலிருந்து ௱-ம் சூத்திரவுரை முடியவுள்ள பகுதியிற் பெரும்பாலும் ஏட்டுப் பிரதியிற் பலவாறாகப் பிறழ்ந்து காணப்படுகின்றது. இது பொருட்டொடர்புநோக் கொருவாறு செப்பஞ் செய்யப் பெற்றுளது.

பெற்றவழி மகிழ்ச்சியும் என்பது—இடந்தலைப்பாட்டினை யொட்டி நிகழும் இன்பினைப் பெற்றவழி அகத்துத் தோற்றும் பெருமகிழ்வும்.

"நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்" [குறள் - ௲௱௪]

"ஒடுங்கி ரோதி யொண்ணுதற் குறுமக
ணறுந்தண் ணீர ளாரணங் கினளே
யினைய ளென்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
யணைமெல் லியல்யா முயங்குங் காலே." [குறுந் - ௭௰]

இவை புணர்ச்சியான் மகிழ்ந்ததற்குச் செய்யுட்கள்.

பிரிந்தவழிக் கலங்கலாவது—இவ்வாறு கூடின தலைமகள் பிரிந்தவழிக் கலக்கமுறுதலும் என்றவாறு.

"என்று மினிய ளாயினும் பிரித
லென்று மின்னா ளன்றே நெஞ்சம்
பனிமருந்து விளைக்கும் பரூஉக்க ணிளமுலைப்
படுசாந்து சிதைய முயங்குஞ்
சிறுகுடிக் கானவன் பெருமட மகளே."

எனவரும்.

1இத்துணையும் இடந்தலைப்பாடு. பெற்றவழி மகிழ்தலும் பிரிந்தவழிக் கலங்கலும் பாங்கற் கூட்டத்தினுந் தோழியிற் கூட்டத்தினும் நிகழும்.

நிற்பவைநினைஇ நிகழ்பவை யுரைப்பினும் என்பது—காமநுகர்ச்சி யொன்றனையும் நினையாது இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்குமென்று உட்கோடலும். 2நிற்பவை—இல்லற வினை.

"தேரோன் றெறுகதிர் மழுங்கினுந் திங்க
ளூரா வெம்மையொடு திசைநடுக் குறப்பினும்
பெயராப் பெற்றியிற் றிரியாச் சீர்சால்
குலத்திற் றிரியாக் கொள்கையுங் கொள்கையொடு
நலத்திற் றிரியா நாட்டமு முடையோய்
கண்டத னளவையிற் கலங்குதி யெனினிம்
மண்டிணி கிடக்கை மாநில
முண்டெனக் கருதி யுணரலன் யானே."

இது நிற்பவை நினைஇக் கழறியது.

---

1. இவ்விரண்டு துறையும் இடந்தலைப்பாட்டுக்கும் ஒக்குமன்றோ வெனின், பெற்றுழி மகிழ்தலும் பிரிந்துழிக்கலங்கலும் என்பன எந்நிலத்தார்க்கும் எவ்வொழுக்கினுக்கும் எற்குமாகலின் ஒக்குமேல், இடந்தலைப்பாட்டுக்கும் பாங்கற்கூட்டம் பாங்கியிற் கூட்டம் என்பனவற்றுக்கும் கொள்க (த. மு. சொ.). 2. இது தொடங்கி 'இது நிற்பவை நினைஇக் கழறியது' என்பது முடியவுள்ளது (த. மு. சொ.).

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நொண்டுகொளற் கரிதே." [குறுந் - ௫௮]

இது நிகழ்பவை உரைத்தது.

[1]குற்றங்காட்டியவாயிலாவது—தலைவன் மாட்டுச் சோர்வானும் காதல்மிகுதியானும் நேர்வுற்ற பழிபாவங்களை எடுத்துக்காட்டும் பாங்கன்.

**பெட்பினும்**—அத்தகைய பாங்கன் இவ்வியல் பண்டைப்பால்வழியது என எண்ணி இவ்வாறு தலைமகன் மறுத்தவழி அதற் குடன்படல். அவ்வழி, நின்னாற் காணப்பட்டாள் எவ்விடத்தாள்? எத்தன்மையாள்? எனப் பாங்கன் வினவுதலும், அதற்குத் தலைமகன் இடமும் உருவுங் கூறுதலும், அவ்வழிப் பாங்கன் சென்று காண்டலும், மீண்டு தலைமகற்கு அவள் நிலைமை கூறலு மெல்லாம் உளவாம். அவ்வழிப் பாங்கன் வினாதலும் தலைமகன் உரைத்தனவும் உளவாம். பாங்கன் வினயதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க. அவ்வழித் தலைமகன் உரைத்தற்குச் செய்யுள்:—

"எலுவ சிறாஅ ரேமமுறு நண்ப
புலவ தோழ கேளா யத்தை
மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குந் திருநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே" [குறுந் - ௱௨௯]

"கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க
வாடுமக ணடந்த கொடும்புரி நோன்கயிற்
றதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துயவுத்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
[2]கழைக்க ணிரும்பொறை யேறி விசைத்தெழுந்து
குறக்குறு மாக்க டாளங் [3]கொட்டுமக்
குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
விடுத்தற் காகாது பிணித்தவென் னெஞ்சே." [நற்றிணை - ௯௫]

இன்னும் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் வரைந்தெய்தல் வேண்டிக் கூறினவுங் கொள்க.

"முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய குரல கிழக்குவீழ்ந் தனவே
[4]செறிநிறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே [5]யணங்குதற்

(பிரதி)— 1. இது தொடங்கி 'பண்டைப் பால்வழியது என எண்ணித்' என்பது முடியவுள்ளது (த.மு.செள.). 2. பறைக்க ணிரும்பொறை யேறி நின்று. 3. கொட்டுங். 4. செறிமுறை. 5. யணங்கெனதா.

கியான்றன் னறிவல் தானறி யலளே
யாங்கா குவள்கொ றோனே
பெருமுது செல்வ னொருமட மகளே." [குறுந் - ௩௩௭]

[இது பாங்கன் நின்னை அணங்காக்கியாள் எவ்விடத்தவள் எவ்வியலின ளென்று வினாய் அறிந்தது.]

இவ்வாறு கேட்டபாங்கன் அவ்வழிச் சென்று கண்டதற்குச் செய்யுள்:—

"இரவி னானு மின்றுயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
[1]தண்ணறு நெய்த னாறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே." [ஐங்குறு - ௱௭௩]

எனவரும்.

இச்சூத்திரத்துட் கூற்று [2]வரையறுத்துணர்த்தாமை பாங்கற் கூற்றும் அடங்கற்குப் போலும்.

**பெட்ட வாயில்பெற் றிரவு வலியுறுப்பினும்** என்பது—மேற்சொல்லிய வாற்றான் உடம்பட்ட பாங்கனால் தலைமகளைப் பெற்றுப் பின்னும் வரைந்தெய்த லாற்றாது களவிற் புணர்ச்சி வேண்டித் தோழியை இரந்துபின்னின்று கூட்டக் கூடுவன் என்னும் உள்ளத்தனாய் அவ்விரத்தலை வலியுறுத்தினும் என்றவாறு.

வலியுறுத்தலாவது, தான் வழிமொழிந்து யாது தான் அவ்வாறு செய்குவல் என்றமை.

பெட்டவாயிலால் தலைமகளைக் கண்டு கூறியதற்குச் செய்யுள்:—

"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னையர்
உடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயும்
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்
மிடல்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய்." [சிலப். கானல்-௰௭]

இன்னும், பெட்டவாயில் பெற்று என்பதற்கு இரட்டுற மொழிதல் என்பதனால் தலைமகள்தான் விரும்பப்பட்ட தோழியாகி எமக்கு வாயில் நேர்வாள் இவள் எனப்பெற்றுப் பின்னிரந்து குறையுற நினைப்பினும் என்றுமாம். அதற்குச் செய்யுள்:

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளுங்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகி
னாண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டளிதலைத் தலைஇய தளிரன் னோளே." [குறுந் - ௨௱௨௨]

இரவு வலியுறுத்தற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

"கொண்டன் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ரைம்பாற் றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்

---

(பிரதி)— 1. தண்ணுறு. 2. வரையாதோதிற்றுப்.

பெருங்கண் ணுய மூவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கு நிலவுமணன் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
யருளினு மருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியன்மா நெஞ்சே யென்னதூஉ
மருந்துய ரவலந் தீர்க்கு
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே." [நற்றிணை - ௧௪௰]

என்னும் பாட்டும் ஆம்.

இத்துணையும் பாங்கற்கூட்டம்.

**ஊரும் ... ... பகுதியும்** என்பது—ஊராயினும் பேராயினுங் கெடுதியாயினும் பிறவாயினும் நீர்மையினால் தன்குறிப்புத் தோன்றக் கூறித் தலைமகன் தோழியைக் குறை யுறும் பகுதியு முண்டு என்றவாறு. அவற்றுள் ஊர்வினயதற்குச் செய்யுள்:—

"அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்குங் [1]கொழுஞ்சுளைப் பெரும்பழங்
குழவிச் சேதா மாந்தி யயலது
வேய்பயி லிறும்பி னுமறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்
சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென வெழுந்த
செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்
கொய்புனங் காவலு நுமதோ
கோடேந் தல்கு னீடோ ளீரே." [நற்றிணை - ௨௱௰௩]

பெயர் வினயதற்குச் செய்யுள் வந்தவழிக்கண்டுகொள்க. கெடுதிவினயதற்குச் செய்யுள்:—

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்—பிறையெதிர்ந்த
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன் வீண்டு." [திணைமாலை-௧.]

"[2]இல்லுடைக் கிழமை யெம்மொடு புணரிற்
றீது முண்டோ மாத ரீரே."

என்றது பிறவாறு வினயது. பிறவுமன்ன.

**தோழிதுறை ... மிடனுமாநுண்டே** என்பது—தோழி குறையைத் தலைமகளைச் சார்த்தி மெய்யுறக் கூறுதலும், அமையாதிரப்பினும், மற்றையவழியும், சொல்லவட் சார்த்த லிற் புல்லிய வகையினும், அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடுங் கூறுதலின் நீக்கலினகிய நிலைமையும் நோக்கி மடன்மா கூறுதலு முண்டு தலைமகன்கண் என்றவாறு.

தலைமகன்கண் என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது. உம்மையாற் பிறகூறுதலு முண்டென்றவாறு. புணர்ச்சி நிமித்தமாகத் தலைமகன் இரத்தலுங் குறையுறுதலும் மடலேறுவல் எனக்கூறுதலும் பெறுமென்றவாறு. ஈண்டு, **தலையவட் சார்த்திமெய்**

(பிரதி)— 1. கொடுஞ்சினைப். 2. இது தொடங்கி 'பிறவுமன்ன' என்பது முடிய வுள்ளது (த. மு. சொ.)

யுறக் கூறல் என்றது—தோழிகூற்றுள் அருமையி னகற்சி யென்று ஓதப்பட்டது. தண்டாதிரத்த லாவது—தலைமகன் பலகாலுஞ் சென்று இரத்தல். மற்றையவழி என்பது— பின்வரவென்றல் முதலாயின. சொல்லவட்சார்த்தலிற் புல்லியவகை என்பது—முன்னுறு புணர்ச்சிமுறைநிறுத் துணர்த்தலென ஓதப்பட்டது. அறிந்தோ ளயிர்ப் பென்பது—பேதைமை யூட்டல் என ஓதப்பட்டது. கேடு கூறுதலாவது—உலகுரைத்தொழிப்பினும் என ஓதப்பட்டது. பீடு கூறுதலாவது—பெருமையிற் பெயர்ப் பினும் என ஓதப்பட்டது. நீக்கலினாகிய நிலையை என்பது— அஞ்சி யச்சுறுத்த லென ஓதப்பட்டது. இவையெல்லாந் தோழி கூற்றினுட் காணப்படும்.

தோழியைக் குறையுறும் பகுதிவருமாறு:—

"தோளுங் கூந்தலும் பலபாராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் றொண்டி யன்னவெற்
கண்டு மயங்கிநீ நல்காக் காலே" [ஐங்குறு - ௱௭௮]

இனி மடலேறுவல் என்பதற்குச் செய்யுள்:

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே." [குறுந் - ௰௭]

அவ்வழித் தலைமகன் கூறிய சொற் கேட்டு, இஃது அறிவும் அருளும் நாணமு முடையார் செய்யார் எனக் கூறியவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்:—

"நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்." [குறள் - ௲௱௩௩]

[எனவும்,]

"அறிவிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு." [குறள் - ௲௱௩௯]

[எனவும் வரும்.] பிறவு மன்ன. மடன்மா கூறுது பிறகூறியதற்குச் செய்யுள்:—

"பனைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவ
ளுருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில் காப்போ ரறிதலு [1]மறியார்
முறையுடை யரசன் செங்கோல் வையத்
தியான்றற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
வளிதோ தானேயிவ் வழுங்க லூரே." [குறுந் - ௨௭௬]

இவ்வாறு இரந்து பின்னிற்றலும் மடலேறுவல் என்றலும் கைக்கிளைபெருந்திணைப் பாற் படுமோ எனின், அவ்வாறு வருவன அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாமாறு வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். (௰௧)

(பிரதி)— 1. மறியாது.

௱. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினு
மன்புற்று நகினு மவட்பெற்று மலியினு
மாற்றிடை யுறுதலு மவ்வினைக் கியல்பே.

என்—னின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

மேல் தலைமகன் 'மடன்மா கூறு மிடனுமா ருண்டே' என்றார். இஃது அவன் மடன்மா கூறுதற்கு நிமித்தமாகிய நீக்கத்தினை மாறுபட்டுக் கூறுந் தலைமகள் இயல்பைக் கூறிப்பெயர்ப்பினும், அஃதறிந்து தா முடன்படத் தலைமகன் வருத்தத்தினான் மெலிகின்றமை கூறிய விடத்தினும், தலைமகன் குறையை மறுப்புழி அன்பு தோன்ற [நக்க இடத்தும்,] தோழி உடன்பாடுற்றவழியும், தலைமகனும் மேற் சொல்லப்பட்ட மடன்மா கூறுதல் இடையூறு படுதலும் தோழியிற் கூட்டத்திற்கு இயல்பு என்றவாறு.

உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

பண்பிற் பெயர்ப்பினும்—தலைமகள் இளமைப்பண்பு கூறிப் பெயர்த்தவழித் தலைமகன் கூறியது. அதற்குச் செய்யுள்:—

"குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவா ளெயிற்ற
ளிளைய ளாயினு மாரணங் கினளே." [ஐங்குறு - உ௫௬]

பரிவுற்று மெலியினும்—[பரிந்த வுள்ளத்துடன் மெலிதலுறுதலும்.] பரிவுற்றுத் தோழி மெலிதலாவது 'உடம்படுவளியாள்' என்றாற்போல வருவது. அவ்வழித் தலைமகன் கூற்று:—

"தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்." [குறள் - ௲௱௩௫]

அன்புற்று நகினும்—[அன்பு தோன்றும் உள்ளத்துடன் நக்ககாலும் கூற்று நிகழும்.] அன்புற்று நக்கவழித் தலைமகன் கூறியதற்குச் செய்யுள்:—

"நயனின் மையிற் பயனிது வென்னாது
பூம்பொறிப் பொலிந்த வழலுமி ழகன்பைப்
பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது
தகாஅது வாழியோ குறுமக ணகாஅ
துரைமதி யுடையுமென் னுள்ளஞ் சாரற்
கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த [1]வாயிழை மழைக்க
ணுறாஅ நோக்க முற்றவென்
பைத னெஞ்ச முய்யு மாறே." [நற்றிணை - எ௫]

அவட்பெற்று மலியினும்—தோழி உடம்பாட்டினைப் பெற்று மகிழல். இரட்டுற மொழிதலான் தலைமகளை இருவகைக்குறியினும் பெற்றுமகிழினும் என்றும் கொள்க. உதாரணம்:—

(பிரதி)— 1. மாயிதழ். 2. இது தொடங்கி 'இது அவட் பெற்று மலியுந் தலைவன் கூற்று' என்பது முடியவுள்ளது (த. மு. சொ.).

"எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ளண்ணுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே." [ஐங்குறு - ௱௭௫]

இது அவட்பெற்று மலியுந் தலைவன் கூற்று.

இனி, உள்ளப் புணர்ச்சியா னின்றி யியற்கை யிடையீடுபட்டுழி, பின் தலைமகள் குறியிடங் கூறியவழி யதனைப் பாங்கற் குரைத்தற்குச் செய்யுள்:—

"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின ணுணங்கிழைப்
பொங்கரி பரந்த வுண்க
ணங்கலிழ் மேனி யசைஇய வெமக்கே." [ஐங்குறு - ௱௭௪]

எனவுஞ் சிறுபான்மை வரும்.

"[1]காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று." [குறள் - ௲௱௰௪]

இது தலைவியைப் பகற்குறிக்கண்பெற்று மலிதல்.

"மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்." [குறள் - ௲௱௰௬]

இஃது இரவுக்குறிக்கண் தலைவன் அவட்பெற்று மலிந்தது.

"மாதர் முகம்போ லொளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி." [குறள் - ௲௱௰௮]

என்பதும் அது.

ஆற்றிடை உறுதலும்—தான்சேறும் ஆற்றிடை இடையூறு உண்டாய விடத்தும் கூற்று நிகழும். இரட்டுறமொழிவான் வரைவிடைவைத்துப் பிரிந்தான் தான் சேறும் ஆற்றின்கண் வருத்தமுற்றுக் கூறலும் கொள்ளப்படும்.

"குருதி வேட்கை யுருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கு
மரம்பயில் சோலை மலியப் பூழிய
ருருவத் துருவி னண்மேய லாரு
மாரி யெண்கின் மலைச்சுர நீளிடை
நீநயந்து வருத லெவனெனப் பலபுலந்
தழுதனை யுறைய மம்மா வரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்
னாய்நல முள்ளி வரினெமக்
கேம மாகு மலைமுத லாறே." [நற்றிணை - ௱௯௨]

இந் நற்றிணைப்பாட்டு தலைவி ஆற்றினது அருமை செப்பத் தலைவன் செப்பியது.

"ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
றூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்

(பிரதி)— 1. இது தொடங்கி சூத்திரவுரையின் இறுதிவரையுள்ளது (த. மு. சொ.).

கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே.” [குறுந் - ௨௩௫]

இக் குறுந்தொகைப் பாட்டு தலைவன் வரைவிடைவைத்துச் சேறுவான் கூறியது. (௰௨)

௩௧. பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப.

என்—னின், பலவகை மணத்திற் பாங்கராயினர் துணையாகுமிடம் இத்துணையென வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

பாங்கராயினர் துணையாகக் கூடும் கூட்டம் பன்னிரண்டு வகை யென்றவாறு.

நிமித்தம் என்பது நிமித்தமாகக்கூடும் கூட்டம். அக் [1]கூட்டம் நிமித்தமென ஆகுபெயராய் நின்றது. பாங்கராற் கூட்டம் பாங்கர்நிமித்த மென வேற்றுமைத் தொகையாயிற்று. அவையாவன:—பிரமம் முதலிய நான்கும், கந்திருவப்பகுதியாகிய களவும், உடன்போக்கும், அதன்கண் கற்பின் பகுதியாகிய இற்கிழத்தியும், காமக்கிழத்தியும், காதற்பரத்தையும், அசுரம் முதலாகிய மூன்றுமென இவை. (௰௩)

௩௨. முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே.

என்—னின், மேற்சொல்லப்பட்ட பன்னிருவகையினும் கைக்கிளைப்பாற்படுவன வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

எண்வகைமணத்தினுள்ளு முன்னையவாகிய அசுரம் முதல் மூன்றும் கைக்கிளைப் பாற்படும் என்றவாறு. (௰௪)

௩௩. பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.

என்—னின், மேற்சொல்லப்பட்டவற்றுள் பெருந்திணைக்குரியன வுணர்த்துதல் நுதலிற்று.

எண்வகை மணத்தினுள்ளும் பிரமம் முதலிய நான்கும் பெருந்திணைப் பாற்படும் என்றவாறு. (௰௫)

௩௪. முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பி னைந்நிலம் பெறுமே.

என்—னின், மேற்சொல்லப்பட்ட ஒருதலைக்காமமும் பொருந்தாக்காமமு மன்றி, ஒத்த அன்பின் வருங் கூட்ட முணர்த்துதல் நுதலிற்று.

முதல் என்பது நிலமும் காலமும். நிலத்தொடும் காலத்தொடும் பொருந்திய கந்திருவர் பாற்பட்டன [கெடுதலில்லாத சிறப்பினை யுடைய] ஐந்துவகைப்படும் என்றவாறு.

முதலொடு புணர்ந்த வென்றாரேனும் ‘வந்தது கண்டு வாராதது முடித்தல்’ [மரபியல் - ௱எ] என்பதனால் ஒழிந்த கருப்பொருளும் உரிப்பொருளும் கொள்ளப்படும். நிலம் என்பது இடம். இதனாற் சொல்லியது, ஒத்தகாமமாகிக் கருப்பொருளோடும் புணர்ந்த கந்திருவநெறி இடவகையான் ஐந்துவகைப்படும் என்றவாறு. அவையாவன: களவும், உடன்போக்கும், இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தையும் எனச் சொல்லப்பட்ட ஐவகைக் கூட்டம்.

(பிரதி)— 1. கூட்டநிமித்தம்.

இச்சொல்லப்பட்ட பன்னிருவகைப்பட்ட கூட்டத்திற்கும் பாங்கராயினர் நிமித்த மாகவேண்டுதலின், அவற்றுள் தலைவற்கும் தலைவிக்கும் ஒத்தகாத லுள்வழிப் பாங்கராயின ர[ால்] நிகழும் நிகழ்ச்சி கந்திருவப்பகுதியாகவும், ஒருதலைவேட்கை யாகியவழி இவரால் வரும் நிகழ்ச்சி கைக்கிளையாகவும், ஒப்பில்கூட்ட மாகியவழிப் பெருந்திணையாகவும் கொள்க. ஐந்நிலம் என்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின வென்றார் உளராலெனின், 'முத லொடு புணர்ந்த' என்பதனால் நிலம்பெற மாதலான் நிலம் என்பதற்கு வேறுபொருள் உரைத்தல் வேண்டுமென்க. அஃது அற்றாக, இற்கிழத்தி, காமக்கிழத்தி என்பார் உள்ளப் புணர்ச்சியானாதல் மெய்யுறு புணர்ச்சியானாதல் வரையப்பட்டாராகப் பொருட்பெண்டி ராகிய காதற்பரத்தையர் கூட்டம் ஒத்தகாமமாகியவா றென்னை யெனின், அவரும் பொரு ளானாதல், அச்சத்தானாத லன்றி அன்பினாற் கூடுதலின் அதுவுங் கந்திருவப் பாற் படும். அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுவராயின் இவன்மாட்டுத் தலைமை இன்றாமென்பது உணர்ந்து கொள்க. அஃதாமாறு:

"அன்னை கடுஞ்சொ லறியாதாய் போலநீ
யென்னைப் புலப்ப தொறுக்குவென் மன்யான்
சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
வவ்வழி யென்றும்யான் காணேன் றிரிதர
வெவ்வழிப் பட்டாய் சமனாக விவ்வெள்ளல்" [கலித் - சுஎ]

எனவும், "கண்டேனின் மாயங் களவாதல்" என்னுங் கலியுள்,

"நோயும் வடுவுங் கரந்து மகிழ்செருக்கிப்
பாடுபெய னின்ற பாணா ளிரவிற்
றொடிபொலி தோளு முலையுங் கதுப்புங்
வடிவார் குழையு மிழையும் பொறையா
வொடிவது போலு நுசுப்போ [ட]டிதளரா
வாராக் க[வ]வினொ டொருத்திவந் தல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்த தமையுமோ" [கலித் - கூஎ]

எனவும், பரத்தையர் அன்பினாற் கூறியவாறும் இவர் இற்கிழத்தியும் காமக்கிழத்தி யும் அன்மையும் அறிந்து கொள்க. இவ்வகை வருவன ஐந்து நிலனாய் [1]வரும். அஃதேல், மருதக்கலியுள்,

"அடக்கமில் போழ்தின்கட் டந்தை காமுற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்கான்" [கலித் - அஉ]

எனவும்,

'வழிமுறைத்தாய்' எனவும், 'புதியோள்' எனவும், இவ்வாறு கூறக் கேட்கின்ற காமக்கிழத்தியு மென மனைவியர் நால்வருளர். அவரெல்லாரையும் கூறாது மனைக்கிழத்தி யர் இருவர் என்றதனாற் பயன் இன்றெனின், அவரெல்லாரும் இற்கிழத்தியும் காமக்கிழத் தியு மென [இரண்டு பகுப்பினுள்] அடங்குப. அன்றியும், இவர் நால்வரொடு பரத்தை யுட்பட ஐவர் கந்திருவப்பகுதியர் என உரைப்பினும் அமையும்.

---

1. இதன்பின் 'புணர்ச்சி நிமித்தமாகத் தலைமகனிரத்தலும், குறையுறுதலும், மடலேறுவலெனக் கூறுதலும் பெறும் என்றவாறு' எனப் பிரதியிற் காணப்படுகிறது. பொருட்டொடர்பு நோக்கி இவ் வாக்கியம் ௱டுஎ-ம் பக்கத்திறுதியிற் சேர்க்கப்பட்டுளது.

'பரத்தை வாயில் நால்வர்க்கு முரித்தே' [பொருளியல் - உக]

என ஓதுதலானும், தலைவற்குப் பிரமம் [முதல]ாக வரும் நான்கு வருணத்துப் பெண்பாலாரும் பரத்தையும் என ஐவகைப்படுமென்பதூஉம் ஒன்றெனக் கொள்க. (மிசு)

௱ரு. இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்துங்
காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினுந்
தானகம் புகாஅன் பெயர்த லின்மையிற்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளா ணெதிரும் விருப்பின் கண்ணுந்
தாளா ணெதிரும் பிரிவி னானு
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய வெதிரும்
வரைவுடம் படுதலு மாங்கதன் புறத்தும்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோன் மேன வென்மனார் புலவர்.

இது, தோழியிற் கூடிய தலைமகன் வரைந்தெய்துங்காறும் [கூறும்] பொருண்மை யுணர்த்துதல் நுதலிற்று.

இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்தும் என்பது—பகற்குறியும் இரவிற்குறியும் பிழைப்பாகிய இடத்தும் என்றவாறு. பகற்குறி யிரவிற்குறியென்பது எற்றாற்பெறுதுமெனின்,

"குறியெனப் படுவ திரவினும் பகலினும்
அறியக் கிளந்த வாற்ற தென்ப." [களவியல் - சஎ]

என்பதனாற் கொள்க. அக்குறிக்கண் தலைவி வரவு பிழைத்தவிடத்துத் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு.

"மழைவர வறியா மஞ்ஞை யாலு
மடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி
தானெம் மருளா ளாயினும்
யாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே." [ஐங்குறு - உகஅ]

இது, குறிபிழைத்தவழித் தோழிக்குச் சொல்லியது.

"இல்லோ னின்பங் காமுற் றாஅங்
கரிது வேட்டனையா னெஞ்சே காதலி
நல்லா ளாகுத லறிந்தாங்
கரியா ளாகுத லறியா தோயே." [குறுந்-௱உ0]

[இது, குறிபிழைத்தவழி] உள்ளத்திற்குச் சொல்லியது.

காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினும் என்பது—தலைமகளைக் காணா வகையிற் பொழுது மிகவுங் கடப்பினுங் கூற்று நிகழும் என்றவாறு. செய்யுள்:

"உள்ளிக் காண்பென் போல்வல் முள்ளெயிற்
றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி
லார நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." [குறுந் - உ௮௬]

எனவரும்.

தானகம்புகாஅன் பெயர்த லின்மையிற்...பொழுதினும் என்பது —காணாவகையிற் பொழுது மிகக்கழிந்துழிக் காட்சி யாசையினுற் குறியிடத்துச் சென்று ஆண்டுக் காணாது கலங்கி வேட்கையான் மயக்கமுற்றுச் செயலற்று நிற்குங் காலத்தினுங் கூற்று நிகழும் என்றவாறு.

புகான் என்பது முற்று வாய்பாட்டான் வந்த வினை யெச்சம். செய்யுள் வந்தவழிக் காண்க.

புகாஅக் காலை புக்கெதிர்ப் பட்டுழிப்...கண்ணும் என்பது—தான் புகுதற்குத் தகுதியில்லாத காலத்துக்கண் அகம்புக்கெதிர்ப்பட்டுழி அவரால் நீக்கப்படாத விருந்தின் பகுதிய னாகியவழியும் கூற்று நிகழும் என்றவாறு. செய்யுள்:

"இரண்டறி களவினங் காத லோளே
முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கா[ன]ம் நண்ணுற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
யமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே." [குறுந் - ௩௱௰௨]

எனவரும்.

வேளா ணெதிரும் விருப்பின் கண்ணும் என்பது—தலைவி உபகாரம் எதிர்ப்பட்ட விருப்பின்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

அது குறிவழிக்கண்டு கூறுதல். அவ்வழித் தலைவிக்குக் கூறிய செய்யுள்:—

"சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன
நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோட்
டோகை மாட்சிய மடந்தை
நீயல துளரோவென் னெஞ்சமர்ந் தோரே." [ஐங்குறு - உ௱௯௩]

இது, தலைவி கண்புதைத்தவழித் தலைவன் கூறியது.

"குருதி வேட்கை யுருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கு
மரம்பயில் சோலை மலியப் பூழிய
ருருவத் துருவி னுண்மேய [1]லாரு

(பிரதி)— 1. பார்க்கு.

மாரி [1]யெண்கின் மலைச்சுர நீளிடை
நீயந்து வருத லெவனெனப் பலபுலந்
தழுதனை யுறையு மம்மா வரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்
னாய்நல முள்ளி வரினெமக்
கேம மாகு மலைமுத லாறே." [நற்றிணை - ௱௯௨]

எனவும் வரும்.

**தாளாண் ணெதிரும் பிரிவி னானும்** என்பது—தாளாண்மை யெதிரும் பிரிவின்கண்ணும் என்றவாறு. எனவே நெட்டாறு சேறலன்றி அணிமைக்கண் பிரிவென்று கொள்க.

"இன்றே சென்று வருவது நாளைக்
குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக
விளம்பிறை யன்ன விளங்குசுடர் நேமி
விசும்புவீசு [2]கொள்ளியிற் பைம்பயிர் துமியக்
[3]காலியற் செலவின் மாலை யெய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மா ணாகம் மடைந்துவக் குவமே." [குறுந் - ௱௮௯]

பிரிந்தவழிக் கூறியதற்குச் செய்யுள்:—

"ஓம்புமதி வாழியோ வாடை [4]பாம்பின்
றூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே." [குறுந் - ௨௱௩௫]

எனவும் வரும்.

**நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்** என்பது—நாணந் தலைவிநெஞ்சினை வருத்துதலானே நீக்கிநிறுத்துதற்கண்ணும் என்றவாறு.

அஃது, அலராகு மென்றஞ்சி நீக்குதல். அவ்வழித் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு. அவ்வழி இவ்வாறு கூறுகின்றது புனைந்துரையென்று கருதிக் கூறுதலும் மெய்யென்று கருதிக் கூறுதலும் உளவாம்.

"களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது." [குறள் - ௲௱௪௫]

இது புனைந்துரையென்று கருதிக் கூறியது.

'உறாஅ தூரறி கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன நீர்த்து." [குறள் - ௲௱௪௩]

'ஊரறிந்த கௌவை நன்றே காண்; அதனைக் குற்றமாகக் கொள்ளாது பெறாது பெற்ற நீர்மைத்தாகக் கொள்' என்றமையானுந் தமர் வரைவுடன்படுவர் எனக் கூறியவாறும். இது மெய்யாகக் கொண்டு கூறியது.

---

(பிரதி)—1. யெண்கினம் வலிதரு. 2. கொள்ளிநெற்பயிர் துமிப்பக். 3. காலையிற் செலவி. 4. யாப்பின்.

**வரைதல் வேண்டி...புல்லியவெதிரும்** என்பது—வரைந்துகோடல் வேண்டித் தோழியாற் சொல்லப்பட்ட குற்றந்தீர்ந்த இளிவிபொருந்திய வெதிர்ப்பாட்டுக் கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃதாவது பின்னுங் களவொழுக்கம் வேண்டிக் கூறுதல்.

"நல்லுரை [1]யிகந்து புல்லுரைத் தாஅய்
பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளந் தாங்கா வெள்ள நீந்தி
யரிதவா வுற்றனை நெஞ்சே [2]நன்றும்
பெரிதா லம்மநின் [3]பூச லுயர்கோட்டு
மகவுடை மந்தி போல
வகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே." [குறுந் - ௨௬]

எனவரும்.

**வரைவுடம் படுதலும்**—தோழிகூறிய சொற்கேட்டு வரைவுடம்படுதற் கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

"ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பிற்
சூர்நசைந் [4]தனையையாய் நடுங்கல் கண்டே
நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்
நிரந்திலங்கு வெண்பன் மடந்தை
பரிந்தனெ னல்லனோ விறையிறை யானே." [குறுந் - ருஉ]

எனவரும்.

**ஆங்கதன் புறத்தும்** என்பது—அவ் வரைவுநிகழ்ச்சிக் கண்ணும் [கூற்று]நிகழும் என்றவாறு. செய்யுள் வந்த வழிக்காண்க.

**புரைபட வந்த மறுத்தலோடு தொகைஇ** என்பது—குற்றம்பட வந்த மறுத்தலொடுகூட என்றவாறு.

அஃது அவர்மறுத்தற் கண்ணுந் தலைமகன்மாட்டுக் கூற்று நிகழும் என்றவாறு. அதற்குச்செய்யுள்:—

"பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு [5]கோதைய
டிணிமண லடைகரை யலவ னாட்டி
[6]யசையின ளிருந்த வாய்தொடிக் குறுமக
ணலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய ளாயி [7]னறந்தெரிந்து
நாமுறை தேஎ மரூஉப் பெயர்ந் தவனொ
டிருநீர்ச் சேர்ப்பி னுப்புட னுழுதும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
படுத்தனம் பணிந்தன மடுத்தன மிருந்தபிற்
றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரண் முத்தங் கொண்டு ஞாங்கர்த்

[பிரதி]— 1. யிகழ்ந்த. 2. என்றும். 3. அஞ்சொ. 4. தணையாய். 5. தெரிகைய. 6. யசையுள. 7. னந்தில் தெரிநாமுரைப் பெயாவந்தவனொ டிருநீர்ச் சேர்பபினும. புடடனுழும.

தேனிமிர் தண்கரைப் பகுக்குங்
கானலம் பெருந்துறைப் பரதவ னெமக்கே." [அகம் - ௨௱௮௰]

எனவரும்.

கிழவோர்ன் மேன வேன்மனர் புலவர் என்பது—இச் சொல்லப்பட்டன வெல்லாங் கிழவோன் இடத்தன என்றவாறு.

கூற்றென்னுது பொதுப்படக் கூறுதலான் உள்ளநிகழ்ச்சியும் கூற்றும் கொள்ளப் படும். (௰எ)

௱௬. காமத் திணையிற் கண்ணின்று வரூஉ
நாணு மடனும் பெண்மைய வாகலிற்
குறிப்பினு மிடத்தினு மல்லது வேட்கை
நெறிப்பட வாரா வவள்வயி னான.

என்பது மேல் தலைவர்க் குரிய கிளவிகூறி, இனித் தலைவிக்குரிய கிளவி கூறுகின்றாராகலின், முற்பட அவள் தலைவனைக் கண்ணுற்றவழி வரும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

தலைவியிடத்து நிலைமைபெற்றுவருகின்ற நாணமும் மடனும் பெண்மைக்கு அங்கமாகலின், காமவொழுக்கத்தின்கண் குறிப்பினானும் இடத்தினானுமல்லது வேட்கை புலப்படநிகழாது தலைவியிடத்து என்றவாறு.

காமத்திணை என்பதனைக் குறிப்பென்பதற்கு முன்னேகூட்டி யுரைக்க. அச்சமும் இயல்பன்றோவெனின், அதுவும் வேட்கைக்குறிப்பினான் நீங்குமென்ப: அச்சமுள்வழி வேட்கை நிகழாமையின். வேட்கை யுள்வழி நாணும் மடனும் நீங்காவோ எனின் அது வருகின்ற சூத்திரத்தாற் கூறுப. இதனாற் சொல்லியது தலைவி தலைவனை எதிர்ப்பட்டு முன்னிலை யாக்கல் முதலாகத் தலைவன் மாட்டு நிகழ்ந்தமைபோலத் தலைவிமாட்டு நிகழ்பவை உளவோ வெனின், அவள்மாட்டுக் குறிப்பினானாதல் சொல்லுதற்குத் தக்க விடத்தினானாதல் தோற்றுவதல்லது, புலப்பட்டு நிகழா தென்றவா றாயிற்று.

"உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று." [குறள் - ௲௯௰]

என்றது தலைவனைக் கண்ட தலைவி வேட்கைக்குறிப்பினால் தன்னுள்ளே கருதியது.

இடம்பற்றி வேட்கை தோற்றியதற்குச் செய்யுள்:—

"நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ
காணு மோவெனக் காவிற் சிதைய
நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு
மென்னையே குறித்த நோக்கமொடு நன்னுத
லொழிகோ யானென வழிதகக் கூறி
யாம்பெயர் தோறு நோக்கித் தான்றன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலு மின்றுமென் கட்கே." [அகம் - ௱௰]

எனத் தன் குறிப்புக் காலத்தாற் கூறுத லாற்றாது பின் இடம்பெற்றுழிக் கூறியவாறு காண்க. (௰அ)

௱௭. காமஞ் சொல்லா நாட்ட மின்மையி
னேமுற விரண்டு முளவென மொழிப.

என்பது, மேலதற்கோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

வேட்கையுரையாத கண் உலகத்தின்மையால் தலைவன் ஏமுறற்பொருட்டு நாணும் மடனும் உளவாம் என்றவாறு.

இதனாற் சொல்லியது மேல் தலைவிக்கு இயல்பாய்க் கூறப்பட்ட அச்சமும் நாணும் மடனும் என்பனவற்றுள் வேட்கையால் அச்ச நீங்கினவழி நாணும் மடனும் நீங்காவோ வென்றையுற்றார்க்கு அவை தலைமகற்கு ஏம மாதற் பொருட்டு நீங்காவாம் என்பதூஉம், வேட்கைக்குறிப்புக் கண்ணினான் அறியலா மென்பதூஉ முணர்த்தியவாறு. என்னை? நாணும் மடனும் இல்லாதாரைத் தலைமக்கள் அவமதிப்பாராதலால். [1]உதாரணம்:—

“கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.” [குறள் - ௲௱௩௭]

இதனுள் ‘கடலன்னகாமம் உழந்தும்’ என்றதனான் வேட்கை மிக்க நிலையினையும், ‘மடலேறாப் பெண்’ என்றமையான் நாணும் மடனும் நீங்கா நிலையினையும் கூறுதல்காண்க.

“கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில.” [குறள் - ௲௱]

இதனுள் அகத்துநிகழ் வேட்கையினைக் கண்ணினால் அறியக்கிடந்தமை கூறியவாறு காண்க. (௰௧)

௱௮. சொல்லெதிர் மொழித லருமைத் தாகலி
னல்ல கூற்றுமொழி யவள்வயி னான.

என்பது, இதுவும் தலைவிமாட்டு ஒரு கூற்றுச்சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் இயற்கைப் புணர்ச்சி கருதிக்கூறுஞ் சொல்லெதிர் தான் வேட்கைக் குறிப்பினளாயினும் அதற்குடம்பட்ட நெறியைக் கூறுதல் அருமையுடைத் தாதலான் அதற்கு உடம்பாடல்லாத கூற்றுமொழி தலைவியிடத்தன என்றவாறு. என்றது இசை வில்லாதாரைப்போலக் கூறுதல்.

உதாரணம்:—

“யாரிவ னென்னை விலக்குவா னீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்றா ரெமர்” [கலித்-௱௰௨]

எனவரும். இதன்பின்,

“எவன் கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்
வாயாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தவென்

(பிரதி)—1. இது தொடங்கிச் சூத்திரவுரையின் இறுதிவரையுள்ளது (த.மு.சொ.).

ஞயித ழுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேன ருடைத்து." [கலித் - ௱௪௨]

என உடம்பாடு கூறினாளாதலின் முற்கூறியது அல்லகூற் றுயிற்று. (௨௰)

௱௬. மறைந்தவற் காண்ட றற்காட் டுறுத
னிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தன் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினும் நாணுமிக வரினு
மிட்டுப்பிரி விரங்கினு மருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி யெள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினு
நொந்துதெளி வொழிப்பினு மச்ச நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்
வருந்தொழிற் கருமை வாயில் கூறினுங்
கூறிய வாயில் கொள்ளாக் காலையும்
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற வருமறை யுயிர்த்தலு
முயிராக் காலத் துயிர்த்தலு முயிர்செல
வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்
நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ
ளருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற வியல்பின் கண்ணும்
பொய்தலை யடுத்த மடலின் கண்ணுங்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணுங்
குறியி னொப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினுங் களவறி வுறினுந்
தமர்தற் காத்த காரண மருங்கினுந்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தவன் பெயர்ந்த வறுங்கள நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய வியற்படு பொருளினும்
பொழுது மாறும் புரைவ தன்மையி
னழிவுதலை வந்த சிந்தைக் கண்ணுங்
காமஞ் சிறப்பினு மவனளி சிறப்பினு
மேமஞ் சான்ற வுவகைக் கண்ணுந்
தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையு
மன்னவு முளவே யோரிடத் தான.

என்றது, தலைவிக்கு இயற்கைப்புணர்ச்சி முதலாகக் களவின்கட் 'குறிப்பினுமிடத் தினுமல்லது' [களவியல்-௰அ] நிகழ்ச்சி யில்லாவற்றினும் கூற்று நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

மறைந்தவற் காண்டல் என்பது—தன்னைத் தலைவன் காணுமல் தான் அவனைக் காணுங் காட்சி.

தற்காட்டுறுதல் என்பது—தன்னை அவன் காணுமாறு நிற்றல்.

நிறைந்த...மழுங்கல் என்பது—நிரம்பிய வேட்கையால் தலைவன் கூறிய சொற் கேட்டு எதிர்மொழி கூறுது மடிந்து நிற்றல்.

இம் மூன்றிடத்தினுங் கூற்று நிகழாது.

வழிபாடு மறுத்தல் என்பது—அதன்பின் இவள் வேட்கைக்குறிப்புக் கண்டு சார லுற்றவழி அதற்கு உடம்படாது மறுத்தல்.

அது குறிப்பினுனும் கூற்றினுனும் வரும்.

மறுத்தெதிர்கோடல் என்பது—மறுத்தாங்கு மறுது பின்னும் எற்றுக் கோடல்.

பழிதீர்...தோற்றல்—குற்றந்தீர்ந்த முறுவல் சிறிது தோற்றுவித்தல்.

அது புணர்தற்கு உடம்பாடு காட்டி நிற்கும். இவை யாறுநிலையும் புணர்ச்சிக்குமுன் நிகழும். ஈண்டுங் குறிப்புநிகழ்ச்சியல்லது கூற்றுநிகழ்ச்சி அருகியல்லது வாராது. அவற் றுள் சிலவருமாறு:—

"இகல்வேந்தன் சேனை"என்னும் முல்லைக்கலியுள்,

"மாமருண் டன்ன மழைக்கட்சிற் றுய்ச்சியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை
நீயெவன் செய்தி பிறர்க்கு ;
உரை, யாமெவன் செய்து நினக்கு ;

இது வழிபாடு மறுத்தது. இன்னும் இதனுள்,

"தேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணுமைக
காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
யாம்பற் குழலாற் பயிர்பயிர்த் தெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி." [கலித் - ௱அ.]

இது மறுத்தெதிர் கோடல்.

பழிதீர் முறுவல் சிறிதே தோற்றற்கு உதாரணம்:—

"அன்னையோ,
மன்றத்துக் கண்டாங்கு சான்றூர் மகளிரை
யின்றி யமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றுய்நீ சென்றீ யெமர்காண்பர் நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து." [கலித் - ௱௬]

இதனுள் "அன்னையோ" என்பது நகையொடு கூடிய சொல்,

**கைப்பட்டுக் கலங்கினும்** என்பது—தலைவன் கையகப்பட்டபின்பு என்செய்தே மாயினேம் எனக் கலக்கமுறினும் என்றவாறு.

**நாணுமிகவரினும்** என்பது—தலைவிக்கு முன்புள்ள நாணத்தினும் மிக நாணம் வந்துழியும் என்றவாறு.

**இட்டுப்பிரி விரங்கினும்** என்பது—தலைவன் இட்டு வைத்துப் பிரிவன் என அஞ்சியதற்கு இரக்கமுறினும் என்றவாறு.

**அருமைசெய்தயர்ப்பினும்** என்பது—தலைவன் வருதற்குக் காவலாகிய அருமை செய்ததனால் அவனும் வருதலைத்தவிரினும் என்றவாறு.

வருதலைத் தவிர்தலை அயர்ப்பு என்றார். அன்றியும் புறத்து விளையாடுதற்கு அருமை செய்ய மயக்கம்வரினும் என்றுமாம். செய்தென்பதனைச் செயவெனத் திரிக்க.

**வந்தவழி யெள்ளினும்** என்பது—தலைவன் வந்தவிடத்து அலராகுமென்றஞ்சி யிகழ்ந்தவழியும் என்றவாறு.

**விட்டுயிர்த்தழுங்கினும்** என்பது—மறையாது சொல்லியிரங்கினும் என்றவாறு.

**நொந்து தெளிவொழிப்பினும்** என்பது—தலைவன் தெளிவித்த தெளிவை நொந்து, [அ]தனை யொழிப்பினும் என்றவாறு.

**அச்ச நீடினும்** என்பது—தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மிக்குழியும் என்றவாறு.

**பிரிந்தவழிக் கலங்கினும்** என்பது—தலைவன் பிரிந்தவழிக் கலக்கமுறினும் என்றவாறு.

அது தாளாணெதிரும் பிரிவு.

**பெற்றவழி மலியினும்** என்பது—தலைவனோடு கூட்டம் பெற்றவழி மகிழினும் என்றவாறு.

**வருந்தொழிற்கு அருமை வாயில் கூறினும்** என்பது—தலைவன் வருதற்கு இடையீடாகக் காவலர் கடுகுதலான் ஈண்டுவருதல் அரிதெனத் தோழி தலைவிக்குச் சொல்லினும் என்றவாறு.

**கூறிய...காலையும்** என்பது—தோழி இவ்வாறு கூறியதனை மனங்கொள்ளாத காலத்தினும் என்றவாறு.

**மனைப்பட்டு...அருமறை யுயிர்த்தலும்** என்பது—புறத்து விளையாடுதல் ஒழிந்து மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்குச் சூழ்தலமைந்த அரிய மறைப்பொருளைச் சொல்லலும் என்றவாறு.

எனவே சிதையாதவழித் தோழிக்குச் சொல்லாளாம் என்பது போந்தது. வேட்கை மறைக்கப்படுதலின் மறையாயிற்று.

'கைப்பட்டுக் கலங்கல்' முதலாகக் 'கூறிய வாயில் கொள்ளாக் காலை' யீறாகச் சொல்லப்பட்ட பன்னிருவகையினும் தலைமகள் தோழிக்கு உரைக்கப்பெறும். அஃது உரைக்குங்கால் மனைப்பட்டுக் கலங்கி மேனி சிதைந்தவழியே யுரைக்கப்பெறுவது. ஆண்டும் இதற்கு என்செய்வாம் என உசாவுதலோடு கூடத் தனது காதன்மை தோன்ற வுரைக்கும் என்றவாறு; மனைப்படாக்கால் அவனைக் காண்டலால் உரைக்கவேண்டுவ தில்லை யென்றவாறாயிற்று. இப்பன்னிரண்டும் ஒருத்திமாட்டு ஒருங்கு நிகழ்வன அல்ல. இவ்விடங்கள் உரைத்தற்கு இடமென இலக்கணங் கூறியவாறு.

அவற்றுட் கைப்பட்டுக் கலங்கியதற்குச் செய்யுள்:—

'கொடியவுங் கோட்டவும்' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

"நரந்தநா றிருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
தொன்முறை சுற்றி மோக்கலு மோந்தனை
னறீஇவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போதுகொண்டு
செறீஇச் செங்கண் புதைய வைத்துப்
பறீஇக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்
றொய்யி லிளமுலை யினிது தைவந்து
தொய்யலந் தடக்கையின் வீழ்பிடிக் களிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன்;

அதனால்.

அல்லல் களைந்தனன் றோழி நந்நக
ரருங்கடி நீவாமை கூறி [னன்றெ]ன
நின்னொடு சூழ்வ றோழி நயம்புரிந்
தின்னது செய்தா ளிவளென
மன்றா வுலகத்து மன்னுவது புரைமே." [கலித் - ருச]

இதனுட் கைப்பட்டுக் கலங்கியவாறும் அருமறை யுயிர்த்தவாறும் இவ்வாறு செய்யாக்கால் இறந்துபடுவென் என்னுங் குறிப்பினளாய் 'மன்றா வுலகத்து மன்னுவது புரையும்' எனவுங் கூறியவாறு காண்க.

நாணுமிகவந்ததற்குச் செய்யுள்:—

"நோக்குங்கா னோக்கித் தொழூஉம்பிறர் க[ா]ண்பராத்
தூக்கிலி தூற்றும் பழியெனக் கைகவித்துப்
போக்குங்காற் போக்கு நினைந்திருக்கு மற்றுநாங்
காக்கு மிடமன் றினி;
எல்லா வெவன்செய்வாம் நாம்." [கலித் - சுரு]

இது நாணம் மிக்கவழித் தோழியொடு உசாவியது.

இட்டுப்பிரிவிரங்கியதற்குச் செய்யுள்:—

"அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வே மென்பதம் மலைகெழு நாட்டே." [ஐங்குறு - உ௨௧]

எனவரும்.

அருமை செய்தயர்த்தற்குச் செய்யுள்:—

"நெய்தற் புறவி னிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலுட் கண்டநாட் போலானாற்.
செய்த குறிவழியும் பொய்யாயி னாயிழாய்
ஐயகொ லான்றார் தொடர்பு." [திணைமொழி - ௬௧]

எனவரும்.

வந்தவழி யெள்ளியதற்குச் செய்யுள்:—

"கண்டிரண் முத்தம் மயக்கு மிருண்முந்நீர்ப்
பண்டங்கொ ணாவாய் வழங்குந் துறைவனை
முண்டகக் கானலுட் கண்டே னெனத்தெளிந்தே
னின்ற வுணர்விலா தேன்." [ஐந்திணையெழு - ௬௧]

[இதனுள்] 'பின்னும் வருவன் என்றிருந்தேன்; அதனன் எள்ளினேன்' என்பது கருத்து.

"எறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறூஅன்
மாறினெ னெனக்கூறி மனங்கொள்ளுந் [1]தானென்ப
கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப்
பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக." [கலித் - ௪௬]

இஃது எள்ளினாயெ[ன] நினைத்தான் என்றவழிக் கூறியது.

விட்டுயிர்த் தழுங்கியதற்குச் செய்யுள்:—

"பிணிநிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
மணிமலை நாடன் வருவன்கொ றோழி
கணிநிற வேங்கை மலர்ந்துவண் டார்க்கு
மணிநிற மாலைப் பொழுது." [திணைமொழி - ௯]

[எனவும்,]

"மரையா வுகளு மரம்பயில் சோலை
யுரைசார் மடமந்தி யோடி யுகளுந்
புரைதீர் மலைநாடன் பூணேந் தகல
முரையா வுழக்குமென் னெஞ்சு." [கைந்நிலை - ௬]

என[வும்] வரும்.

நொந்து தெளிவொழித்தற்குச் செய்யுள்:—

"மன்றத் துறுகற் கருங்கண் முசுவுகளுங்
குன்றக நாடன் றெளித்த தெளிவினை
நன்றென்று தேறித் தெளிந்தேன் றலையளி
யொன்றுமற் றொன்று மனைத்து." [ஐந்திணையெழு - ௯]

எனவரும்.

அச்சம் நீடினும் என்பதற்குச் செய்யுள்:—

"மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாட
னெந்தை யறிதல் லஞ்சிக்கொ
லதுவே மன்ற வாரா மையே." [ஐங்குறு - உ௬௧]

[எனவும்,]

(பிரதி)—1. தானெனக.

["மன்ற ம]ரா அத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங்
கொடிய ரல்லரெங் குன்றுகெழு நாடர்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழிய ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே." [குறுந் - அஎ]

என[வும்] வரும்.

பிரிந்தவழிக் கலங்கியதற்குச் செய்யுள்:—

"வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
யிருவி யிருந்த குருவி வெருவறப்
பந்தாடு மகளிரிற் படர்தருங்
குன்றுகெழு நாடனொடு சென்றவெ னெஞ்சே." [ஐங்குறு - உகூ௫]

[எனவும்,]

"அதுகொ றோழி காம நோயே
வதிகுரு குறங்கு மின்னிலைப் புன்னை
யுடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லித ழுண்கண் பாடொல் லாவே." [குறுந் - ௫]

எனவும்,

"மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப
னணிநல முண்டகன்று னென்றுகொ லெம்போற்
றிணிமண லெக்கர்மே லோதம் பெயர்ந்து
துணிமுந்நீர் துஞ்சா தது." [ஐந்திணையெழு-சுல]

எனவும்,

"நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து." [குறள் - கூ௱உஅ]

எனவும்,

"கண்ணு[ள்]ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்ப தறிந்து." [குறள்-கூ௱உஎ]

எனவும் வரும்.

உறங்காமையும் உண்ணாமையும் கோலஞ் செய்யாமையும் வருத்தம் பிறவுஞ் சொல்லுதல். இவ்வழி நீ வருந்தாதி நின்மாட்டு அன்பு பெரிதுடையன் எனத் தோழி ஆற்றுவித்த வழி ஆற்றாமையாற் கூறியதற்குச் செய்யுள்:—

"சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியு
மிலங்குமலை நாடன் வரூஉ
மருந்து மறியுங்கொ றோழியவன் விருப்பே." [ஐங்குறு - உகூஉ]

என வரும்.

பெற்றவழி மலியினு மென்பதற்குச் செய்யுள்:—

"அம்ம வாழி தோழி பன்மா
ணுண்மண லடைகரை நம்மோ டாடிய
தண்ணந் துறைவன் மறைஇ
யன்னை யருங்கடி வந்துநின் றோனே." [ஐங்குறு - ௱௧௫]

எனவும்,

"மூனவளர் முதல்வன்" என்னும் அகப்பாட்டினுள்,

" ... ... வேட்டோ[ர்]க்
கமிழ்தத் தன்ன கமழ்தார் மார்பின்
வண்டிடைப் படா[அ] முயக்கமுந்
தண்டாக் காதலுந் தலைநாட் போன்மே." [அகம் - ௩௩௨

எனவும்,

"பெயல்கண் மறைத்தலின் விசும்புகா ணலரே
நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலரே
யெல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
வேங்கை கமழுமெஞ் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே." [குறுந் - ௩௫௫]

எனவும்,

"அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளியமென் றோள்கள்
மல்ல லிருங்கழி மலரு
மெல்லம் புலம்பன் வந்த வாறே." [ஐங்குறு - ௱௨௰]

எனவும் வரும்.

வருந்தொழிற் கருமை வாயில்கூறியவழித் தலைவி கூறியதற்குச் செய்யுள்:—

"அருங்கடி யன்னை காவ னீவிப்
பெருங்கடை யிறந்து மன்றம் போகிப்
பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயற் படப்பை யவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி பன்னாட்
கருவி வானம் பெய்யா தாயினு
மருவி யார்க்குங் கழைபயி னனந்தலை
வான்றோய் மாமலைக் கிழவனைச்
சான்றோ யல்லை யென்றனம் வரற்கே." [நற்றிணை-௩௬௫]

என வரும்.

கூறியவாயில் கொள்ளாக்காலத்துத் தலைவி யுரைத்ததற்குச் செய்யுள்:—

"கல்வரை யேறிக் கடுவன் கனிவாழை
யெல்லுறு போழ்தி னினிய பழங்கைக்கொண்

டொல்லொலை யோடு மலைநாடன் றன்கேண்மை
சொல்லச் சொரியும் வளை." [கைந்நிலை - எ]

எனவரும்.

மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தற்குச் செய்யுள்:—

"பலவம் பழம்பெற்ற பைங்கட் கடுவ
னிலவென் றிணைபயிரு [1]மேகல்சூழ் வெற்பன்
புலவுங்கொ ளேழி புணர்வறிந் தன்னை
செலவுங் கடிந்தாள் புனத்து." [திணைமொழி - ம]

எனவும்,

"பொழுது மெல்லின்று பெயலு மோவாது
கழுதுகண் பனிப்ப வீசு மதன்றலைப்
புலிப்பற் றாலிப் புதல்வர்ப் புல்லி
[2]யன்னா யென்னு மன்னையு மன்னோ
என்மலைந் தனன்கொ றானே தன்மலை
யா[ர] நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றேனே." [குறுந் - ௱சுக]

[எனவும் வரும்.]

இவையெல்லாம் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தபின் நிகழ்வன. உள்ளப்புணர்ச்சி யான் உரிமை பூண்டிருந்தவரும் இவ்வாறு கூறப்பெறும் என்று கொள்க: ஆண்டு மன நிகழ்ச்சி ஒருப்பட்டு நிற்றலின்.

உயிராக்காலத் துயிர்த்தலு முயிர்செல என்பது—இவ்வாறு கூறாக்காலத்து உயிர்செல்லுமாறு சொல்லுதலும் என்றவாறு.

ஈண்டு, உயிர்த்தல் என்பது சுவாதம் எனினும் அமையும். இந்நிகழ்ச்சியைத் தோழிக்கு நாணத்தால் உரையாளாயின் நோயட வருந்தும் என்றவாறு. உதாரணம்:—

"தழையணி யல்குறுங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக
வம்மெல் லாக நிறைய வீங்கிய
கொம்மை வரிமுலை செப்புட னெதிரின
[3]யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னு
மவல நெஞ்சமொ டுசாவாக்
கவலை மாக்கட்டிப் பேதை யூரே." [குறுந் - ௱டுகூ]

இது யாங்காகுவ[4]ளென உயிர்செலவு குறித்து நின்றது.

"இன்ன ளாயின ளன்னுத லென்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் [5]தலர்சில கொண்டே." [குறுந். - கூஅ]

எனவரும்.

---

(பிரதி)— 1. மெக்கல். 2. யிறு. 3. குவன்கொல் பூங்குழை யெண்ணு. 4. னென. 5. தலர்சிலர்.

**வேற்று வரைவு...தன்பிழைப்பாகத் தழீஇத் 1தேறலும்** என்பது—வேற்று வரைவு வரின் அது மாற்றுதல் முதலாகத் தமர் தற்காத்த காரணப்பக்கம் ஈருக நிகழும் வழித் தன்குறி தப்பித் தலைவன் எதிர்ப்படுதலில்லாக் காலத்து வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன்குறையாக வுடம்பட்டுத் தேறுதலும் என்றவாறு.

ஆண்டுக் கலக்கமின்றித் தேறமென்பது கூறினராம்.

அவ்வழி, **வேற்று வரைவு வரின் அது மாற்றுதற்கண்ணும்** என்பது—பிறனொரு வன் வரைய வரின் அதனை மாற்றுதற்காகவும் தன்குறி தப்பும் என்றவாறு.

[**நெறிப்படு...மறைப்பினும்** என்பது—கூட்டமுண்மை வழக்கியலால் நாடு கின்ற காலத்து மெய் வேறுபாடு நிகழ்ந்துழி தோழி அறியாமலுஞ் செவிலி அறியாமலுந் தலைவி மறைப்பினும் என்றவாறு.]

**பொறியின்...இயல்பின் கண்ணும்** என்பது—பொறி யென்பது ஊழ். ஊழாற் கட்டப்பட்ட புணர்ச்சியைக் குறித்து ஒற்றுமைப்பட்ட நண்பினனே தலைவன் வரைதற் குக் குறையுறுகின்றதனைத் தெளிந்த தலைவி செய்தற்கு அருமையமைந்த எண்வகையி னுற் பெருமை யியைந்த இயல்பினளாகி நிற்றற்கண்ணும் என்றவாறு.

எண்வகையாவது மெய்ப்பாட்டியலுள் மனன் அழிவில்லாத கூட்டம் என ஓது கின்ற,

'முட்டுவயிற் கழறன் முனிவுமெய்ந் நிறுத்தல்
அச்சத்தி னகற லவன்புணர்வு மறுத்தல்
தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மை' [மெய்ப்பாட் - உ௩]

என்பன. அவற்றுள்,

முட்டுவயிற் கழறல் ஆவது—களவொழுக்கம் நிகழாநின்றுழி நிலவு வெளிப்பாடு, காவலர்கடுகுதல், தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, தலைவன் குறிவருதற்கு இடையீடுபடு தல்: இவ்வழிக் களவொழுக்கத்தினற் பயனின்மை கூறல். அவ்வாறு கூறி இனி இவ்வொ ழுக்கம் அமையுமெனை வரைந்தெய்துதல் காறும் புணர்ச்சியை விரும்பாது கலக்கமின் றித் தெளிவுடையளாம்.

முனிவு மெய்ந்நிறுத்தல் ஆவது—இவ்வொழுக்கத்தினன் வந்த துன்பத்தைப் பிறர்க்குப் புலனுகாமை மெய்யின் கண்ணே நிறுத்தல்.

அவ்வழியும் வரைந்தெய்தல் சான்றமையும் புணர்ச்சியெனக் குறிவழிச் செல்லா ளாம்.

அச்சத்தின் அகறல் ஆவது—இதனைப் பிறரறிவர் என்னும் அச்சத்தினனும் குறிவழிச் செல்லாளாம்.

அவன்புணர்வு மறுத்தல் ஆவது—தலைவன்புணர்ச்சி யில்வழியும் குறிவழிச் செல் லாளாம்.

தூது முனிவின்மை ஆவது—அவ்வழித் தலைவன்மாட்டுத் தூதாகிவருஞ் சொற் கேட்டலை முனிவின்மை.

துஞ்சிச் சேர்தல் ஆவது—உறங்காமையின்றி யுறக்கம் நிகழ்தல்.

காதல் கைம்மிகல் ஆவது—இவ்வாறு செய்யுங் காதல் அன்பின்மையன்றி அன்பு மிகுதல்.

(பிரதி)—1. தேறுதலும்.

கட்டுரையின்மை ஆவது—கூற்று நிகழ்தலின்மை.

இவையெல்லாம் கலக்கமில்லாத நிலைமை யாதலிற் பெருமை சான்ற இயல்பாயின.

பொய்தலையடுத்த மடலின் கண்ணும் என்பது—பொய்ம்மையால் மடலேறுவன் எனத் தலைவன் கூறியவழியும் வெறுத்த உள்ளத்தளாய்க் குறிவழிச் செல்லாளாம்.

கையறு தோழி கண்ணீர்துடைப்பினும் என்பது—தோழி கையினால் தலைவி கண்ணீர் துடைத்தவழியுங் குறிவழிச் செல்லாளாம்.

வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் என்பது—தலைவி வேறுபாடு எற்றி னாயிற்றெனச் செவிலி வெறியாட்டுவிக்கவரும் அச்சத்தினானுங் குறிவழிச் செல்லாளாம்.

குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் என்பது—தலைவன் செய்த குறியை ஒப்புமைபற்றிச் சென்று அஃது அல்வழி மருளுதற்கண்ணும் குறிவழிச் செல்லாளாம்.

அஃதாவன புள்ளெழுப்புதல் போல்வன. அவைபெற்றுப் [1]புள்ளரவம் எழும். அவ்வாறு மருளுதல்.

வரைவுதலை வரினும் என்பது—தலைவன் வரையவருகின்ற நாள் அணித்தாக வரினும் குறிவழிச் செல்லாளாம்.

களவறிவுறினும் என்பது—களவினைப் பிறர் அறியினும் குறிவழிச் செல்லாளாம்.

தமர்தற் காத்த காரண மருங்கினும் என்பது—தன்னைத் தமர் காத்த காரணப் பக்கத்தினும் என்றவாறு.

அஃது ஐயமுற்றுக் காத்தல்.

அவற்றுள் வேற்றுவரைவு வரின் அது மாற்றுதற்குத் தலைவி கூறிய செய்யுள்:—

"அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
யென்னை யென்று மியாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறு
மாங்கு மாக்குமோ வாழிய பாலே." [ஐங்குறு - ௱௰]

எனவரும்.

நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தமை மறைத்தற்குச் செய்யுள்:—

"துறைவன் துறந்தெனத் துறையிருந் தழுதவென்
[ம]ம்மர் வாண்முக நோக்கி யன்னை நி
னவல முரையென் [2]றனளே கடலென்
பஞ்சாய்ப் பாவை கொண்டு
வண்டலஞ் [3]சிறுமனை சிதைத்ததென் றேனே."

எனவரும்.

முட்டுவயிற் கழறற்குச் செய்யுள்:—

"இரும்பிழி மகாஅரிவ் வழுங்கன் மூதூர்
[விழவின் றாயினுந் துஞ்சா தாகு
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்

(பிரதி)— 1. புள்வரவு. 2. றனளே. 3. சிறுவன.

பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்
றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ
ரிலங்குவே லிளையர் துஞ்சின் வைஎயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழு
மரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பி
னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே
திங்கள்கல் சேர்பு கனையிருண் மடியி
னில்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பு
மெல்லா மடிந்த காலை யொருநா
ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, யதனா
லரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்
தாதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன]
பன்முட் டின்றாற் றோழிநங் களவே." [அகம் - ௱௨௨]

எனவரும்.

முனிவு மெய்ந்நிறுத்தற்குச் செய்யுள்:—

"நோமே நெஞ்சே நோமே நெஞ்சே
யிமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
யமைதற் கமைந்தநங் காதல
ரமைவில ராகுத னோமே நெஞ்சே." [குறுந் - ௪]

எனவரும்.

அச்சத்தின் அகறற்குச் செய்யுள்:—

"[பேணுப] பேணார் பெரியா ரென்பது
நாணுத் தக்கன் றது காணுங் காலை
யுயிரோ ரன்ன செயிர்தீர் நட்பி
னினக்கியான் மறைத்தல் யா[வ]து மிகப்பெரி
தழிதக் கன்றாற் றானே கொண்கன்
யான்யா யஞ்சுவ லெனினுந் தானெற்
பிரிதல் சூழான் மன்னே யினியே
கான லாய மறியினு மானா
தல[ர்]வந் தன்றுகொ லென்னு மதனாற்
புலர்வது கொல்லவ னட்பென
வஞ்சுவ றோழியென் னெஞ்சத் தானே." [நற்றிணை - ௭௨]

எனவரும்.

அவன்புணர்வு மறுத்தற்குச் செய்யுள்:—

"யாரு மில்லைத் தானே கள்வன்
றானது பொய்ப்பின் யானெவன் செய்கோ

தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
வொழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே.” [குறுந் - உ௫]

எனவரும்.

தூதுமுனிவின்மைக்குச் செய்யுள்:—

“புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்
தீதி னெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமு
நெய்பெய் தீயி னெதிர்கொண்டு
தாம்வரைந் தனையமென விடுகந் தூதே.” [குறுந் - ௱௬]

எனவரும்.

துஞ்சிச் சேர்தற்குச் செய்யுள் வந்தவழிக் காண்க.

காதல் கைம்மிகுதற்குச் செய்யுள்:—

“கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டுந்
திதலை யல்குலென் மாமைக் கவினே.” [குறுந் - உ௭]

எனவரும்.

கட்டுரையின்மைக்குக் கூற்று நிகழாது.

பொய்தலையடுத்த மடலின்கண் தலைமகள் கூறிய செய்யுள் வந்தவழிக்காண்க

கையறு தோழி கண்ணீர்துடைத்தற்குச் செய்யுள்:—

“யாமெங் காமந் தாங்கவுந் தாந்தங்
கெழுதகை [மை]யி னழுதன தோழி
கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
யேறா திட்ட வேமப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்புங்
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே.” [குறுந்-உ௪௧]

எனவரும்.

வெறியாட்டிடத்து வெருவினுற் கூறியதற்குச் செய்யுள்:—

“நம்முறு துயர நோக்கி யன்னை
வேலவற் றந்தன ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
யறியுமோ தில்ல செறியெயிற் றோயே.” [ஐங்குறு - உ௪௩]

எனவரும்.

குறியின் ஒப்புமை மருடற்குக் கூறிய செய்யுள்:—

“அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன்-[க]னிவிரும்பு

புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னணியிழா
யுள்ளுருகு நெஞ்சினேன் யான்." [ஐந்திணையைம் - ௩௰]

"கனைபெய்ந் நடுநாள்யான் கண்மாறக் குறிபெறுன்
புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப
துளிநசை வேட்கையான் மிசையாடும் புள்ளிற்ற
னளிநசை[இ] யார்வுற்ற வன்பினேன் [1]யானுக." [கலித் - ௪௬]

எனவரும்.

வரைவுதலை வந்தவழிக் கூறிய செய்யுள்.—

"கொல்லைப் புனத்த வகில்சுமந்து கல்பாய்ந்து
வானி னருவி ததும்பக் கவினிய
நாட னயனுடைய னென்பதனு னீப்பினும்
வாடன் மறந்தன தோள்." [ஐந்திணையெழு - உ]

நயனுடைய னென்றதனுன் வரைவு தலைவந்தமை யறிந்து கூறினளாம்.

"இலையமர் தண்குளவி வேய்ந்த பொதும்பிற்
குலையுடைக் காந்த ளினவண் டிமிரும்
வரையக நாடனும் வந்தான்மற் றன்னை
யலையு மலைபோயிற் றின்று." [ஐந்திணையெழு - ௧

எனவரும்.

களவறிவுற்றவழிக் கூறிய செய்யுள்:—

"யாங்கா குவமோ வணிநுதற் குறுமக
[டேம்படு சாரற் சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவர நீமற்
றெவ்வாய்ச் சென்றனை யவணெனக் கூறி
யன்னை யானுள் கழற முன்னின்
றருவி யார்க்கும் பெருவரை நாடனை
யறியலு மறியேன் காண்டலு மிலனே
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந் தாடிற்று மிலனென நினைவிலை
பொய்ய லந்தோ வாய்த்தனை யதுகேட்டுத்
தலையிறைஞ் சினளே யன்னை
செலவொழிந் தனையா] லணியநம் புனத்தே." [நற்றிணை - ௩௪௭]

எனவரும்.

தமர்தற்காத்த காரணப் பக்கத்திற்குக் கூறிய செய்யுள்:—

"பெருநீ ரழுவத் தெந்தை தந்த" என்னுங் களிற்றியானை நிரையுள்,

"பல்பூங் கான லல்கினம் வருதல்
கவ்வை நல்லணங் [2]குற்ற விவ்வூர்க்
கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
யெல்லையு மிரவு மென்னது கல்லென

(பிரதி)—1. பானுக. 2. குற்றத் திவ்வூர்க்.

வலவ னுய்ந்த வண்பரி
நிலவுமணற் கொ[ா]ட்குமோர் தேருண் டெனவே." [அகம் - ௨௰]

எனவரும்.

[தன்குறிதள்ளிய தெருளாக் காலை] வந்தவன் பெயர்ந்த வறுங் களம் நோக்கித் தன்பிழைப்பாகத் தழீஇத் தேறியதற்குச் செய்யுள்:—

'இருள்கிழிப்பதுபோல்' என்னும் களிற்றியானை நிரையுள்,

"வாணடந் தன்ன வழக்கருங் கவலை
யுள்ளுந ருட்குங் கல்லடர்ச் சிறுநெறி
யருள்புரி நெஞ்சமோ டெஃகுதுணை யாக
வந்தோன் கொடியனு மல்லன் றந்த
நீதவ றுடையையு மல்லை நின்வயி
ஞனு வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே." [அகம் - எ௨]

எனவரும்.

வழுவின்று...அன்னவுமுளவே என்பது—வழுவின்று நிலைஇய இயற்படுபொருண் முதலாக 'ஏமஞ் சான்ற உவகை' யீறாகச் சொல்லப்பட்ட இடங்களில் தன்னிடத்து உரிமையும் அவனிடத்துப் பரத்தமையும் அன்னவையும் நிகழப்பெறும் என்றவாறு.

அன்ன என்பது அவைபோல்வன என்றவாறு.

ஓரிடத்துக்கண் என்றதனால் இவ்வாறு எல்லார் மாட்டும் எவ்விடத்தும் நிகழாது என்றவாறும். எனவே மேற் குறிப்பினும் இடத்தினு மல்லது [களவியல் - ௰அ] கூற்று நிகழாதென்பதனை மறுத்து ஓரிடத்துக் கூற்று நிகழும் என்றவாறும்.

அவற்றுள், வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும் என்பது—தலைவனை இயற்பழித்தவழி அவன் குற்றமிலனாக நிலைநிறுத்தப்பட்ட இயற்படமொழிந்த பொருண் மைக் கண்ணும் தன்வயின் உரிமைதோன்றவும் அவன்வயிற் பரத்தைமை தோன்றவும் கூறும் தலைவி என்றவாறு.

இரண்டினுள் ஒன்றுதோன்ற உரைக்குமென்றவாறு. எனவே இரண்டுந் தோற்ற வருவனவு முளவாம்.

பொழுது மாறும் ... சிந்தைக் கண்ணும் என்பது—தலைவன் வருங் காலமும் இடனும் குற்றமுளவாதலான், ஆண்டு அழிவுவந்த சிந்தைக்கண்ணும் தலைமகள் [தன்வயின்] உரிமையும் அவன்வயிற் பரத்தை [மை]யும் தோன்றக் கூறும் என்றவாறு.

காமஞ் சிறப்பினும் என்பது—தலைமகன்மாட்டு வேட்கை மிகினும் தன்வயின் உரிமையும் அவன்வயிற்பரத்தை[மை]யும் உரைக்குந்தலைவி என்றவாறு.

அவன் அளி சிறப்பினும் என்பது—தலைவன் தலையளி மிக்கவழியும் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தை[மை]யும் தோன்றக்கூறும் என்றவாறு.

ஏமஞ்சான்ற உவகைக்கண்ணும் என்பது—ஏமம் பொருந்திய மகிழ்ச்சிவந்துழித் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தை[மை]யும் தோன்றக் கூறும் என்றவாறு. அஃதாவது இவன் வரைந்தல்லது நீங்கான் என்னும் உவகை.

அவற்றுள், வழுவின்று நிலைஇய இயற்படு பொருட்கண் கூறியதற்குச் செய்யுள்:—

"அடும்பம லங்கொடி யுள்புதைந் தொளிப்ப
வெண்மலர் விரிக்குந் தண்ணந் துறைவன்

கொடிய ளாயினு மாக
வவனே தோழியென் னுயிர்கா வலனே." [ஐங்குறு - தனி.]

எனவரும்.

பொழுது மாறும் புரைவ தன்மையின் அழிவுதலைவந்த சிந்தையால் தலைவிகூறிய செய்யுள்:—

"கொடுவரி வேங்கை யினைத்துக் கோட்பட்டு
மடிசெவி வேழ மிரிய—வடி யோசை
யஞ்சி யொதுங்கு மதருள்ளி யாரிருட்
டுஞ்சா சுடர்க்கொடி கண்" [ஐந்திணையைம் - ௰௬]

"வளைவாய்ச் சிறுகிளி விளைதினை கடியச்
செல்கென் [றோ]ளே யன்னை யெனநீ
சொல்லி னெவனாந் தோழி கொல்லை
நெடுங்கை [1]வன்மான் கடும்பகை யுழந்த
குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கு
மாரிரு ணடுநாள் வருதி
சார னாட வாரலோ வெனவே." [குறுந் - ௱௪௧]

எனவரும்.

காம மிக்கவழிக் கூறிய செய்யுள்:—

"அம்ம வாழி தோழி நலனே
யின்ன தாகுதல் கொடிதே புன்னை
யணிமலர் துறைதொறும் விரிக்கு
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தோர்க்கே." [ஐங்குறு - ௱௰௭]

இது தன்வயின் உரிமை:

"நள்[ெ]ளன் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கண் முனிவின்றி
நனந்தலை யுலகமுந் துஞ்சு
மோர்யான் மன்ற துஞ்சா தேனே." [குறுந் - ௬]

இஃது அவன்வயிற் பரத்தை[மை]:

"கொடுந்தா ளலவன் குறையா யிரப்பே
மொடுங்கா வொலிகடற் சேர்ப்ப—னெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காண
நடந்து சிதையாதி நீ." [ஐந்திணையைம் - ௬௨]

அவனளி சிறந்தவழித் தலைவிகூறிய செய்யுள்:—

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின்வயி னிமைக்கு
மோங்குமலை நாடன் சாந்துபுல ரகல
முள்ளி னுண்ணோய் மல்கும்
புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய்." [குறுந் - ௱௫௦]

(பிரதி)—1. வளமான்.

"மன்றப் பலவின் சுளைவிழை தீங்கனி
யுண்டுவந்து மந்தி முலைவருடக்-கன்றமர்ந்
தாமா கறக்கு மணிமலை நாடனை
யாமாப் பிரித லிலம்." [ஐந்திணையெழு - ச]

[எனவரும்.]

ஏமஞ் சான்ற உவகைக்கண் கூறிய செய்யுள்:—

"ஓங்க லிறுவரைமேற் காந்தள் கடிகவினப்
பாம்பென வோடி யுருமிடிப்பக் கண்டிரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாள்போல
வீங்கு நெகிழ்ந்த வளை." [திணைமொழி - ங]

[எனவரும்.]

பரத்தைமை தோன்ற வந்ததற்குச் செய்யுள்:—

"கணங்கொ ளிடுமணற் காவி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் தழிக்கு
மணங்கம ழைம்பாலா ரூடலை யாங்கே
வணங்கி யுணர்ப்பான் றுறை." [கலித்.௱௩க]

என்னும் பாட்டினுள் தானூடினளாகவும் மகிழ்ந்தவாறும் அவன்வயிற் பரத்தைமை கூறியவாறும் காண்க.

இச்சூத்திரத்தாற் சொல்லியது 'மறைந்தவற் காண்டல்' முதலாக ஓதப்பட்ட அறுவகைப் பொருண்மையும், 'கைப்பட்டுக் கலங்கல்' முதலாகக் 'கூறியவாயில் கொள்ளாக் காலை' ஈறாகவரும் மகிழ்ச்சியினால் மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழி எண்ணுதல் சான்ற அருமறையைச் சொல்லுதலும், இவ்வாறும் எண்ணந்தான் உரையாக்காலத்துத் தன்னுயிர் செல்லுமாறு உரைத்தலும், 'வேற்றுவரைவு வரின் அது மாற்றுதல்' முதலாகத் 'தமர்தற் காத்த காரணப்பக்கம்' ஈறாகத் தன் குறிபிழைக்க நிற்கப்பெறும் எனவும், அவ்வழித்தலைவன் வந்து பெயர்ந்தழிக் கலக்கமின்றித் தெளிதலும், 'வழுவின்று நிலைஇய இயற்படு பொருள்' முதலாக 'ஏமம் சான்ற உவகை' ஈறாகத் தான் உரியளாகிய நெறியும் தலைவன் அயலாகிய நிலையும்போ லவரிற் சொல்லப்பெறும் எனவும், குறிப்பினு மிடத்தினு மல்லது வேட்கை நெறிப்பட்டவாறாகத் தலைவிக்குக் கூற்று நிகழுமிடமும் உணர்த்தியவாறு.(உக)

௱ய. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினு
முரைஎனத் தோழிக் குரைத்தற் கண்ணுந்
தானே கூறுங் காலமு முளவே.

இதுவும் தலைவிமாட்டுச் சொல் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான் இன்னநாள் வரைந்து கொள்வல் எனக்கூறித் தோழியிற்கூட்டத்திற்கு முயலாது தணந்தவழி யதனைத் தோழி ஐ[ய]ப்படுங் குறிப்புத்தோன்றாமை மறைந்தொழுகிய தலைவி அவன் வருந்துணையும் ஆற்றாது வருத்தமுறினும் வரையாத நாளின்கண் மறைந்தொழுகா நின்ற தலைவன் செவிலி முதலாயினரை முட்டினவழியும் இவ்வொழுக்கத்தினை நின் றோழிக்கு உரையெனத் தலைவன் கூறியவழியும் தலைவி தானே கூறுங் காலமு முள என்றவாறு.

உம்மை எதிர்மறையாதலாற் கூறுமை பெரும்பான்மை. காலமும் என்றது இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாங் காலம். அக்காலத்துத் தோழி மதியுடம்படாம லறிவிக்கும் என்றவாறு.

இனி, வரைவிடைவைத்த காலத்து வருத்தமுற்றவழிக் கூறிய செய்யுள்:—

"புனவன் [1]றுடவைப் பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட செல்குர
லறியா துண்டன மஞ்ஞை யாடுமகள்
வெறியுறு வனப்பின் வேர்த்துற்று நடுங்குஞ்
சூர்மலை நாடன் கேண்மை
நீர்மலி கண்ணொடு நினைப்பா கின்றே." [குறுந் - ⅡⅥ]

எனவரும்.

வரையா நாளிடை வந்தோன் முட்டியவழித் தலைவி கூறியதற்குச் செய்யுள்:—

"தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை
மாழைமா னோக்கின் மடமொழி—நூழை
நுழையு மடமகன் யார்கொலென் றன்னை
புழையு மடைத்தாள் கதவு." [கைந்நிலை - ௫௧]

எனவும்,

"அறியா மையி னன்னை யஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல
நெடுநிமிர் தெருவிற் கைபுகு [2]கொடுமிடை
நொதும லாளன் [கதுமெனத் தாக்கலிற்]
கேட்டோ ருளர்கொ லில்லைகொல் போற்றென
[3]யாண தி பசலை யென்றன னதனெதிர்
[4]நாணிலை யெலுவ வென்றுவந் திசினே
செறுநரும் விழையுஞ் செம்ம லோனெ[ன]
நறுநுத லரிவை போற்றேன்
சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே." [நற்றிணை - ௫ய]

என்வும் வரும். இதன்கண் என்றுனென ஒருசொல் வருவிக்க.

உரையெனத் தோழிக்கு உரைத்தற்குச் செய்யுள்:—

"பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு
ளன்மலை நாட னலம்புனைய—மென்முலையாய்
போயின திந்நாள் புனத்து மறையினோ
லேயினோ ரின்னு மினிது." [ஐந்திணையைம் - ௰௧]

எனவரும்.

இன்னும், 'உரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணும்' என்பதற்குத் தலைவற்கு உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும் என்றுமாம்.

(பிரதி)—1. றுடவை. 2. கொடிமுடி. 3. யானது. 4. தூணிலை யெலுவமென்றுவந்.

உதாரணம்:—

"என்னைகொ ரேழி யவர்கண் ணு நன்கில்லை
யன்னை முகனு [1]மதுவாகும்—பொன்னலர்
புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோ
நின்னல்ல தில்லென் றுரை." [ஐந்திணையெழு - ருஅ]

எனவரும். (உஉ)

ருகக. உயிரினுஞ் சிறந்தன் று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவ னுள்வழிப் படினுந்
தாவி னன்மொழி கிழவி கிளப்பினு
மாவகை பிறவுந் தோன்றுமன் பொருளே.

இதுவும் அது.

உயிரினும் நாண் சிறந்தது, அதனினும் குற்றந்தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்தது: என முன்னோர்கூற்றை யுட்கொண்டு தலைவனுள்ள விடத்துச் [2]செல்லலும் வருத்தமில்லாச் சொல்லைத் தலைவி சொல்லுதலுமாகிய அவ்வகை பிறவுந்தோன்றும் அவை பொருளாம் என்றவாறு.

மன் ஆக்கத்தின்கண் வந்தது. எனவே இவ்வாறு செய்தல் பொ[ரு]ளல்லு என்று கூறற்க என்றவாறு. இதனுள் நாணத்தினும் கற்புச் சிறந்ததென்றவாறு.

நொதுமலர் வரைவு நோக்கிக் கூறுவது:—

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீழ்ந்துக் காஅங்குத்
தாங்கு மளவை தாங்கிக்
காம நெரிதரக் கைநில் லாதே." [குறுந் - ருசக]

"கோடீ ரிலங்குவளை நெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
யீங்கிவ ணுறைதலு முய்குவ மாங்கே
யெழுவினி வாழியென் னெஞ்சே முனஅது
குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தே[எ]த்தா ராயினும்
வழிபடல் சூழ்ந்திசி னவருடை நாட்டே." [குறுந் - யக]

இது காமக்கிழவ னுள்வழிப் படுதல்.

தாவில் நன்மொழி கூறியதற்குச் செய்யுள்:—

"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங்

(பிரதி)— 1. மிகதாளா நாமினிப். 2. செல்லவும்.

கொடிய ரல்லரெங் குன்றுகெழு நாடர்
பசைஇய பசந்தன்று நுதலே
ஞெகிழிய ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே." [குறுந் - அ௭]

எனவரும். (உ௩)

௱க௨. நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉ
முணர்ச்சி யேழினு முணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொரு ணாட்டத் தானுங்
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினு முலகுரைத் தொழிப்பினு
மருமையி னகற்சியு மவளறி வுறுத்துப்
பின்வா வென்றலும் பே[ ]தமை யூட்டலு
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலு
மஞ்சியச் சுறுத்தலு முரைத்துழிக் கூட்டமொ
டெஞ்சாது கிளந்த விருநான்கு கிளவியும்
வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணங் குறித்த காலையும்
புணர்ந்தபின் னவன்வயின் வணங்கற் கண்ணுங்
குறைந்தவட் படரினு மறைந்தவ ளருகத்
தன்னொடு மவளொடு முன்னமுன் றளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினு
நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினு.
மெண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தினும்
புணர்ந்துழி யுணர்ந்த வறிமடச் சிறப்பினு
மோம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணுஞ்
செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினு
மென்புகைப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
யன்புதலை யடுத்த வன்புறைக் கண்ணு
மாற்றது தீமை யறிவுறு கலக்கமுங்
காப்பின் கடுமை கையற வரினுங்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதன் மிகுதி யுளப்படப் பிறவு
நாடு மூரு மில்லுங் குடியும்
பிறப்புஞ் சிறப்பு மிறப்ப நோக்கி

யவன்வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ
யனைநிலை வகையான் வரைதல் [1]வேண்டினு
மையச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினு
மவள்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினு மவன்வரைவு மறுப்பினும்
முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோர்க் கடாவல் [2]வேண்டினு
மாங்கதன் றன்மையின் [3]வன்புறை யுளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையினுந்
தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன.

என்றது களவொழுக்கத்தின்கண் தோழிக்குரிய கிளவியெல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

நாற்றமு...நாட்டத்தானும்என்பது—நாற்றமுதலாகச் சொல்லப்பட்ட எழினும் புணர்ச்சிக்கு முந்துற்ற நிலைமையை உட்கொண்டுவரும் மனநிகழ்ச்சி யேழினும் புணர்ச்சி யுண்மையறிந்த பின்றை மெய்யினானும் பொய்யினானுந் தலைவி குலத்தினுள்ளார் நிலைமை யிற் பிழையாது பலவாகி வேறுபட்ட கவர்த்த பொருண்மையையுடைய ஆராய்தற் கண்ணும் என்றவாறு.

நாற்றம் என்பது—பூவினானுஞ் சாந்தினானும் தலைவன் மாட்டுளதாகிய கலவியால் தலைவிமாட்டுளதாய நாறுதல்.

தோற்றம் என்பது—புணர்ச்சியான்வரும் பொற்பு.

ஒழுக்கம் என்பது—ஆயத்தாரொடு வேண்டியவா றொழுகுதலன்றித் தன்னைப் பேணியொழுகுதல்.

உண்டி என்பது—உண்ணும் அளவிற் குறைதல்.

செய்வினை மறைத்தல் ஆவது—பூக்கொய்தலும் புனலாடலும் போலும் வினைக ளைத் தோழியை மறைத்துத் தனித்து நிகழ்த்துதல். அன்றியும் தலைவன்செய்த புணர்ச்சி யாகிய கருமத்தினைப் புலப்படவிடாது தோழியை மறைத்தலும் என்றுமாம்.

செலவினும் என்பது—எத்திசையினும் சென்று விளையாடுவாள் ஒருதிசையை நோக்கிச் சேறல்.

பயில்வினும் என்பது—ஓரிடத்துப் பயிலுதல்.

புணர்ச்சி எதிர்ப்பாடு ஆவது—புணர்வதற்கு முந்துற்றகாலம்.

உள்ளுறுத்தல் ஆவது—உட்கோடல்.

உணர்ச்சி எழாவது—நாற்ற முதலாகச் சொல்லப்பட்டவற்றால் வரும் மனநி கழ்ச்சி எழும்.

பல்வேறு கவர்பொருள் நாட்டம் என்பது—ஒன்றோடொன்று ஒவ்வாத வேறு பாட்டனவாகி இருபொருள் பயக்கும் சொற்களாலே யாராய்தல்.

(பிரதி)—1. வேண்டியு. 2. வேண்டியு. 3. வன்பொறை.

அவற்றுள் சிலவருமாறு:—

"கண்ணுஞ் சேயரி பரந்தன்று நுதலு
நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே
வாங்கமை மென்றோண் மடந்தை
யாங்கா யினள்கொ லென்னுமென் னெஞ்சே." [சிற்றெட்டகம்]

இது தலைவி தோற்றங்கண்டு பாங்கி கூறியது. பிறவும் அன்ன.

துறையுறற் கெதிரிய கிழவனை மறையுற என்பது—களவொழுக்கத்தின் கண்ணே யுறுதற்காகத் தனது குறையைச் சொல்லவேண்டி எதிர்ப்பட்ட தலைவனை யென்றவாறு.

மறையுற என்பதனை முன்னே கூட்டுக.

பெருமையிற் பெயர்ப்பினும் என்பது—தலைவனது பெருமையான் நீக்கலும் என்றவாறு.

"இவளே, கான னண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்க வுள்புக்கு
மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வர் காதன் மகனே
நிணச்சுற வறுத்த வுணங்கல் வேண்டி
யினப்புள் ளோப்பு மெமக்குநல னெவனோ
புலவு நாறுதுஞ் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ வன்றே
யெம்ம னோரிற் செம்மலு முடைத்தே." [நற்றிணை - ௪௫]

எனவரும்.

உலகுரைத் தொழித்தல் என்பது—உலகத்தார் மகட்கொள்ளுமாறு கொள்ளெனக் கூறுதல்.

"கோடு புரெல்வளைக் கொழுமடற் கூந்த
லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்
றெண்கழி[ச்] சேயிறாப் படூஉந்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ." [ஐங்குறு - ௨௬௬]

இன்னும் உலகுரைத் தொழித்தல் என்றதனாற் கையுறைமறையுங் கொள்க.

"நீடுநீர்க் கான னெருநலு நித்திலங்கொண் டைய வந்தீர்
கோடுயர் வெண்மணற் கொற்கையெம் மூரிவற்றாற் குறையிலேமியா
மாடுங் கழங்கு மணிவிளக்கு மம்மனையும்
பாடி யவைப்பனவும் பந்தாடப் படுவனவும் பனிநீர்முத்தம்."

அருமையின் அகற்சியும் என்பது—தலைவியைக் கிட்டுதற்கு அருமைகூறியகற்றுதல்.

உதாரணம்:—

“நெருநலு முன்னு ளெல்லையு மொருசிறைப்
புதுவை யாகலி னதற்கெய்த நா[ணி]
நேரிறை வளைத்தோணின் றோழி செய்த
வாருயிர் வருத்தங் களையா யோவென
வெற்குறை யுறுதி ராயிற் சொற்குறை
யெம்பதத் தெளிய வல்ல ளெமக்கோர்
கட்காண் கடவு ளல்லளோ பெரும
வாய்கோ[ன்] மிளகின் மலயங் கொழுங்கொடி
துஞ்சுபுலி வரிப்புறந் தைவரு
மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே.”

எனவரும்.

அவளறி வுறுத்துப் பின்வாவென்றலும் என்பது—நின்னாற் காதலிக்கப்பட்டாட்குச் சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டுவா என்றவாறு.

அவற்றுள், நீயே சென்று அறிவி என்றதற்குச் செய்யுள்:—

“தன்னையுந் தானுணுஞ் சாயலாட் கீதுரைப்பி
னென்னையு நாணப் படுங்கண்டா - யென்னைய
வேயேர்மென் றோளிக்கு வேறு யினியொருநா
ணீயே யுரைத்து விடு.”

பின்வா வென்றற்குச் செய்யுள்:

“நாள்வேங்கை பொன்விளையும் நன்மலை நன்னாட
கோள்வேங்கை போற்கொடிய ரென்னையர் - கோள்வேங்கை
யன்னையா[ல்] வேங்கை யருந்தழையா மேலாமைக்
கென்னையோ நாளை யெளிது.” [திணைமாலை - உ௰]

எனவரும்.

பேதைமை யூட்டல் என்பது—நேரினும் அவள் அறிவாளொருத்தியல்லள் என்று தலைவற்குக் கூறல்.

உதாரணம்:—

“நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி - யெறிந்துழுது
செந்திணை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு.” [திணைமாலை - உசு]

இன்னும், பேதைமை யூட்டல் என்பதனால் தோழி தான் அறியாள் போலக் கூறுதலுங் கொள்க.

உதாரணம்:—

“புன்றலை மந்திக் [1]கல்லா வன்பறழ்
குன்றுழை நண்ணிய முன்றிற் போகா

---

(பிரதி)—1. கல்லார்.

தெரியகைந் தன்ன வீததை யிணர
வேங்[ை]கயம் படுசினைப் பொருந்திக் கைதைய
தேம்பெய் தீம்பால் வெளவலிற் கொச்சிடி
யெழுதெழில் சிதைய வழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயின்
1மாரியங் கிடங்கி னீரிய மலர்ந்த
பெயலுறு நீலம் 2போன்றன விரலே
3பாஅ யவ்வயி றலைத்தலி னுனே
தேர்மழை தவழுங் கோடுயர் பொதியி
னோங்கிருஞ் சிலம்பிற் பூத்த
காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே." [நற்றிணை - ௩௭௯]

எனவரும்.

**மூன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்** என்பது—முன்னுறு புணர்ச்சி முறையே நிறுத்துக் கூறலும் என்றவாறு.

நிறுத்துக் கூறலாவது நீங்கவிடாது உடன்பட்டுக்கூறல். இன்னும், முன்புகூடினாற் போலக் கூடவமையுமென்று கூறுதல். உதாரணம் வந்த வழிக்காண்க.

**அஞ்சி அச்சுறுத்தலும்** என்பது—தான் அச்சமுற்று அஞ்சின தன்மையைத் தலைவற்கு அறிவித்தலும் என்றவாறு. அது யாய் வருவளென்றானும் தமையன்மார் வருவரென்றானும் காவலர் வருவரென்றானும் கூறுதல்.

உதாரணம்:—

"யானை யுழலு மணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரே
மேன லுழையர் வரவுமற் றென்னைகொல்
காணினுங் காய்வ ரெமர்." [திணைமொழி - ௬]

எனவரும்.

**உரைத்துழிக் கூட்டமோடு** என்பது—நின்னாற் காதலிக்கப்பட்டாள் யாவள் என வினயவழி இத்தன்மையாள் எனச் சொல்லக்கேட்ட தோழி அவளும் நின் தன்மையாள் என இவனோடு கூட்டியுரைத்தலும் என்றவாறு.

ஒடு எண்ணின்கண் வந்தது.

உதாரணம்:—

"நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்
பொறிமாண் வரியலவ னாட்டலு மாட்டா
டிருநுதல் வேரரும்பச் சிந்தியா நின்றாட்
செறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் சேர்கேன்."

எனவரும்.

**எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்** என்பது—ஒழியாது கூறிய எட்டுக்கூற்றும் என்றவாறு. முன்னைப் புணர்ச்சிமுறை யறிந்தாளாதலின் அவன் இரந்து பின்னின்றுழி ஈண்டுக் கூறிய வெல்லாம் அவன் உள்ளக்கருத் தறியுந்துணையும் தழீஇக் காண்டு

(பிரதி)—1. மாதயங். 2. போன்றல. 3. பாயறுவயறலைதவலி.

கூறினல்லது ஒழித்தல் பொருளாகக் கூறுள் என்பது கொள்ளப்படும். இவையெட்டும் குறையுற வுணர்தலின் பகுதி.

வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணங் குறித்த காலையும் என்பது—மாயம் சொல்லிவந்த கிழவனைத் தலைவி பொறுத்தகாரணம் குறித்தகாலையும் தோழி கூற்று நிகழும் என்றவாறு.

அவ்வழித் தலைவன்குறிப்பும் தலைவிகுறிப்பும் உணர்தலும் தலைவன் கேட்டதற்கு மாற்றம் கூறுதலு முளவாம். மாயம் செப்பிவந்த கிழவன் என மாற்றுக. மாயம் செப்புதலாவது யானை போந்ததோ மான் போந்ததோ எனக்கூறல்.

"இரந்து குறையுறாது கிழவியுந் தோழியு
மொருங்குதலைப் பெய்த செவ்வி நோக்கிப்
பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து
மதியுடம் படுத்தற்கு முரிய னென்ப" [இறையனாரகப் - ௬]

என்பதனாற் குறையுற வுணர்தல் நிகழ்ந்துழி இது நிகழாதென்று கொள்க.

அதன்கட் குறிப்புணர்வதற்குச் செய்யுள்:—

"வேங்கை மலரும் வெறிகமழ் தண்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மகளிரேஞ்
சோர்ந்த குருதி யொழுகமற் றிப்புனத்திற்
போந்த திலையக் களிறு." [திணைமொழி - அ]

எனவும்,

"நெடுந்தேர் கடைஇத் தமியராய் நின்று
கடுங்களிறு காணீரோ வென்றீர் - கொடுங்குழையார்
யானை யதருள்ளி நிற்பரோ தம்புனத்து
ஏனற் கிளிகடிகு வார்."

எனவும்,

"எனல் காவ லிவளு மல்லள்
[மான்வழி வருகுவ னிவனு மல்ல
னரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே
நம்முன் னாணினர் போலத் தம்முண்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
வுள்ளத் துள்ளே மகிழ்ப]
சொல்லு மாடுப கண்ணி னானே."

எனவும்,

குறிப்புணர்ந்து இருவருமுள்வழி அவன்வர வுணர்தல்.

புணர்ந்தபின் னவன்வயின் வணங்கற் கண்ணும் என்பது—மேற்சொல்லப்பட்ட மூவகையானும் புணர்ச்சியுண்மை பொருந்தியபின் தலைவன்கண் தாழ்நிற்றற் கண்ணும் என்றவாறு.

அது நீ கருதியது முடிக்கற்பாலை எனவும் நீ இவளைப் பாதுகாத்தல் வேண்டுமெனவும் இவ்வகை கூறுதல்;

தாரணம்:—

"அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த
வரவுவின் மேலசை கையை யொராங்கு
நிரைவளை முன்கையென் றோழிநெறி நோக்கிப்
படுகிளி பாயும் பசுங்குர லேனல்
கடிதன் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுள்ள லோம்புதல் வேண்டும்
... ... ...
கடுமா கடவு[றூஉ]ங் [கோல்போ] லெனைத்துங்
கொடுமையிலை யா[வ] தறிந்து மடுப்பல்
வழைவளர் சாரல் [1]வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
யுழையிற் [2]பிரியிற் பிரியு
மிழையணி யல்குலென் றோழியது கவினே." [கலித் - ௫௰]

எனவரும்.

**துறைந்து அவட்படரினும்** என்பது—மேல் தலைவன் புணர்ச்சியுண்மை யறிந்து தாழநின்ற தோழி தானுங் குறையுற்றுத் தலைவிமாட்டுச் செல்லுதற்கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

இக் கிளவி இரந்து பின்னின்ற தலைவன் உள்ளப்புணர்ச்சியுள்வழியும் குறை யுற்று மெய்யுறுபுணர்ச்சி வேண்டித் தலைவிமாட்டுச் செல்லுங்காலத்தும் ஒக்கும்.

உதாரணம்:—

"வளையணி முன்கை வாலெயிற் றின்னகை
யிளைய ராடுந் தழையவிழ் கானற்
[3]குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தே ரண்ணலைக் கண்டிகும் யாமே." [ஐங்குறு - ௱௯௮]

எனவரும்.

**மறைந்து அவள் அருகத் தன்னொடும் அவளோடும் முன்னம் மூன்தளைஇப் பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்** என்பது—மேல் தலைவன்மாட்டுத் தோழி குறைநயப் பிக்கச் சென்றவழித் தோழிசொல்லும் குறிப்புமொழிக்கு அவள் மறைந்து அரியளாகத் தன்னொடும் அவளொடும் குறிப்பினை முன்னர்த் தடுத்துக்கொண்டு வழிபட்டு முயலும் பல வேறு பக்கத்தின் கண்ணும் தோழிகூற்று நிகழும் என்றவாறு.

மறைத்தலாவது—தன்மனத்து நிகழ்ச்சியை ஒளித்தல். அருகுதலாவது—இசை விலாதாரைப்போல நிற்றல். முன்னமுன் தளைதலாவது—கூற்றினொ[ன]ன்றிக் குறிப்பி னுணர்தல். முதன்மூன் றளைஇ என்று பாடமாயின், மனத்தினும் மொழியினும் உடம்பினும் [ஒருங்கே] அளவி என்றுமாம். பின்னிலை நிகழும் பல்வேறு மருங்காவது— வழிபாடு கொடுவருங் கூற்றுவேறுபாடு. எனவே தலைவிக்குத் தை[ழ]யும் கண்ணியும் கொண்டு ஒ]ருவன் நம் புனத்தயல் வாராநின்றான் எனவும், அவன் என்மாட்டு ஒருகுறை யுடையன் போலும் எனவும், அருளுவார்க்கு இஃது இடமெனவும், அவன் [குறை மறப்பின்

(பிரதி)— 1. வரிவளைநன்மாண். 2. பிரியுற்றுறையு. 3. சறுந்துறை.

மடலேறுவல் எனக்கூறிப்] போந்தான் பின்பு வரக்கண்டிலேன் எனவும், இரங்கு கூறுதல். அவைவருமாறு:—

"புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரற்
றினைகாத் திருந்தேம்யா மா[க—வினைவாய்]த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு." [ஐந்திணையைம் - ௰௪]

எனவும்,

"நெய்யொடு மயக்கிய வுழுத்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் றலையது
செயலை[யம் பகைத்]தழை வாடு மன்னாய்." [ஐங்குறு - உ௧௧]

எனவும்,

"இலைசூழ்செங் காந்த ளெரிவாய் முகையவிழ்த்த வீர்ந்தண் வாடை
கொலைவே னெடுங்கட் கொடிச்சி கதுப்புளரும் குன்றநாட
னுலைபடு வெந்நோ யுழக்குமா லந்தோ
முலையிடை நேர்பவர் நேரு [1]மிடனிது மொய் குழலே."

[எனவும்,]

"புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர்ததையும் பூங்கான லென்னையு நோக்கி
யுணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர்ப்பன்
வணர்சுரி யைம்பாலாய் வண்ண முணரேனால்."[சிலப்-கானல்-௩௧.]

எனவும்,

"தன்குறையீ தென்னான் றழைகொணருந் தண்சிலம்பி
னின்குறை யேநா னினைப்பினும்—பொன்குறையு
நாள்வேங்கை நீழலு நண்ணா னெவன்கொலோ
கோள்வேங்கை யன்னான் குறிப்பு." [திணைமாலை - ௩௧]

எனவும்,

"ஒருநாள் வாரல னிருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி
நன்னர் நெஞ்ச நெகிழ்ந்த பின்றை
வரைமுதிர் தேனிற் போகி யோனே
யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வேறுபுல நன்னாட்டுப் பெய்த
வேறுடை மழையிற் கலிழுமென் னெஞ்சே."[குறுந்தொகை-௱௭௬]

எனவும்,

"மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி
யம்மலைக் கிழவ [2]னெந்நயந் [தென்று]ம்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொற் றேறாய்
நீயுங் கண்டு நுமரோ டெண்ணி

(பிரதி)—1. மிடனே. 2. னன்னயத்.

யறிவறிந் தளவல் வேண்டு மறுதரற்
கரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பி [னல்ல]து
நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே." [நற்றிணை - ௩௨]

எனவும் வரும்.

நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினும் என்பது—தலைவி குறைநயந்தமை பெற்றவழி அத் தலைவி நயம்பொருந்து மிடத்தினுங் கூற்று நிகழும் என்றவாறு.

தலைமகள் குறைநயந்தமை தலைமகற்குக் கூறிய செய்யுள்:—

"நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பன
[நின்குறி வந்]தன னியறேர்க் கொண்க
செல்கஞ் செலவியங் கொண்மோ வைகலு
மார லருந்திய வயிற்ற
நாரை மிதிக்கு மென்மக ணுதலே." [குறுந் - ௱௬௪]

எனவும்,

"கடும்புலால் புன்னை கடியுந் துறைவ
வடும்புலால் புட்கடிவாள் புக்க—தடம்புலாந்
தாழைமா ஞாழற் றதைந்துயர்ந்த தாழ்பொழிலே
யேழைமா னேக்கி யிடம்." [திணைமாலை - ௬௪]

[எனவும் வரும்.]

இன்னும் [நயம்புரி யிட]த்தும் என்றதனல் களவொழுக்கம் நிகழாநின்றுழிக் கூறுங் கூற்றும் ஈண்டே கொள்க. அது தலைவன்வருமெனவும் வந்தா னெனவுங் கூறுதலும் தலைமக[ன் பகற்குறிக்கண்] நீங்கியவழிக் கூறுதலும் எனப் பலவாம்.

"கவர்பரி நெடுந்தேர் மணியு மிசைக்கும்
பெயர்பட விலங்கிய விளையரு மொலிப்பர்
கடலாடு வியலணிப் பொலிந்த நறுந்தழை
[திதலை யல்கு]ல் நலம்பா ராட்டிய
வருமே தோழி வார்மணற் சேர்ப்ப
னிறைபட வாங்கிய முழவுமுதற் புன்னை
மாவரை மறைகம் வம்மதி பானாட்
பூவிரி [கானற் புணர்குறி] வந்துநம்
மெல்லிணர் நறும்பொழிற் காணு
வல்லரும் பட[ே]ர காண்கநாஞ் சிறிதே." [நற்றிணை - ௩௦௭]

இது வருகின்றான் எனக்கூறியது.

"[நிலவு மணி]றந்தன் றிருளும் பட்டன்
றோவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன நிற்புறங் காக்குஞ்
சிறந்த செல்வத் தனையு[ந் துஞ்சினள்]
[கெ]டுத்துப்பெறு நன்கல மெடுத்துக்கொண் டாங்கு

நன்மார் படைய மூயங்கி [1]மென்மெலக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
கீழு [மேலுங் காப்]பார் [2]நீத்த
[3]வறுந்தலைப் பெயர்களிறு போலத்
தனியன் வந்தோன் பனியலை நீயே." [நற்றிணை - ௱௮௨]

இது வந்தான் எனக் கூறியது.

"நெய்தல் கூம்ப [நிழல்குண]க் கொழுகக்
கல்சேர் மண்டிலஞ் சிவந்து சினந்தணியப்
பல்பூங் கானலும் பல்குற் றன்றே
யினமணி யொலிப்ப [4][ப் பொழுதுபடப்பூட்]டி
மெய்ம்மலி காமத் தியாந்தொழு தொழிய[த்]
தேருஞ் செல்புற மறைய வூரோ
டியாங்கா வதுகொ றூனே தேம்பட
வோ[தைவண் டிமிருங்]கோதை மார்பின்
மின்னவிர் பெரும்பூட் கொண்கனொ
டின்னகை மேவிநா மாடிய பொழிலே." [நற்றிணை - ௱௮௭]

இது பகற்குறிக்கண்... தலைவன் நீங்கியவழிக் கூறியது.

எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும் என்பது—எண்ணுதற்கு அரிய பலநகையாட்[டுக்களைத் தலைவனிடம் குறி]த்த வகையுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃது அலராகுமென்று கூறுதல். இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாயினால் அவ[ர்தூற்றி நகைப்பர]ாகலின் நகையாயிற்று.

உதாரணம்:—

"நிறையரியர் மன்னெளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்." [குறள் - ௲௱௩௮]

"அன்னையு மறிந்தன ளல[ரு மாயின்று
நன்மனை நெடு]நகர்ப் புலம்புகொள வுயிர்க்கு
மின்னா வாடையு மலையு
நும்மூர்ச் செல்க [5]வெழுகமோ தெய்யோ." [ஐங்குறு - உ௩௬]

எனவும் வரும்.

புணர்ச்சி வேண்டினும் என்பது—மேற்சொல்ல[ப்பட்ட பல்லாற்றானும் தலை வற்க]றிவுறுத்தவழிப் பின்னும் புணர்ச்சி வேண்டினும் ஆண்டுத் தோழி கூற்று நிகழும் என்றவாறு.

"நெய்யா லெரிநுதுப்போ மென்றற்றாற் கவ்வையாற்
காம நுது[ப்போ மெனல்.]" [குறள் - ௲௱௪௮]

"[இவளே,] நின்சொற் கொண்ட வென்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்கிளை யொருசிறைப்
புதுநல னிழந்து புலம்புமா ரிடையள்

(பிரதி)—1. மென்மேற். 2. நீர்க்க. 3. வருந்தலைப். 4. வொ...டி. 5. வெழுரே.

> உதுக்காண் டெய்ய வுள்ளல் [வேண்டும்]
> [நிலவு மிரு]ளும் போலப் புலவுத்திரைக்
> கடலுங் கானலுந் தோன்று
> மடற்றாழ் பெண்ணையஞ் சிறுநல் லூரே." [குறுந் - அக]

இது பின்னும் புணர்ச்சி வேண்டிய தலைவற்கு இடமுணர்த்தியது. இரவு வருவானைப் பகல் வாவென்றலும் பகல் வருவானை இரவு வாவென்றலுங் குறிபெயர்த்தலும் எல்லாம் ஈண்டே கொள்க.

> "ஊர்க்கு மணித்தே [பொய்கை பொய்கைக்]குச்
> சேய்த்து மன்று சிறுகான் யாறே
> யிரைதேர் வெண்குரு கல்ல தியாவதுந்
> துன்னல் போகின்றாற் பொழிலே யாமெங்
> கூழைக் கெரும[ணங் கொணர்கஞ் சே]று
> மாண்டும் வருகுவள் பெரும்பே தையே." [குறுந் - ௱கந]

இது பகற்குறி நேர்ந்தது. ஆண்டுத் தலைவிக்குக் கூறுமாறு:—

> "ஒலிவெள் ளருவி யோங்கும[லை நாடன்
> சிறுகட்] பெருங்களிறு வயப்புலி தாக்கித்
> தொன்முரண் சோலுந் துன்னருஞ் சோலை
> நடுநாள் வருதலும் வரூஉம்
> வடுநா ணலமே தோழி நாமே." [குறுந் - அஅ]

எனவரும்.

**வேண்டாப் பிரிவினும்** என்பது—புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டினும் என்றவாறு.

இது தலைவன் நெஞ்சினாற் பிரியானென்பதனன் வேண்டாப் பிரிவென்றார். அது தாளா...வென்பது அலராகுமென்று அஞ்சி ஒருவழித்தணத்தலும் ஒன்று. அவ்வழித் தலைவிக்கு உரைத்தனவும் [1]தலைவற்குரைத்தனவும் உளவாம். அவைவருமாறு:—

> "இறவுப்புறத் தன்ன பிணர்படு [2]தடவுமுதற்
> சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
> பெருங்களிற்று மருப்பி னன்ன வரும்புமுதிர்பு
> நன்மா [3]னுளையின் வேறுபடத் தோன்றி
> விழவுக்களங் கமழு முரவுநீர்ச் சேர்ப்ப
> வினமணி நெடுந்தோர் பாக னியக்கச்
> செலீஇய சேறி யாயி னிவளே
> வருவை யாகிய சின்னாள்
> வாழா ளாத லறிந்தனை சென்மே." [நற்றிணை - கக]

இது தலைவன் பிரிவு வேண்டியவழிக் கூறியது.

> "சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ
> மிருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்
> பெருந்தே னிறாலொடு [4]சிதறு நாடன்

(பிரதி)— 1. தலைவிக். 2. கடவுமுதற். 3. னுணையின். 4. வெற்பிறஞ் சிதறு.

பேரமர் மழைக்கண் கலிழத்தன்
சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்." [ஐங்குறு - உ௬௪]

இது தலைவிக்குஉரைத்தது.

"கானலம் பெருந்துறைக் [1]கலிதிரை திளைக்கும்
வானுய ரெறிமண லேறி யானாது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோ னெறிகட லூடே." [ஐங்குறு - ௱௬௬]

இது தலைவியை யாற்றுவித்[த]து.

"இருடிணிந் தன்ன வீர்ந்தண் கொழுநிழல்
நிலவுக் குவித்த[ன்ன] வெண்மண லொருசிறை[க்]
கருங்கோட்டுப் புன்னை[ப்] பூம்பொழில் புலம்ப
வின்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே." [குறுந் - ௱உ௩]

எனவும் வரும்.

வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தினும் என்பது—வேளாண்மையாவது உபகாரம். பெருநெறியாவது உபகாரமாகிய பெரியநெறி என்க. அதனைத் தோழி தலைவனை வேண்டிக் கோடற்கண்ணும் என்றவாறு.

"நெடுவேண் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்து
பைங்காற் கொக்கி னிறைபறை யுகப்ப
வெல்லை பையயக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழின் மழைக்கண் கலிழ விவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயன்
மாணலஞ் சிதைய வேங்கி யானா
தழறுடங் கினளே பெரும வதனாற்
கழிச்சுற வெறிந்த புட்டிர ளத்திரி
நெறிநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைய
வல்வி ளையரோ டெல்லி செல்லாது
[2]சேந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
யன்றி லகவு மாங்க[ண்
சிறுகு]ர னெய்தலெம் [3]பெருங்கழி நாட்டே." [அகம் - ௱உ0]

என்பதும்,

"நிலாவி [னி]லங்கும்" என்னும் அகப்பாட்டினுள்,

"[4]சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமு
மெம்வரை யளவையிற் பெட்குவம்
[5]நும்மொப் பதுவோமேவரி தெமக்கே." [அகம்-உ௱]

(பிரதி)— 1. கலிதிரை. 2. சேர்ந்தனை. 3. பெருங்கறி. 4. சேர்நகர்நீர். 5. நும் மொப்பது மெவரிதினெமதுக்கே.

என்பதும் கொள்க.

இதனாற் பயன் இல்லறம் நடத்தல்வேண்டும் என்பது.

**புணர்ந்துழி புணர்ந்த அறிமடச் சிறப்பினும்** என்பது—தலைவன் தலைவி புணர்ந்தவழி யாண்டுப் பொருந்திய அறிவுமடம்பட்ட சிறப்பின்கண்ணும் என்றவாறு.

அஃதாவது அல்ல குறிப்படுதல். அவ்வழியும் தோழி கூற்று நிகழும்.

"கொடுமுண் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த வொண்பூ
விடையி லிழுதொப்பத் தோன்றிப்—படையெல்லாந்
தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் தெளியாக் குறி." [ஐந்திணையைம் - ௪௬]

"இடுமணை லெக்க ரகன்கானற் சேர்ப்பன்
கடுமான் மணியரவ மென்று—கொடுங்குழையாள்
புள்ளரவங் கேட்டுக் கலிழ்ந்தாள் சிறுகுடியா
ருள்ளாய நாணுப வென்று." [ஐந்திணையெழு - ௫௬]

"அம்ம வாழியோ வன்னைநம் படப்பை
மின்னேர் நுடங்கிடைக் கின்னிழ லாகிய
புன்னை மென்காய் பொருசினை யரிய
வாடுவளி தூக்கிய வசைவிற் கொல்லோ
தெண்ணீர்ப் பொய்கையுள் வீழ்ந்தென
வெண்ணினை யுரைமோ வுணர்குவல் யானே."

எனவரும்.

**ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்** என்பது—ஓம்படுத்துதற் பொதிக்கண்ணுங் கூற்று நிகழும் என்றவாறு.

அஃதாவது ஒருவழித்தணக்கும்வழி ஓம்படை கூறுதல்.

"பெருநன் றாற்றிற் பேணரு முளரே
[1]யொருநன் றுடையா ளாயினும் [புரிமாண்டு
பு]லவி தீர [2]வளிமதி யிலைகவர்
பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரல்
மென்னடை மரையா துஞ்சு
நன்மலை நாட நின்னல திலளே." [குறுந் - ௱௧௫]

[எனவும்,]

"எறிந்தெமர் தாமுழுத வின்குர லேன[ன்]
மறந்துங் கிளியினமும் வாரா—கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவ னெஞ்சத்துட் கொண்டு." [ஐந்திணையைம் - அ]

[எனவும் வரும்.]

இதனுள் கிளிகடிய யாம் வாரேம் நீமறவா தொழிதல் வேண்டு மென்றவாறு.

**செங்கடு மொழியாற் சிதைவுடைத்தாயினு மென்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ அன்புதலை யடுத்த வன்புறைக்கண்ணும்** என்பது—செவ்விய

(பிரதி)—1. யொருகன். 2. வழிமதி.

கடிய சொல்லினானே தலைவன் அன்பு சிதைவுடைத்தாயினும் என்புருகுமாறு பிரியப்பட்டவளிடத்துச் சென்று தலைவன் அன்புடைமை [யின் அளிப்பன் என ஆ]ற்றுவித்த வற்புறுத்தற்கண்ணும் தோழிகூற்று நிகழும் என்றவாறு.

செங்கடுமொழி என்றது—கொடிய கடுமொழியே[ய]ன்றி மனத்தினான் இனி[யளாகிக்] கூறுங் கடுமொழி. அஃதாவது இயற்பழித்தல். அவ்வாறு இயற்பழித்தவழித் தலைவன் அன்பு சிதைவுடைத்தாயினும் என்றவாறு. அன்புதலைபடுத்த வன்புறை யாவது தலைவன் இன்றியமையான் என ஆற்றுவித்தல்.

இயற்பழித்தற்குச் செய்யுள்:—

"மாசறக் கழீஇய யானை [போலப்
பெரும்பெ]ய லுழந்த விரும்பிணர்த் துறுகற்
பைத லொருதலை சேக்கு நாட னீடு
நோய்[த]ந் தனனே தோழி
பசலை யார்ந்தனள் குவளைய[ங் கண்ணே.]" [குறுந் - கூ]

வன்புறைக்குச் செய்யுள்:—

"மகிழ்நன் மார்பே வெய்யை யெனநீ
யழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போகி[ய]
[ஒன் று] மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே." [குறுந் - எங]

"மெய்யிற் றீரா மேவரு காமமொ
டொய்யா யாயினு முரைப்ப றோழி
[கொய்]யா முன்னுங் குரல்வார்பு தினையே
யருவி யான்ற பைங்கா றோறு
மிருவி தோன்றின பலவே நீயே
முருகு முரண்கொள்ளுந் தே[ம்பாய் கண்]ணி[ப்]
பரிபன் னயொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலோ [1]டமைந்தனை யாழநின்
றோட்கெழு தொடலை நுடங்க வெ[ழுந்தெழு]ந்து
கிள்ளைத் தெள்விளி [யிடை]யிடைப் பயிற்றி
யாங்காங் கொழுகா யாயி னன்னை
சிறுகிளி கடித றேற்று ளிவளெனப்
பிறர்த்த[ந்து நிறுக்குவ] ளாயி
னுறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே." [அகம் - உஅ]

ஆற்றுவித்தற்குச் செய்யுள்:—

"குறுங்கை யிரும்புலி கோள்வ லேற்றை
நெடு[ம்புதற் கானத்து] மடப்பிடி யீன்ற
நடுங்குநடைக் குழவிகொளீஇய [2]பலவின்
பழந்தூங்கு கொழுநிழ லொளிக்கு நாடற்குக்
கொய்திடு [தளிரின் வாடி] நின்
மெய்பிறி தாக லெவன்கொ லன்னாய்" [ஐங்குறு - உ௱௬௬]

(பிரதி)—1. டமைந்தன. 2. பலவின்கொ.

"அழிய லாயிழை யன்புபெரி துடையன்
பழியு மஞ்சு[ம்] பயமலை நாட
னில்லா [மையே நிலையிற்] றுகலி
னல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்
தங்குதற் குரிய தன் [று நின்]
[அங்கலு]ழ் மேனிப் பா[அ]ய பசப்பே." [குறுந்தொகை - ௱சஅ]

[எனவும்,]

"பெருங்கை யிருங்களி றைவன மாந்திக்
கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சுஞ்
சுரும்பிமிர் சோலை [மலைநாடன்] கேண்மை
பொருந்தினர்க் கேமாப் புடைத்து." [ஐந்திணையெழு - ௰உ]

[எனவும் வரும்.]

ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் ... வரைதல் வேண்டியும் என்பது—தலைவன் வருநெறியினது தீமையைத் தாங்கள் அறிவுற்றதனுன் எய்திய கலக்கத்தானும் காவற் கடுமை வரையிறந்ததனுனும் குறியிடமும் காலமுமாகத் தாங்கள் வரைந்த நிலைமையை விலக்கித் தலைவி காதன் மிகுதல் உட்படப் பிறவுந் தலைவனது நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் மிகுதியும் நோக்கித் தலைவன்மாட்டுக் கிளக்குங் கிளவியோடே கூட அத்தன்மைத்தாகிய நிலவகையினுனே வரைதல்வேண்டியும் தோழி கூறும் என்றவாறு.

அவற்றுள், ஆறின்னுமை கூறியதற்குச் செய்யுள்:—

"சாரற் புனத்த பெருங்[குரற் சிறு]தினைப்
பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்
சோலைச் சிறுகிளி யுண்ணு நாட
வாரிருள் பெருகின் வாரல்
கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே." [ஐங்குறு - உஅஉ]

காப்பு வரையிறந்ததற்குச் செய்யுள்:—

"பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்
துரவுக்களிறு போல்வந் திரவுக்கதவு மு[யறல்]
[கேளே மல்லேங்] கேட்ட[ெ]னம் பெரும
வோரி முருங்கப் [1]பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியா
முயங்குதொறு முயங்கு மறனில் [யாயே]." [குறுந்தொகை - உ௪௪]

[எனவும்,]

"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காம[ர்] மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி

(பிரதி)—1. பலி.

டயாங்குவரை [யடுக்கத்துப்] பாய்ந்துயிர் செகுக்குஞ்
சாரனுட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே." [குறுந் - சுக]

[எனவும் வரும்.]

காதன் மிகுதி கூறியதற்குச் செய்யுள்:—
"வேரல் வேலி [வேர்க்கோட் பலவின்
சாரனுட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவ
ளுயிர்தவச் சிறிது] காமமோ பெரிதே." [குறுந்-௰அ]

பிறவும் என்றதனான் தலைவனைப் பழித்தலுங் கொள்க.
"நெடுவரை மிசையது குறுங்[கால் வருடை]
தினைபாய் கிள்ளை வெருவு நாட
வல்லைமன் றம்[ம] பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே." [ஐங்குறு - உஅஎ]

இது தலைவனை[ப் பழித்தது.]

"குன்றக் குறவன் காதன் மடமகள்
மென்றோட் [1]கொடிச்சியைப் பெறற்கரி[து] தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலவர்
[புன்புல மயக்]கத்து விளைந்தன தினையே." [ஐங்குறு-உசுா]

[இது புனக்காவலினி யின்றென்றது.]

"கொடிச்சி யின்குரல் [2]கிளைசெத் தடுக்கத்துப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
காவலுங் [கடியுநர் ]போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மே." [ஐங்குறு - உஅக]

[இது குரவரியல்பு உணர்த்தி வரைக வென்றது.]

"வெறிகமழ் வெற்பனெம் மெய்ந்நீர்மை கொண்ட
தறியாள்மற் [3]றன்னோ வணங்கணங்கி[ற்] றென்று
[4]மறியீர்த்துதிரந்தாய் வேலற் றரீஇ
வெறியோ டலம்வரும் யாய்." [ஐந்திணையைம் - உ௰]

[இது வெறி யச்சுறுத்தியது.]

"இனமீ னிருங்கழி யோத [5]முலாவ
மணிநீர் பரிக்குந் துறைவ தகுமோ
குணநீர்மை குன்றாக் கொடியன்னாள் பக்க
நினைநீர்மை யில்லா வொழிபு." [திணைமொழி - சச]

(பிரதி)— 1. கொட்புச் சிறையைப். 2. கிளைசேர்த். 3. றன்னை. 4. மறியீர்தன னோர்ந்தாய. 5. முதலாவ.

[இஃதருளல் வேண்டு மென்றது.]

இன்னும் பிறவும் என்றதனால் தலைமகள் தன்னை யழிந்தமை கூறுதலுந் தலைவன் மாட்டு வரு மிடையூறு அஞ்சுதலுங் கொள்க. அது வருமாறு:

"நன்னெவ்வங் கூரினு நீசெய்த வருளின்மை
யென்னையு மறைவித்தா ளென்றோழி யதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூற ற[ஞ]ணி." [கலித்-சச]

இது தலைமகள் தன்னை அழிந்ததற்கண் வந்தது.

"கரைபொரு கானியாற்றங் [கல்லத ரெம்முள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
நரையுருமே றுங்கைவே லஞ்சுக நும்மை
வரையர மங்கையர் வவ்வுத லஞ்சுதும்] வாரலையோ."

இஃது அவனூறு அஞ்சுதற்கண் வந்தது.

நாடுமுதலாயின சுட்டித் தலைவன்மாட்டுத் தோன்றுங் கிளவியாவன—நீ இத்தன்மைத்தாகிய நாட்டையுடையை: இத்தன்மைத்தாகிய நகரையுடையை: இத்தன்மைத்தாகிய இல்லையுடையை: இத்தன்மைத்தாகிய குடிப்பிறப்பை யுடையை: இத்தன்மைத்தாகிய சிறப்பையுடையை: என அவற்றின் மிகுதிபடக் கூறுதல். அவை வருமாறு:—

"கோழிலை வாழை" என்னும் நெடுந்தொகைப் பாட்டினுள்,

"[குறியா] வின்ப மெளிதி [1]னின்மலைப்
பல்வேறு விலங்கு [2]மெய்து நாட
குறித்த வின்ப நினக்கெவ னரிய."

என நாடு சுட்டிவந்தது.

"காமங் கட[ப்ப வுள்]ள மிளைப்ப
யாம்வந்து காண்பதோ பருவ மாயி
னோங்கித் தோன்று முயர்வரைக்
கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ." [ஐங்குறு - உ௩எ]

இது ஊர்பற்றி வந்தது.

"கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடிநெகிழ்ந் தாளழத் துறப்பாயான் மற்றுநின்
குடிமைக்கட் [3]பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ"

இது குடிமைபற்றி வந்தது.

"ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்
வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ"

"திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்
புகழ்மைக்கட் பெரியதோர் புகராகிக் கிடவாதோ" [கலித் - ௱௩௫]

(பிரதி)—1. னின்மனைப். 2. மெய்த. 3. பேரினத்தாற்.

'தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்திளை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி வாழ்நரே." [கலித் - ருஉ]

பிறவு மன்ன.

ஐயச் செய்கை தாய்க் கெதிர்மறுத்துப் பொய்யென மாற்றி மெய்வழிக் கோடப்பினும் என்பது—தலைவிக்குப் பிறரோடு கூட்டமுண்டெனச் சொல்லி ஐயுற்ற வழி அதனை மறுத்துத் தலைவி செய்த செய்கையைப் பொய்யென நீக்கிப் பிறிதோர் ஆற்றான் மெய்வழிக்சட்படுத்தினும் என்றவாறு.

அஃதாமாறு தலைவி குறிவழிச் செல்கின்றதனைக் காண்டல்.

"உருமுரற்று [1]கருவிய பெருமழை தலை[இப்]
பெயலான் றவிந்த தூங்கிரு ணடுநாண்
மின்னு ணிமிர்ந்த கனங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
வரையிழி மயிலி னொல்குவன ளொதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
வலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்
சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தான்வேண் டுருவி னணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலு முண்டே யிவடான்
சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவுற
மன்ற மரா[அ]த்த கூகை குழறினும்
நெஞ்சழிந் தரணஞ் [2]சேரு மதன்றலைப்
புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
முருகி னன்[ன] சீற்றத்துக் கடுந்திற
லெந்தையு மில்லா னுக
வஞ்சுவ ளல்லளோ விளைது செயலே." [அகம் - ௱ருஅ]

எனவரும்.

"வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற்—றூங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தவாஞ் சேயரிக்கண் டாம்." [ஐந்திணையைம் - ௰ரு]

[என்பதும் அது.]

அவள்விலங்குறினும் ... தாயிடைப்புதுப்பினும் என்பது—தலைவி காப்புமிகுதியானுங் காதன் மிகுதியானும் நொதுமலர் வரைவினானும் [தமர்வரைவுமறு]த்ததினானும் வேறுபட்டவழி இஃது எற்றினான் ஆயிற்று எனச் செவிலி அறிவரை வின[அ]ய்க் குறி பார்க்கும் இடத்தினும், அஃதன்றி வெறியாட்டிடத்தினும், பிறர்வரைவு வந்துழியும்

(பிரதி)— 1. கருவியல். 2. சேருந் தன்றலைப்.

அவன் வரைவு மறுத்தவழியும், முன்னிலைவகையானுதல் அறத்தொடுநிலை வகையானுதல் இவ்விருவகை யானுந் தலைவற்குந் தலைவிக்குந் தனக்குங் குலத்திற்குங் குற்றந் தீர்ந்த கிளவியைத் தாய்மாட்டுப் புகுதவிடுத்தலும் என்றவாறு.

புகுதவிடுத்தலாவது நிரம்பச் சொல்லாது தோற்றுவாய் செய்தல்.

அந்நால்வகைப் பொருளினு முன்னிலைக் கிளவி வருமாறு:—

"பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலு
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ
ளுண்டகை விறல்வே [ளல்]லணிவெள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே." [ஐங்குறு - உ௯௪]

இது குறிபார்த்தவழிக் கூறியது: கழங்கு முன்னிலையாக.

"அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயி
னென்பயஞ் செயுமோ வேலற்கு வெறி[யே]ய." [ஐங்குறு-உ௪௪]

[இது தலைவி யைமுன்னிலையாகக் கூறியது.]

"நெய்த னறுமலர்ச் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்பி
னருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கொண்டிவ ளணங்கி [யே]யானே." [ஐங்குறு-௱அஉ]

இது வேலனை முன்னிலையாகக் கூறியது.

"கடவுட் [1]கற்சுனை யடைவிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி யொண்பூ வுருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பக் குறமக
ளருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங் கன்மை யறிந்து மண்ணூந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே." [நற்றிணை - ௩௪]

இது [முருகனை] முன்னிலையாகக் கூறியது. பிறவுமன்ன.

"அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடற்
றிரைதரு முத்தம் வெண்மண லிமைக்குந்
தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினுஞ் சிறந்தன்று கண்டிசி னுதலே." [ஐங்குறு-௱ரு]

இது முன்னிலைப்பகுதி: நொதுமலர்வரைவுபற்றி வந்தது.

(பிரதி)—1. கிதனை.

"குன்றக் குறவன் காதன் மடமக
ளணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாகிற்
றொடுத்தன மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுதல் துயரே." [ஐங்குறு - உ௫அ

இஃது அவன்வரைவு மறுத்துழிக் கூறியது.

இனி, அறத்தொடுநிலைப் பகுதி யெழுவகைப் படும். அவையாமாறு:

"எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுத லுசாவுத லேதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
யவ்வெழு [1]வகைய வென்மனார் புலவர்." [பொருளியல் - ௰உ

எனப் பொருளியலுட் கூறிய சூத்திரத்தானே கொள்க.

எளித்தல் என்பது—தலைவன் நம்மாட்டு எளிய னென்று கூறுதல். அதனைப் பயம் மகளுடைத்தாயர் தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவ ராதலான் எளிய னென்பது கூறி அறத்தொடுநிற்கப் பெறுமென் றவாறு.

"அன்னை யறியினு மறிக [2]வலர்வா
யம்மனைச் சேரி கேட்பினுங் கேட்க
பிறிதொன் றின்மை யறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகா[அ]ர்த் தெய்வ நோக்கிக்
கடுஞ்சூ டருகுவ னினக்குறு கானற்
றொடலை யாயமொடு கடலுட னாடியுஞ்
சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறி
திருந்தனெ மா[க] வெய்த வந்து
தடமென் பணைத்தோண் மடநல் லீரே
எல்லு மெல்லின் [3]றசைவும்பெரி துடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
வெனமொழிந் [4]தனனே வொருவ னவற்கண்
டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
யிவைநுமக் குரிய வல்ல விழிந்த
கொழுமீன் வல்சி யென்றன மிழுமெ
னெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ
காணு மோவெனக் காலிற் சிதைய[ர]
நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு
மென்னையே குறித்த நோக்கமொடு நன்னுத
லொழிகோ யானென வளிதகக் கூறி
யாம்பெயர் தோறு நோக்கித் தான்ற
னெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலு மின்றுமென் கட்கே." [அகம் - ௱௰]

பிரதி)— 1. வகையுமென்மனார். 2. வலவா. 3. றிசையும். 4. தனறென.

எனவரும். அன்னை என்றது நற்றாயை.

ஏத்தல் என்பது—தலைவனை உயர்த்துக்கூறுதல். அது மகளுடைத்தாயர் 'தலைவன் உயர்ந்தான்' என்றவழி மனமகிழ்வராகலின் அவ்வாறு கூறப்பட்டது. உயர்த்துக் கூறி அறத்தொடு நிற்கப்பெறும் என்றவாறு.

"அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி யதன்றிறம்
யானுந் தெற்றென வுணரேன் மேனாள்
[ம]லிபூஞ் சாரலென் றோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூசல் றோன்ற
வொண்செங் கழுநீர்க் கண்போ லாயித
ழூசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண
டியாதோ மற்ற மாதிறம் படர்கென
வினவி [நி]ற்றந் தோனே யவற்கண்
டெம்முளெம்முள் மெய்ம்மறை பொடுங்கி
நாணி நின்றன மாகப் பேணி
யைவகை யமர்த்த கூந்த லாய்நுதன்
[மை]மயீ ரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யு முளவோ வென்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்தந் [1]தோனெதிர் மறுத்து
[நின்மக]ளுண் [கண்] பன்மா [2]ணோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்று கிழவோன்
பகன்மா யந்திப் படுசுட ரமை[ய]த்
தவன்மறை தேய நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள்
ளிதனள வுண்டோர்கோண் [3]மதிவல் லோர்க்கே." [அகம் - சஅ]

இதனுள் கழுநீர் மாலையன், வெட்சிக்கண்ணியன் எனக் கூறினமையால் அவன் நாட்டிற்கும் மலைக்குந் தலைவன் என்பது படவும், ஒருகணை தெரிந்துகொண்டு புலி யாதென்ற அவனது வீரியமுங் கூறி உயர்த்தவாறுங் காண்க.

வேட்கையுரைத்தலாவது—தலைவன்மாட்டுத் தலைவி வேட்கையும் தலைவிமாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல். வேட்கைகூறி அறத்தொடு நிற்குமென்றவாறு.

"நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச் சென்[றோ]ன்" என்பது தலைவன் வேட்கை கூறியவாறும்.

"அன்னாய் வாழிவேண் டன்னை யென்றோழி
நனிநா ணுடைய [4]ளெனினு மஞ்சு
மொலிவெள் ளருவி யோங்குமலை நாடன்

(பிரதி)—1. தோனெதிர். 2. ணோக்கிச். 3. சொன்மதிவல். 4. வெனினு.

மலர்ந்த மார்பிற் பாய
றவநனி வெய்ய நோகோ யானே." [ஐங்குறு - உ௭௫]

இது தலைவி வேட்கை கூறியது.

கூறுதலாவது—தலைவியைத் தலைவற்குக் கொடுக்கவேண்டுமென்பதுபடக் கூறுதல்.

உதாரணம்:—

"வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டியாய்க்
கோடாது நீகொடுப்பி னல்லது—வாடா
வெழிலு முலையு மிரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து." [திணைமாலை - ௯௫]

எனவரும்.

"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
யறியா வேலன் வெறியெனக் [கூறு
ம] துமனங் கொள்குவை யன்னையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே." [ஐங்குறு - உ௪௩]

என[வும்] வரும்.

உசாவுதல் என்பது—வெறியாட்டுங் கழங்கு[ம் கட்டும் இட்டுரைத்]துழி வேலனோடாதல் பிறரோடாதல் தோழி உசாவுதல்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வே [றுருவிற்] சில்லவிழ் மடையொடு
சிறுமறி தொன்றிய வன்றுநுத னீவி
[1]வணங்கினை கொடுத்தி யாயி னணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
றண்டா ரகலமு [2]முண்ணுமோ பலியே." [குறுந் - ௩௬௨]

து வேலனொடு உசாவுதல்.

"இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினோ
டுண்ணமை [மதுத்][3]துளி பெறூஉ நாட
னறிவுகாழ்க் கொள்ளு மளவைச் செறிதொடி
யெம்மில் வருகுவை நீயெனப்
பொம்ம லோதி நீவி யோனே." [குறுந் - ௩௭௯]

இது செவிலி கேட்பத் தலைவியொடு தோழி உசாவியது. பிறவுமன்ன.

ஏதீடுதலைப்பாடு என்பது—யாதானுமோர் ஏதுவை இடையிட்டுக்கொண்டு தலைப்பட்டமை கூறுதல்.

உதாரணம்:—

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
... ... ...
யருமழைதரல் வேண்டிற் றருகிற்கும் பெருமையளே." [கலித்-௩௯]

இது புனலிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

(பிரதி)— 1. யணங்கினை. 2. முண்ணுமொப்பிலியே. 3. துணி.

"சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
யள்ளி யளகத்து மேலாய்ந்து—தெள்ளி
[1]யிதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
[2]யுதணாற் கடிந்தா னுளன்." [திணைமாலை - உ]

இது களிற்றிடை உதவினானெனத் தலைப்பாடு கூறியது.

"அன்னாய் வாழிவேண் டன்னை [3]யென்னை
தானு மலைந்தா னெமக்[கு]ந் தழை யாயின
பொன்வீ மணியரும் பினவே
யென்ன மரங்கொலவர் சார லவ்வே." [ஐங்குறு - உ௱௧]

இது தழையும் கண்ணியுந் தந்தா னென்பதுபடக் கூறியது.

உண்மை செப்பும் கிளவியாவது—பட்டாங்கு கூறுதல்.

"அல்கன்மழை பொழிந்த வகன்க ணருவி
யாடு[க]மை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவள்
மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்." [ஐங்குறு - உ௨௰]

இவ்வகை யெல்லாம் தத்தங் குடிமைக் கேற்றவழிக் கொள்க.

**வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டியும்** என்பது—தமர் வரைவுடன்பட்டமையைத் தலைவற்கு உரைக்க வேண்டியும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க.

**ஆங்கதன் றன்மையின் வன்புறை** என்பது—அவ்வாறு வரைவுடம்பட்ட தன்மையினால் தலைவியை வற்புறுத்தற் கண்ணும் என்றவாறு.

"கூர்முண் முண்டகக் கூர்[ம்]பனி மாமலர்
நூலற முத்திற் காலொடு பாறித்
துறைதொறும் பரக்குந் தூமணற் சேர்ப்பனை
யானுங் காதலே [4]னையுநனி வெய்ய
ளெந்தையுங் கொடீ[இ]யர் [வேண்டும்]
அம்ப லூரு மவனொடு மொழிமே." [குறுந் - ருக]

"அம்ம வாழி தோழி நம்மொடு
சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்
மென்றோ ளெகிழவுந் திருநுதல் பசப்பவும்
பொன்போல் விறற்கவின் றொலைத்த
குன்ற நாடற் கய[ர்]ந்தனர் மணனே." [ஐங்குறு - உ௩௰]

எனவரும்.

**பாங்குற வந்த நாலெட்டு வகையும்** என்பது—பகுதிப்படவந்த முப்பத்திரண்டு வகைப்பட்ட பொருண்மையும் என்றவாறு.

அவையாவன மேற் சொல்லப்பட்ட முன்னுற வுணர்தல் வகை, குறையுற வுணர்தற்கண் பெருமையிற் பெயர்த்தல், உலகுரைத் தொழித்தல், அருமையி னகற்றல், பின்

(பிரதி)— 1. யிதணாற். 2. யதணாற். 3. யென்னைகூறுதல். 4. நையுநனிவெய்யன்.

வாவென்றல், பே[தை]தமை யூட்டல், முன்னுற புணாச்சி முறைநிறுத் துரைத்தல், அஞ்சி யச்சுறுத்தல், உரைத்துழிக் கூட்டம் எனச்சொல்லப்பட்ட எண்வகை மாயஞ் செப்பி வந்த கிழவனைப் பொறுத்த காரணம் குறித்தலாகிய இருவருமுள்வழி அவன்வர வுணர் தல், புணர்ந்தபின் அவன் வயின் வணங்கல், குறைநயப்பச் சேறல், குறைநயப்புவகை, நயந்தமைகூறல், அலரா மென்றல், புணர்ச்சி வேண்டியவழிக் கூறல், பிரிவு வேண் டியவழிக் கூறல், வேளாண் பெருநெறி வேண்டிக்கூறல், அல்லகுறிப் பட்டவழிக் கூறல், ஓம்படைகூறல், இயற்பழித்து வற்புறுத்தல், ஆறின்னுமைகூறல், காப்பு மிகுதிகூறல், காதன் மிகுதிகூறல், அவன்வயிற் றோன்றிய கிளவி, ஐயச்செய்கை தாய்க்கெதிர் மறுத் தல், குறிபார்த்தல், விலக்கல், வெறிவிலக்கல், பிறன்வரைவு மறுப்பித்தல், அவன் வரைவுடம் படுத்தல், வரைவுடம் பட்டமை தலைவற்குக் கூறல், உடம்பட்டமை தலைவிக் குக் கூறி வற்புறுத்தல் என இவை.

தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன என்பது—இவை முப்பத்திரண்டு பொருண்மை யும் தலைவிக்கு இன்றியமையாத தோழிமேலன என்றவாறு. (உ௪)

௱கரு.   களவல ராயினுங் காமமேற் படுப்பினு
மளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரு
மொட்டிய திறத்தாற் செய்திக் கண்ணு
மாடிய சென்றுழி யழிவுதலை வரினுங்
காதல் கைம்மிகக் கனவி னரற்றலுந்
தோழியை வினவலுந் தெய்வம் வாழ்த்தலும்
போக்குட னறிந்தபிற் றோழியொடு கெழீஇக்
கற்பி னாக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவி னெச்சத்து மகனெஞ்சு வலிப்பினு
மிருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணு
மின்ன வகையிற் பதின்மூன்று கிளவியொ
டன்னவை பிறவுஞ் செவிலி மேன.

என்றது மேற் றலைவற்குந் தலைவிக்குந் தோழிக்கு முரிய கிளவியெல்லாங் கூறி இனிச் செவிலிக்குரிய கிளவி யுணர்த்துதல் நுதலிற்று.

களவலராதன் முதலாகச் சொல்லப்பட்ட பதின் மூன்று கிளவியும் அத்தன்மைய பிற கிளவியும் களவுகாலத்துச் செவிலி[யி]ன் மேலன என்றவாறு. இவற்றுள் தோழியை வினாதலென வேறொருகிளவியாக ஓதினாராயினும் அதன்முன்பு நிகழும் கிளவியெல்லாம் அவளை வினாதற்குக் காரணமாதலின் அவை யீண்டுப் பதின்மூன்றென வெண்ணப்பட் டன வென்க.

களவல ராயினும் என்பது—தலைவன் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகி அலர் தூற்றப்பட்ட விடத்தும் தோழியை வினவும் என்றவாறு. [உதாரணம்:]

"[பாவடி யுரல ப]குவாய் வள்ளை
யேதின் மாக்க ளுவறலு நுவல்ப
வழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே

(பிரதி)—1. எண்வகையும். 2. ஓதினாராகலானும்.

பெரும்பூட் பொறையன் பே[எ]முதிர் கொல்லிக்
[கருங்கட் டெய்]வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னவென்
[ெ]மல்லியற் குறுமகள் பாடினள் குறினே." [குறுந் - அ௯]

காம மேற் படுப்பினும் என்பது—தலைவிமாட்டுளதாகிய வேட்கை அளவிறப்பி னும் தோழியை வினவும் என்றவாறு.

"மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியுட் டிகழ்வதொன் றுண்டு." [குறள் - ௲உஎ௩.]

அளவு மிகத் தோன்றினும் என்பது—பெதும்பைப் பருவத்தளாகிய தலைவி புணர்ச்சியாற் கதிர்த்து வீங்குகின்ற முலையும் புதிதுற்ற கவினுங் கண்டவிடத்துந் தோழியை வினவும் என்றவாறு.

"கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த மாமை பெரிது." [குறள் - ௲உஎஉ]

தலைப்பெய்து காணினும் என்பது—தலைவனொடு தலைவியைத் தலைப்பெய்து காணினும் வினவும் என்றவாறு.

பெய்தென்பதனைப் பெயவெனத் திரிக்க.

'மிடையூர் பிழியக் கண்ட[ெ]னன்' [அகம் - ௱௬அ]

ணவரும்.

கட்டினும் என்பது—கட்டு வைப்பித்தவழியும் அவர்சொற் கேட்டுத் தோழியை வினவும் என்றவாறு.

கழங்கினும் என்பது—கழங்கு வைத்துழியும் அவர்சொற் கேட்டுத் தோழியை வினவும் என்றவாறு.

வெறியென விருவரு மோட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும் என்பது— செவிலியும் நற்றாயும் பொருந்தியபக்கத்துக் கண்டு வெறியாடுவா மென்றவழித் தலைவி செய்திக்கண்ணுந் தோழியை வினவும் என்றவாறு.

ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும் என்பது—வெறியாடிய சென்றவழி அதற் கழிவுறுவிடத்து வரினும் என்றவாறு.

அஃதாவது:

"இன்னணங் கன்மை யறிந்து மண்ணார்ந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே." [நற்றிணை - ௩௪]

எனத்தோழி கூறுதல். அவ்வாறு கூறியவழியுங் காரண மென்னை யென வினவும்.

காதல் கைம்மிகக் கனவி னரற்றலும் என்பது—காதன் மிகுதியால் தலைவனை யுள்ளிக் கனவின்கண் அரற்றுதற்கண்ணும் வினவும்.

தோழியை வினுதலும் என்பது—இவை நிமித்தமாகத் தோழியை வினுதலும் என்றவாறு. எனவே களவலராதன் முதற் கனவினரற்ற லீறாக ஓதிய வொன்பது இளவி

யும் தோழியை வினுதற்பகுதி. அவை நிகழாதவழி வினுதலில்லை. அதனுல் தோழியை வினுதலென ஒருகிளவியாக எண்ணுர்க.

தெய்வம் வாழ்த்தலும் என்பது—இவ்வாறு பட்டதெனத் தோழி யுரைத்தவழி யிதனை நற்ருய்க்கும் தந்தைக்கும் கூறலாற்ருதாள் தெய்வத்தை வேண்டிக்கோடல்.

போக்குடன் அறிந்தபின் ... நிற்றற் கண்ணும் என்பது—தலைவனுடன் போயி ஞள் என்று அறிந்தவழித் தானுந் தோழியோடு கெழுமி இல்ல [றத்தின்க] ணிறுத்தற் கண்ணும் என்றவாறு.

"பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் ருேன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாய[ா] கின்[றே]ற தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே." [குறுந் - கரு]

பிரிவி னெச்சத்து மகணெஞ்சு வலிப்பினும் என்பது—தலைவன் வரையாது பிரிந்தவழி யொழிந்த தலைமகள் அலராகுதலு மின்றி வேறுபாடு மின்றி ஒருமனைப்பட் டிருந்த வுள்ளக்கருத்தை யறிந்தவழியும் என்றவாறு. வலித்தல் என்பது [தெ]தளிதல்.

இருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணும் என்பது—தலைவன் குடிமை தன் குடிமையோ டொக்கு மென வாராய்தற்கண்ணும் என்றவாறு.

குடியென்றது பொருள் என்றதனுல் பொருளுங்குணமு மாயப்பெறு மென்றவாறு.

அன்னவை பிறவும் என்றதனுன்,

"நாற்றம் பெற்று நிலைப்புக் காண்டல்
உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்
கண்டுயின் மறுத்தல் கோலஞ்செய் யாமை"

முதலாயின கொள்க. இவையும் வினுதற்கேதுவாம். இவற்றிற் கெல்லாஞ் செய்யுள் வந்த வழிக் காண்க. (உரு)

௱கச. தாய்க்கும் வரையா ருணர்வுடம் படினே.

இது நற்ருய்க்கு உரியதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

செவிலியுணர்வோடு உடம்பட்ட வுள்ளத்தளாயின், நற்ருய்க்கும் மேற் சொல்லப் பட்டவை யெல்லாம் [1]வரையப்படா வென்றவாறு.

உணர்வுடம்படுதலாவது—தலைவியை[யை]யுற்று [2]நோக்கம் நிகழ்ந்தவழியன்றித் தானும் செவிலியைப்போல உற்று நோக்காளென்று கொள்க. இப்பொருள்மேற் கிளவி வருவன உளவெனுஞ் செவிலியைப் போல வொருப்பட்ட வுள்ளத்தளாயின் அவள் கண் ணும் இக்கிளவியெல்லாம் நிகழும் என்றவாறு. உடம்படாதவாறு என்னை யெனின், யாரி டத்தும் மக்களைவளர்ப்பார் செவிலியராகலானும் தமக்குத் தம் [இல்லற நிலைக்குக்கட]வ பகுதியான அறனும் பொருளும் இன்பமும் ஆற்ற வேண்டுதலானும் கூற்ருெடு வேறுபாடு தோன்ருது. (உக)

(பிரதி)— 1. வரையப்பட்ட தென்றவாறு. 2. நோக்காதிகழ்ந்தவழியன்றித்.

௱௧௫. கிழவோ னறியா வறிவின ளிவளென
மையறு சிறப்பி னுயர்ந்தோர் பாங்கி
னையக் கிளவியி னறிதலு முரித்தே.

இது நற்றாயும் செவிலியும் துணியுமாறு கூறுகின்றது.

கிழவோன் அறியா அறிவினள் என்பது—தலைமகன் அறியா அறிவினையுடையள் என்றவாறு. எனவே ஒருபக்கம் எதிர்காலம் நோக்கிக் [1]கூறினர் போலத் தோன்றும் ஒரு பக்கம் இறந்தகாலம் தோன்றும். அவன் அறியாத அறிவுரிமைபூண்டு மயங்குதல், [2]அவள் எத்துணையும் மயக்கமிலள் எனவும் அவன் பொருட்டு மயங்கினுள் எனவும்படக் கூறுதல். தலைவன் அறியாத அறிவினையுடையள் எனக் குற்றமற்ற சிறப்பினையுடைய உயர்ந்தோர் மாட்டு உளதாகிய ஐயக்கிளவியால் புணர்ப்பறிதலும் உரித்து, செவிலிக்கும் நற்றாய்க்கும் என்றவாறு.

இஃது எற்றினன் ஆயிற்று எனக் குற்றமற்ற [3]தவவரை வினயவழி அவர் இவ்வாறு பட்டதென மெய்கூறுதலுந் தகுதியன்றாம்; பொய் கூறுதலுந் தகுதியன்றாம். ஆதலால் ஐயப்படுமாறு சிலகூறியவழி, அதனானே யுணர்ப என்றவாறு. கிழவோனறியா வறிவின ளென்றவாறு கூறியவழிக் கிழவோனெதினபபட . . . இறந்தகாலத்துள் தலைவன் உளன் என்றவாறும். (உ௭)

௱௧௬. தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்த
லெண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
[பிறநீர் மாக்களி னறிய வாயிடைப்
பெய்ந்நீர் போலு முணர்விற் றென்ப.]

இது, தலைவிக்கு உரியதோர் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

தலைவி தனது வேட்கையைக் கிழவன் முன்பு சொல்லுதல் நினைக்குங் காலத்துங் கிழத்தி[க்கு இல்லை. அங்ஙனம் சொல்லாத விடத்தும் புதுக்கலத்தி]ன்கட் பெய்த நீர்போலப் புறம்பொசிந்து காட்டும் உணர்வினையு முடைத்து அவ்வேட்கை என்றவாறு.

எனவே, குறிப்பின் [4]உணரநிற்கும் என்றவாறு. தலைவன்மாட்டுக் கூற்றினானும் நிகழப்படுமென்று கொள்ளப்படும். (உ௮)

௱௧௭. காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலிற்
றாமே தூதுவ ராகலு முரித்தே.

என்றது, களவிற்புணர்ச்சிக் குரியதோர் வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

மேற் சொன்னவாற்றால் பாங்கனுந் தோழியு நிமித்தமாகக் கூடுதலேயன்றித் தாமே தூதுவராகிய கூட்டங்கள் நிகழப்பெறும்: அது சிறப்புடைத் தாதலால் என்றவாறு.

எனவே, பாங்கற் கூட்டம் தோழியிற் கூட்டம் என்பன நியமமில்லை யாவர் மாட்டும் என்றவாறும். தனிமையிற் பொலிதலின் என்றமையான் இதுவு மிகவும் நன்று. (உ௯)

௱௧௮. அவன்வரம் பிறத்த லறந்தனக் கின்மையிற்
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
தான்செலற் குரியவழி யாக லான.

(பிரதி)— 1. கூறினள். 2. அவன் எத்துணையு மயக்கமிலனென்பதூ மவள் பொருட்டு மயங்கினன். 3. தவவரை. 4. உணராநிற்கும்.

இது, சொல்லப்பட்ட கூட்டத்திற்குக் குறியிடம் கூறுவானுணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்பு, தலைவனெல்லையை மறத்தல் தலைவிக்கு அறமாக லின்மையானே குறியிடம் கூறுதல்! தலைமகளதாம்: அது தான் சேறற்குரிய இடமாதலான் என்றவாறு.

எனவே, இத்துணைக்கூறின் மிகையன்று என்றவாறும். (௩௰)

௱௩௧. தோழியின் முடியு மிடனுமா ருண்டே

இது, தோழியிற் கூட்டத்திற் காயதோர் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

மேல், 'காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலிற் றாமே தூதுவ ராகலும் உரித்' தெனக் கூறிப்போந்தார்; அவ்வா றன்றி மேற் சொல்லப்பட்ட இயற்கைப் புணர்ச்சியாவது தோழியின் முடியு மிடத்து ஓரிடத்து உண்டு என்றவாறு. "அன்பொடு புணர்ந்த வைந்திணை" [களவியல்-க] என்றதனால் யாண்டும் உள்ளப் புணர்ச்சியான் வேட்கை மீதூர்ந்த வழியே தோழியின் முடியப் பெறுவது என்று கொள்க. அல்லாக்காற் பெருந்திணைப் பாற்படும். (௩௧

௱௩௰. முக்கா ளல்லது துணையின்று கழியா
தந்நா ளகத்து மதுவரை வின்றே.

இது பாங்கற்கூட்டம் நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

மேல், தோழியிற் கூட்டத்தின் விகற்பங்கூறினாராகலின் ஈண்டுத் துணை யென்றது பாங்கன் ஆயிற்று. மூன்றுநாளல்லது துணையின்றிக் களவிற் புணர்ச்சி செல்லாது; அந்நாளகத்தும் துணையை நீக்கவும் படாது என்றவாறு.

எனவே, [1]எதிர்ப்பட்டதலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்வதன்முன் பாங்கற்கு உணர்த்தவும் பெறும் என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டது. (௩௨)

௱௩௧. பன்னூறு வகையினுந் தன்வயின் வருஉ
நன்னய மருங்கி னாட்டம் வேண்டலிற்
றுணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
துணையோர் கரும மாத லான.

இது, தலைவிக்கு உரியதோ ரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

பன்னூறு வகையினும் என்பது—பலவகையானும் என்றவாறு. நூறு, பத்து, ஆயிரம் என்பன பல்பொருட்பெயர்.

தன்வயின் வருஉ...மாதலான என்பது—தன்னிடத்து வரும் நல்ல நயப்பாட்டுப் பக்கத்தினை ஆராய்தல் தலைவன் மாட்டு வேண்டுமாதலால் துணையைச் சுட்டிக்கூறலு[று]ம் சொல் தலைமகளதாகும்; தான் கூறும் கருமம் துணையோராற் செய்யப்படும் கருமமாதலான் என்றவாறு.

எனவே, [2]தலைமகன் களவுகாலத்துப் பாங்கற்கு உற்றதுரைத்த பின்பு பாங்கனைச் சுட்டி யாது செய்வாமெனக் கூறப்பெறும் என்றவாறாயிற்று. (௩௩)

௱௩௨. ஆப்பெருஞ் சிறப்பி னருமறை கிளத்தலிற்
றாயெனப் படுவாள் செவிலி யாகும்.

(பிரதி)— 1. எதிர்ப்படத். 2. தலைமகள்.

இது, செவிலிக்கு உரியதோர் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

நல்ல பெரிய சிறப்பினையுடைய அறிதற் கரிய [மறைப்பொருள் யாவற்றையுங் கூறும் கடப்பாடுடைய ளாதலின்] தாய் எனப்படுவாள் செவிலியாகும் என்றவாறு.

நற்றாய் இத்துணைச் சிறப்பிலள் என்றவாறு. இதனாற்பயன், களவுக்காலத்தையச் சொ . . . செவிலித்தாய்க்குந் கைத்தாய்க்கும் பொதுவாயினும், தாயென்று வேண்டப்படுவாள் செவிலி என்றறிவித்தல். (௩௪)

௱உ௩. தோழி தானே செவிலி மகளே.

[இது, தோழிக்கு உரியதோர் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.]

[களவுக்காலத்தும் இன்றியமையாளாகத் தலைவி]யால் வேண்டப்பட்டாள் செவிலி மகள் என்றவாறு.

எனவே, பயின்றா ரெல்லாருந் தோழிய ராகார். அருமறை கிளக்கப்படுதலான் உடன் முலையுண்டு வளர்ந்த செவிலிமகளே தோழி எனப்படுவாள் என்றவாறு. அருமறை கிளத்தல் என்பதனை மீண்டு வருவிக்க. (௩௫)

௱உ௪. சூழ்தலு முசாத்துணை நிலைமையிற் பொலிமே.

இது, தோழிக்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட தோழி தான் சூழ்தற்கும் தலைவிசூழ்ச்சிக்கு உசாத்துணையாகியும் வரும் நிலைமையாற் பொலிவுபெறும் என்றவாறு.

எனவே, செவிலிமகள் என்னுந்துணையாற் பொலிவு பெறாள்; என்று[ந்] தோழி யாவாள் செவிலிமகளாதலேயன்றிச் சூழவும் உசாத்துணையாகவும் வல்லள் ஆதல் வேண்டும் என்றவாறு.

செய்யுள் மேற்காட்டப்பட்டன. (௩௬)

௱உ௫. குறையுற வுணர்தன் முன்னுற வுணர்த
இருவரு முள்வழி யவன்வர வுணர்தலென
மதியுடம் படுத லொருமூ வகைத்தே.

இது, தலைவன் புணர்ச்சியுண்மை தோழி அறியுந் திறன் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் குறையுற வுணர்தலும் அவன் குறையுறாவழித் தலைவிகுறிப்புக் கண்டு உணர்தலும் தானும் தலைவியுங் கூடியிருந்துழித் தலைவன் வந்தமைகண்டு உணர்தலும் என மூவகைத்துத் தோழி அறிவுடம்படுதற்கண்ண வென்றவாறு.

மதியுடம்படுதல் எனினும் புணர்ச்சியுணர்தல் எனினும் ஒக்கும். இம்மூன்றினும் ஒன்று கண்டுழி அவரவர் குறிப்பினாற் புணர்ச்சியுணரும் என்றவாறு. 'குறையுறவுணர்தல்' முன்வைத்தார் நன்குபுலப்படுதலின். 'முன்னுறவுணர்தல்' அதன்பின் வைத்தார், தலைவி வேறுபாடு கண்டு பண்டையிற்போலாள் என்னும் நிகழ்ச்சியான் முற்றத்துணிவின்மையின். 'இருவரு முள்வழி யவன் வரவுணர்தல்' அதன் பின்வைத்தார், ஆண்டுப் புதுவோன் போலத் தலைவன் வருதலானும் தலைவி கரந்த உள்ளத்தளாய் நிற்குமாதலானும் அத்துணைப் புலப்பாடின்மையின். அக்கருத்தினானே மேற்சொல்லப்பட்ட தோழி கூற்று மூவகையாகப் பொருள் உரைத்ததென்று கொள்க. (௩௭)

௱உ௬. அன்ன வகையா னுணர்ந்தபின் னல்லது
பின்னிலை முயற்சி பெறாளென மொழிப.

இதுவும், தோழிக்கு உரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட கூறுபாட்டான் இருவர்மாட்டும் அன்புடைமை உணர்ந்த பின்னல்லது வழிபாட்டு நிலைமையாற் கூட்டத்திற்கு முயலப் பெறுள் தோழி என்றவாறு.

அஃதேல், உள்ளப்புணர்ச்சியானின்று மெய்யுறாது கூட்டத்திற்கு முயல்வார் உளர். ஆயின், அஃதெற்றாற் பெறும் எனின் ஆண்டும் இருவர்மாட்டுளதாகிய அன்புடைமையான் மனநிகழ்ச்சியுளவாக அந்நிகழ்ச்சி கண்டுழியும் முயலப்பெறு மென்று கொள்க. அதனானே யன்றே 'முன்னுற்வுணர்தல்' என்னுஞ் சூத்திரத்தினும் 'புணர்ச்சியுடம் படுதல்' என்னாது 'மதியுடம் படுத லொரு மூவகைய' எனப் பொதுப்பட ஓதுவாராயிற் றென்க. அவ்வன்பினான் வரு நிகழ்ச்சி யுள்வழியும் இவ்விட மூன்றினும் காதலுண்மை அறியலாகும். (௩அ)

௱உஎ. முயற்சிக் காலத் ததற்பட நாடிப்
புணர்த்த லாற்றலு மவள்வயி னான.

இதுவுமது.

தோழி வழிமொழிந்து முயலுங்காலத்து அவன் நினைவின்கட்படுந்திறன் ஆராய்ந்து புணர்த்தலைச் செய்யும் அவளிடத்து என்றவாறு.

அஃதாவது, 'இன்னுழிச் செல்' எனவும், 'இன்னுழி வா' எனவும், தலைவியை ஆயத்து னின்றும் பிரித்துத் தனி நிறுத்திப் பட்டாங்கு கூறியும் பிறவாற்றானும் ஆராய்ந்து கூட்டுதல்.

இவ்வைந்து சூத்திரத்தானுந் தோழிக்கு உரிய மரபு உணர்த்தியவாறு காண்க. (௩க)

௱உஅ. குறியெனப் படுவ திரவினும் பகலினு
மறியக் கிளந்த வாற்ற தென்ப.

என்றது, மேல் 'களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்' என்றார்: அதற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

குறி என்று சொல்லப்படுவது இரவினானும் பகலினானும் இருவரும் அறியச் சொல்லப்பட்ட இடத்தையுடைத்து என்றவாறு.

எனவே, இரவிற்குறி பகற்குறி என இருவகைப்படும் என்பது கொள்ளப்படும். (சம)

௱உக. இரவிற் குறியே யில்லகத் துள்ளு
[1]மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகா[அ]க் காலை யான.

என்றது, இரவுக்குறிக்கு இடமுணர்த்துதல் நுதலிற்று.

இரவுக்குறியாம் இடமே இல்லகத்துள் மனையகம்புகாவிடத்துக்கண் மனையோர் கிளவிகேட்கும் அணிமைத்தாம் என்றவாறு.

எனவே, மனைக்கும் எயிற்கும் நடுவணதோரிடம் என்று கொள்ளப்படும். (சக)

௱௩௰. பகற்புணர் களனே புறனென மொழிப
வவளறி வுணர வருவழி யான.

என்றது, பகற்குறி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(பிரதி)— 1. மனையோள்.

பகற்குறியாகிப் புணருமிடம் எயிற்புறன் என்று சொல்லுவர்: ஆண்டுந் தலைமகன் அறிவுற்றுவரும் இடனாகல்வேண்டும் என்றவாறு. (௪௨)

௱௩௧. அல்லகுறிப் படுதலு மவள்வயி னுரித்தே
யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே.

இதுவு மது.

அல்லகுறிப்படுதலுந் தலைமகட்கு உரித்து: [1]தலைவன்செய்த குறிமயங்கிய பொருத்தத்தொடுவரின் என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டது.

மயங்கிய அமைவு ஆவது—அவன்செய்யும் குறியோ டமைவுடையன. (௪௩)

௱௩௨. ஆங்காங் கொழுகு மொழுக்கமு முண்டே
யோங்கிய சிறப்பி னொருசிறை யான.

இதுவு மது.

அவ்[வவ்]விடத் தொழுகும் ஒழுக்கமுந் தலைவிமாட்டு உண்டு : ஓங்கிய சிறப்பினையுடைய ஒருபக்கத்து என்றவாறு.

ஒருசிறை யென்றது மனத்தானும் மொழியானும் மெய்யானும் கற்புடைமகளிர் ஒழுகும் ஒழுக்கத்தின் மனத்தான் ஒழுகும் ஒழுக்கமும் உண்டு என்றவாறு. (௪௪)

௱௩௩. மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்
துறந்த வொழுக்கங் கிழவற் கில்லை.

என்றது, தலைவற்கு உரிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

களவொழுக்கத்து முகூர்த்தமும் நாளும் துறந்தொழுகும் ஒழுக்கம் தலைவற்கு இல்லை என்றவாறு.

என்றதனான், ஆண்டு அறத்தின் வழுவினானல்லன், தலைவிமாட்டுத் தலையளி குறைதலான் என்றவாறு. (௪௫)

௱௩௪. ஆற்றின வருமையு மழிவு மச்சமு
மூறு முளப்பட வதனோ ரற்றே.

இதுவு மது.

நெறியினது அருமையும் மனன்அழிவும் அஞ்சுதலும் இடையூறும் தலைவன்மாட்டு நிகழா என்றவாறு. (௪௬)

௱௩௫. தந்தையுந் தன்னையு முன்னத்தி னுணர்ப.

என்றது, தந்தையும் தன்னையரும் களவு உணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தந்தையரும் தன்னையரும் குறிப்பின் உணர்ப என்றவாறு.

எனவே, கூற்றினான் உரைக்கப்பெறார் என்றவாறும். (௪௭)

௱௩௬. தாயறி வுறுதல் செவிலியோ டொக்கும்.

என்றது, நற்றாய்க்கு உரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

---

(பிரதி)—1. தலைவிசெய்த குறிமயங்கிப்.

நற்றாய் களவொழுக்கம் அறிவுறுதல் செவிலியோடொக்கும் என்றவாறு. செவிலி கவலுந் துணைக் கவலுத[ல]ல்லது தந்தையையும் தன்னையன்மாரையும்போல வெகுடலி லள் என்றவாறு. அவர் வெகுள்வரோ எனின்,

"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்." [கலித் - ௩௯]

எனத் தாய் வெகுளாமை காணப்பட்டது.

"அவ்ரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபக லெல்லா முருத்தெழுந் தாறி" [கலித் - ௩௯]

என்றதனான் வெகுட்சி பெற்றாம். (௪௮)

௱௩௭. அம்பலு மலருங் களவுவெளிப் படு[த்]தலி
னங்கதன் முதல்வன் கிழவ னாகும்.

என்றது, களவு வெளிப்படுப்பார் [1]இவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவரொருவர் முகக்குறிப்பினாற் றோற்று வித்தல். அலராவது சொல்லுதல். அதனானே இவை இரண்டும் களவினை வெளிப்படுத்த லின் அதற்குக் காரணமாவான் தலைவன் என்றவாறு. என்னை, அவனை யறிந்துழியல்லது இவை நிகழாமையின். தலைவி வேறுபாட்டான் ஆகாதோ எனின், ஆண்டு எற்றினான் ஆயிற்று என ஐயம் நிகழ்தலல்லது துணிவு பிறவாதாம் என்று கொள்க. (௪௯)

௱௩௮. வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைத லாறே.

இது, வரையும் பகுதி உணர்த்துதல் நுதலிற்று.

களவு வெளிப்பட்டபின் வரைதலும் களவு வெளிப்படாமை வரைதலும் என அவ் விரண்டென்று சொல்லுவர் வரையும் நெறி என்றவாறு.

இதனாற் சொல்லியது இருவாற்றானும் அறன் இழுக்காதென்றவாறு. அஃது இழுக்காதவாறு வருகின்ற சூத்திரத்தான் உணர்க. (௫௰)

௱௩௯. வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை.

இது, தலைவற்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

களவு வெளிப்படுதல் கற்பினோடொப்பினும் மேற் சொல்லப்பட்ட மூன்று பொரு ளாக வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை என்றவாறு.

அவையாவன முற்கூறிய ஓதற்பிரிவும், பகைவயிற்பிரிவும் தூதிற்பிரிவும். எனவே பொருள்வயிற் பிரிதலும் வேந்தர்க்குற்றுழிப் பிரிதலும் காவற்பிரிதலும் நிகழப்பெறும் என்றவாறாம். (௫௧)

மூன்றாவது களவியல் [2]முற்றிற்று.

---

(பிரதி)— 1. இருவர். 2. முடிந்தது. நடேசன் துணை. உ.

# நான்காவது - கற்பியல்.

௱சுல. கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்னபெயர்த்தோ வெனின், கற்பியல் என்னும் பெயர்த்து. கற்புக்கு இலக்கணம் உணர்த்தினமையால் பெற்றபெயர். கற்பென்பது யாதோவெனின், அஃதாமாறு இச்சூத்திரத்தில் விளங்கும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், கற்பிலக்கணம் கூறுத[ல்நுத]லிற்[று].

கற்பென்று சொல்லப்படுவது, கரணத்தொடுபொருந்திக் கொள்ளுதற்குரிய மரபினையுடைய கிழவன் கொள்ளுதற்குரிய மரபினையுடைய கிழத்தியைக் கொடுத்தற் குரிய மரபினையுடையார் கொடுப்பக் கொள்வது என்றவாறு. கொளற்குரி மரபின் என்ப தனைக் கிழத்தி என்பதனோடுங் கூட்டியுரைக்க.

களவின்கண் ஒத்தாரிருவர் வேட்கைமிகுதியாற் கூடி ஒழுகியவழிக் கரணத்தின் அமையாது இல்லறம் நடத்தலாமோ எனின், அஃதாகாதென்றற்குக் கரணமொடு புணர என்றார். கரணம் என்பது—வதுவைச் சடங்கு. கொளற்குரிய மரபிற் கிழவோன் என்றத னால், ஒத்தகுலத்தானும் [உயர்ந்தகுலத்தானும்] என்று கொள்க. கொளற்குரிய மரபிற் கிழத்தி யென்றதனால், ஒத்தகுலத்தாளும் இழிந்த குலத்தாளும் என்று கொள்க. கொடைக்குரிய மரபினோர் என்றதனால், தந்தையும் தாயும் தன்னையரும் மாதுலனும் இவரில்லாதவழிச் சான்றோரும் தெய்வமும் என்று கொள்க. கொடுப்பக் கொள்வது கற்பு என்றமையால், அது கொடுக்குங்கால், களவு வெளிப்பட்டவழியும் களவு வெளிப்படாதவழி யும், மெய்யுறு புணர்ச்சி யின்றி உள்ளப்புணர்ச்சியான் உரிமைபூண்டவழியும் கொள்ளப் பெறும் எனக்கொள்க. களவியற் சூத்திரத்துள், 'இன்பமும் பொருளு மறனு மென்றாங் கன்பொடு புணர்ந்த' [களவியல்-க] என்பதனைத் தந்துரைத்து, ஐந்திணைமருங்கிற் கற் பெனப்படுவது எனக்கூட்டுக.

அஃதேல், கொடுப்பக் கொள்வது கற்பாயின் பிரம முதலிய எண்வகையும் கொள்க: 'கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே - புணர்ந்துடன் போகிய காலை யான' [என்னும்] இது கற்பாகுமோ எனின், அவையும் கற்பாதல் ஒக்குமேனும் கந்திருவம் போல ஒத்த அன்புடையார் ஆதல் ஒருதலையன்மையின் கைக்கிளை பெருந்திணைப்பாற்படும். ஈண்டு ஐந்திணை தழுவிய அகத்திணையே களவு கற்பு எனப் பகுத்தார் என்று கொள்க. (க)

௱சுக. கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான.

இது மேலதற்கோர் புறனடை.

கொடுப்போரின்றியும் கரண நிகழ்ச்சி உண்டு: புணர்ந்துடன் போகிய காலத்து என்றவாறு.

எனவே கற்பிற்குக் கரண நிகழ்ச்சி ஒருதலையாயிற்று. இதனானே கொடுப்போ ரில்வழியும் கரணநிகழ்ச்சி யுண்மையும் ஒழுக்கக்குறைபாடு இன்மையும் கொள்க.

"பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே." [குறுந் - ௰௫]

[இதனுள்] விடலையொடு மடந்தை நட்பு பறைபடப் பணிலமார்ப்ப விறைகொண்டு நாலூர்க் கோசர் நன்மொழிபோல வா[யா]யிற்று எனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும், விடலை எனப் பாலைநிலத்திற் குரிய தலைவன் பெயர் கூறினமையானும் கொடுப் போரின்றியும் கரணம் நிகழ்ந்தவாறு காண்க. (௨)

௱௪௨. மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்
கீழோர்க் காகிய காலமு முண்டே.

இதுவும் அது.

மேற்குலத்தாராகிய அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூன்று வருணத்தார்க்கும் புணர்த்த கரணம் கீழோராகிய வேளாண்மாந்தர்க்கும் ஆகிய காலமும் உண்டு என்றவாறு.

இதனுற் சொல்லியது, முற்காலத்துக் கரணம் பொதுப்பட நிகழ்தலின் எல்லார்க்கும் ஆம்[1]என்பதும் பிற்காலத்து வேளாண்மாந்தர்க்குத் தவிர்ந்ததெனவுங் கூறியவாறு போலும். அஃதாமாறு தருமசாத்திரம் வல்லாரைக்கொண் டுணர்க. (௩)

௱௪௩. பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப.

என்றது கரணமாகியவாறு உணர்த்துதல் நுதலிற்று.

பொய்கூறலும் வழுஉப்பட வொழுகலும் தோன்றியபின்னர் முனைவர் கரணத்தைக் கட்டினூர் என்று சொல்வர் என்றவாறு.

இரண்டுந் தோன்றுவது இரண்டாம் ஊழியின்கண் ணுதலின், முதலூழியிற் [2]கரணமின்றியே இல்வாழ்க்கை நடந்ததென்பதூஉம் இவை தோன்றியபின்னர்க் கரணந் தோன்றின தென்பதூஉம் கூறியவா றுயிற்று. பொய்யாவது செய்ததனை மறைத்தல். வழுவாவது செய்ததன்கண் முடியகில்லாது தப்பி [3]யொழுகுதல். கரணத்தொடு முடிந்த காலையின் அவை யிரண்டும் நிகழாவாமாதலாற் கரணம் வேண்டுவதாயிற்று. (௪)

௱௪௪. கரணத்தி னமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்
எஞ்சா மகிழ்ச்சி யிறந்துவரு பருவத்தும்
அஞ்ச வந்த வுரிமைக் கண்ணும்
நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளினும்
பெற்ற தேஎத்துப் பெருமையி னிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினும்
நாமக் காலத் துண்டெனத் தோழி

---

(பிரதி)—1. என்பதூம். 2. கரணமின்றே. 3. லொழுகுதல்.

ஏமுறு கடவு ளேத்திய மருங்கினும்
அல்ல தீர வார்வமொ டளைஇச்
சொல்லுறு பொருளின் கண்ணுஞ் சொல்லென
ஏனது சுவைப்பினு நீகை தொட்டது
வானோ ரமிழ்தம் புரையுமா லெமக்கென
அடிசிலும் பூவுந் தொடுத்தற் கண்ணும்
அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்து
மந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கங் காட்டிய குறிப்பினு மொழுக்கத்துக்
களவினு ணிகழ்ந்த வருமையைப் புலம்பி
அலமர லுள்ளமொ டளவிய விடத்தும்
அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட வொழுகலும்
அழிய லஞ்சலென் றாயிரு பொருளினுந்
தானவட் பிழைத்த பருவத் தானும்
நோன்மையும் பெருமையும் மெய்கொள வருளிப்
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னி னாகிய தகுதிக் கண்ணும்
[1]புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி
ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்
பயங்கெழு துணையணைப் புல்லிப் புல்லா
துயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகி
அல்கன் முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய விரவினும்
உறலருங் [2]குரைமையி னூடன்மிகுத் தோளைப்
பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்
பிரிவி னெச்சத்துப் புலம்பிய விருவரைப்
பரிவு நீக்கிய பகுதிக் கண்ணும்
நின்றுநனி பிரிவி னஞ்சிய பையுளுஞ்
சென்றுகை யிகந்துபெயர்த் துள்ளிய வழியுங்
காமத்தின் வலியுங் கைவிடி னச்சமுந்
தானவட் பிழைத்த நிலையின் கண்ணும்
உடன்சேறற் செய்கையொ டன்னவை பிறவும்
மடம்பட வந்த தோழி கண்ணும்
வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்
மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும்

---

(பிரதி)—1. புதல்வர்ப். 2. குறைமையி.

அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்
பேரிசை யூர்திப் பாகர் பாங்கினுங்
காமக் கிழத்தி மனையோ ளென்றிவர்
ஏமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்
சென்ற தேளத் துழப்புநனி விளக்கி
இன்றிச் சென்ற தன்னிலை கிளப்பினும்
அருந்தொழின் முடித்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்
மாலை யேந்திய பெண்டிரு மக்களுங்
கேளி ரொழுக்கத்துப் புகற்சிக் கண்ணும்
ஏனைய வாயிலோ ரெதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிப் பதினொரு மூன்றும்
எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன.

இது தலைவற்கு உரிய கிளவியெல்லாந் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

கரணத்தினமைந்து முடிந்தபின்பு, நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சி முதலாக ஏனையவாயிலோரெதிரொடுகூடிப் [1]பண்ணுத லமைந்த பகுதியினையுடைய முப்பத்தின்மூன்றிடத்தினும் கூறல் எண்ணுதற் கரிய சிறப்பினையுடைய கிழவோன் மேலன என்றவாறு.

இடம் என்பது வகையிற் கூறியவதனால் உரைக்கப்பட்டது. கூற்றென்பது வருகின்ற சூத்திரத்தினும் கொணர்ந்துரைக்கப்பட்டது.

காரணத்தி னமைந்து முடிந்தகாலை என்பது— ஆசான்புணர்த்த கரணத்தினால் வதுவை முடிந்தபின் என்றவாறு.

நெஞ்சு தளையவிழ்த லாவது—தலைவியைத் தலைவன் கண்ணுற்றஞான்று தலைவன் மாட்டு உளதாகிய பெருமையும் உரனும் தலைவிமாட்டு உளதாகிய அச்சமும் நாணும் மடனும் ஏதுவாக இயற்கைப்புணர்ச்சி இடையீடுபட்டுழி வேட்கை தணியாது வரைந்தெய்துங்காறும் இருவர்மாட்டும் கட்டுண்டுநின்ற நெஞ்சம் கட்டுவிடப்படுதல். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்ததலைவன் அலரறிவுறுக்கப்பட்டு நீங்கி வரைந்தெய்துங்காறும் புணர்ச்சி வேட்கையாற் செல்கின்ற நெஞ்சினை இருவரும் வேட்கைதோற்றாமல் தளைக்கப்பட்டதனைத் தளை என்றலும் ஒன்று. இவையிரண்டினும் மிகுதி பொருளாகக் கொள்க.

உதாரணம்:—

"உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவைப்
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற்
றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற [2]கவின்பெறு காலைக்
கோள்கா னீங்கிய கொடுவெண் டிங்கட்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வர்ப் பயந்த திதலை யவ்வயிற்று

(பிப்தி)—1. பின்னுத. 2. வின்பேருறு.

வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த வீரித ழலரி
பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகென[த்த] மர்தர
ஓரிற் கூடிய வுட[ன்]புணர் கங்குற்
கொடும்புற[ம்] வளைஇய கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்தன ளோர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்
னெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
இன்னகை யிருக்கைப் பின்னியான் வினவலிற்
செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர
வகமலி யுவகைய ளாகி முகனிகுத்
தேயென விறைஞ்சி யோளே மாவின்
மடங்கொண் மதைஇய நோக்கி
னொடுங்கீ ரோதி மாஅ யோளே." [அகம் - ௮௬]

இதனுள் 'முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப வஞ்சினள் உயிர்த்தகாலை' என்பதனால் இயற்கைப்புணர்ச்சி யின்மையும், 'அகமலி யுவகைய ளாகி முகனிகுத் தேயென விறைஞ்சி' என்பதனால் உள்ளப் புணர்ச்சி யுண்மையும் அறிக. பிறவும் அன்ன.

எஞ்சா மகிழ்ச்சி யிறந்துவரு பருவத்தும் என்பது—ஒழியாத மகிழ்ச்சி மிக்கு வருங்காலத்துத் தலைவன்கட் கூற்று நிகழும் என்றவாறு.

உதாரணம்:—

"குனி[கா]யெருக்கின் குவிமுகிழ் விண்டலொடு
பனிவா ராவிரைப் பன்மலர் சேர்த்திச்
தாருங் கண்ணியுந் ததைஇத் தன்னிட்
டேரு மடவோன் [உ]லர்வன் கொல்லென
நீர்த்துறைப் பெண்டிர் நெஞ்சழிந் 1திரங்கினு
முணரா ளூர்தோ
றணிமடற் கலிமா மன்றத் தேறித்தன்
அணிநலம் பாடினு மறியா ளென்றியான்
பெருமலை நெடுங்கோ டேறிப் 2பெறுகென்
றுருவிடித் தீயி னுடம்புசுடர் வைத்த
வென்னுறு விழுமம் நோக்கிப் பொன்னொடு
திருமணி யிமைக்குங் கோடியர் நனந்தலை
3யிரவுடைப் பெண்டி 4ரிடும்பை நோக்கித்
தெளிவுமனங் கொண்ட தீதறு காட்சி
வெளியன் வேண்மான் விளங்குகரி போல
மலிகட லுடுத்த மணங்கெழு நனந்தலைப்

(பிரதி)—1. திரங்கு. 2. பெருகென். 3. விளவுடைப். 4. ரிடுமன்பை.

பலபா ராட்டவும் படுவ மாதோ
[க]டைந்து கவித்தன்ன கால்வீங்கு கருங்கட்
புடைதிரள் வனமுலை புலம்ப லஞ்சிக்
காமர் நுழைநுண் ணுசுப்பிற்
ருமரை முகத்தியைத் தந்த பாலே." [குணநாற்பது]

எனவரும்.

அஞ்சவந்த உரிமைக் கண்ணும் என்றது—தலைவன் தானும் பிறரும் அஞ்சும் படியாகத் தலைவிமாட்டு உளதாகிய கற்பாகிய உரிமைக்கண்ணும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க.

நன்னெறிப்படரும் தொன்னலப் பொருளினும் என்றது—நன்னெறிக்கட் செல்லாநின்ற தொன்னலப் பொருண்மைக் கண்ணும் என்றவாறு.

நன்னெறியாவது அறம்பொருளின்பம் வழுவாத நெறி. தலைமகன் சிறப்புத் தோன்றுதொட்டு வருதலிற் குடிநலத்தைத் தொன்னலமென்றார். இதனாற்சொல்லியது அறம் பொருள் இன்பங்களை வழாமல் தன்குலத்திற்கேற்ற மனைவாழ்க்கையைத்தலைமகள் நடத்துதற்கண்ணும் தலைவன்கண் கூற்று நிகழும் என்றவாறு.

உதாரணம்:—

"தடமருப் பெருமை மடநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற்
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேழை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
வாளை யீர்ந்தடி வல்லிதின் வகையிறப்
புகையுண் டமர்த்த கண்[ண] டகைபெறப்
பிறைநுதற் பொறித்த சிறுநுண் பலவிய
ரந்துகிற் றலையிற் றுடையின [1]ணப்புலந்
தட்டி லோளே யம்மா வரிவை
யெமக்கே வருகதில் விருந்தே சிவப்பார்[ந்]த
சிறியமுள் ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் குமே." [நற்றிணை - ௱௨௰]

இதனுள் ஊடற்குறிப்பின ளாகிய தலைவி மனைவாழ்க்கைத் தருமமாகிய விருந்து புறந்தருதல் விருப்பினளாதலின் நன்னெறிப்படர்தல் ஆயிற்று.

பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக் குற்றஞ்சான்ற பொருள் எடுத்து ரைப்பினும் என்றது—வரைந்துபெற்றவழித் தலைவியைப் பெருமையின் கண்ணே நிறுத் திக் களவுக்காலத்துக் குற்றஞ்சான்ற பொருளை யெடுத்துக் கூறியவழியும் என்றவாறு.

உதாரணம்:—

"அதிரிசை யருவிய பெருவரைத் தொடுத்த
பஃறே, [2]னிறாஅ லல்குநர்க் குதவு
நுந்தை நன்னாட்டு வெந்திறன் முருகென
நின்னோய்க் கியற்றிய வெறிநின் றோழி
யென்வயி னேக்கலிற் போலும் பன்னாள்
வருந்திய வருத்தந் தீரநின்
திருந்திழைப் பணைத்தோள் புணர்ந்துவந் ததுவே." [ ]

(பிரதி)—1. ணப்புலம். 2. னில்லதற்குதவு.

இதனுள் 'நுந்தை நன்னாட்டு' என்றதனால் தலைவிபெருமையும் 'நின்னோய்க் கியற்றிய வெறி நின்றோழி யென்வயி னோக்கலிற் போலும்' என்றதனால் குற்றஞ்சான்ற பொருள் என்பதும் அறிந்து கொள்க.

நாமக் காலத் துண்டெனத் தோழி யேமுறு கடவு ளேத்திய மருங்கினும் என்பது—அச்சக்காலத்து நமக்குத் துணையாயிற்றெனத் தோழி யேமுறுகடவுளை யேத்துதற்கண்ணும் தலைவன்கட் கூற்று நிகழும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக்காண்க.

அல்லல்தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின்கண்ணும் என்பது—தலைவி தன் துன்பந்தீர ஆர்வத்தொடுபொருந்தச் சொல்லப்பட்ட பொருண்மைக்கண்ணும் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு. என்றது களவுக்காலத்து வருந்திய வருத்தந் தீரத் தனது காதன் மிகுதி தோன்றச் சொல்லுதற் பொருளின் கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—

"யாயும் யாயும் யாரா கியரோ
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானும் நீயு மெவ்வழி யறிதுஞ்
செம்புலப் பெய்ந்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே." [குறுந் - ௪௰]

எனவரும்.

சொல்லென வேனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென அடிசிலும் பூவுந் தொடுத்தற் கண்ணும் என்பது—யாதானும் ஒன்றை நுகரினும் நீ கையால் தொட்டது வானோர் அமிழ்தம் புரையும்: இதற்குக் காரணம் சொல்லுவாயாக: என்று அடிசில் தொடுத்தற்கண்ணும் பூத்தொடுத்தற்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு. வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால், சாந்து முதலியனவும் கொள்க.

உதாரணம் வந்தவழிக் காண்க.

"வேம்பின் பைங்காயென் றோழி தரினே
தேம்பூங் கட்டி" [குறுந் - ௱௯௬]

[1]எனத் தலைவன் கூறினமை தோழி கூறுதலானும் அறிக.

அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர் பிறர் திறத்தினும் ஒழுக்கங்காட்டிய குறிப்பினும் என்பது—பார்ப்பார் கண்ணும் சான்றோர் கண்ணும் மிக்கசிறப்பினையுடைய பிறராகிய அவரவரிடத்தும் ஒழுகும் ஒழுக்கத்தைக் குறிப்பினால் காட்டிய விடத்தினும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க.

ஒழுக்கத்துக் களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி யலமர லுள்ளமொ டளவியவிடத்தும் என்பது—ஒழுக்கத்தினுங் களவுக்காலத்து நிகழ்ந்த அருமையைத் தனித்துச் சுழன்ற உள்ளத்தோடே உசாவிய விடத்தும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க.

(பிரதி)— 1. னமையெனத்.

**அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்** என்பது—களவுக்காலத்தொழுகிய ஒழுக்கக்குறைபாட்டான் நிகழ்ந்த குற்றத்தை ஆகாயத் தெழுத்துப்போல வழிகெட ஒழுகுதற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க.

**அழியல் அஞ்சலென் றாயிரு பொருளினுந் தானவட் பிழைத்த பருவத் தானும்** என்பது—அழியல், அஞ்சல் என இயற்கைப்புணர்ச்சிக்கட் கூறிய அவ்விருபொருளைப் பிழைத்த காலத்தினும் தலைவன்கண் கூற்று நிகழும் என்றவாறு.

அஃதாவது, புறப்பெண்டிர் மாட்டுப் பிரிதல்.

"நகுகம் வாராய் பாண பகுவாய்
[1]அரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காம நெஞ்சந் துரப்ப யாந்த
முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறைவனப் [2]புற்ற மாசறு சுடர்நுத
லாறிருங் கதுப்பினெங் காதலி வேறுணர்ந்து
வெரூஉமான் பிணையி னொரீஇ
யாரை யோவென விகந்துநின் றதுவே." [நற்றிணை - ௨௫0]

எனவரும்.

**நோன்மையும் பெருமையும் மெய்கொள வருளிப் பன்னல் சான்ற வாயி லொடு பொருந்தித் தன்னினாகிய தகுதிக்கண்ணும்** என்பது—பொறைமையும் பெருமையும் மெய்யெனக் கொள்ளுமாறு அருளி ஆராய்தல் அமைந்த வாயிலொடு பொருந்தித் தலைவன் தன்னான் ஆகிய தகுதிக்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

அருளிப் பொருந்திக் கூறும் எனக்கூட்டுக. என[வே] தலைமகன் என்பதூஉந் தலைமகள் என்பதூஉம் எஞ்சிநின்றன. கூற்று என்றது அதிகாரத்தான் வந்தது. அஃதாவது, பொறுத்தல் வேண்டும் எனவும் சிறுமைசெய்தல் குற்றம் எனவும் கூறுதலும், தலைமகள் தன்னால் வந்ததனை என்னால்வந்தது எனவும் இவ்வாறு கூறுதல். பன்னல் சான்ற வாயிலாவது, நீ என் செய்தனை? இவள் வெகுடற்குக்காரணம் என்னை? என ஆராய்தலிற் பொருந்திய தோழி என்க. பொருந்துதலாவது வேறுபடாது உடம்படுதல். அவை வருமாறு:—

"யாரினுங் காதல மென்றேமா வூடினா
ளியாரினு மியாரினு மென்று." [குறள் - ௲௩௱௧௪]

"தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
வெம்மை மறைத்திரோ வென்று" [குறள் - ௲௩௱௧௮]

"இம்மைப் பிறப்போ பிரியல மென்றேமாக்
கண்ணிறை நீர்கொண் டனள்." [குறள் - ௲௩௱௧௫]

"தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று." [குறள் - ௲௩௱௧௯]

---

(பிரதி)—1. வரிபெய். 2. புனற்ற.

"கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று." [குறள் - ௲௩௱௰௩]

எனவரும்.

பிறவும் அன்ன.

[1]புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதி னெய்யணி மயக்கம் புரிந்தோ ணோக்கி யையர்பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ் செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்ணும் என்பது—[2]புதல்வனைப் பயந்த ஈன்றணிமை நீங்கினபொழுதின்கண் நெய்யணிமயக்கம் புரிந்தவளைக் குறித்து முனிவர்மாட்டும் அமரரைக்குறித்தும் செய்யாநிற்கும் பெரிய சிறப்பொடு சேர்தற்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

நெய்யணி மயக்கமாவது வாலாமை நீங்கி நெய்யணிதல். நோக்கிச் சேர்தல் எனக் கூட்டுக.

"வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூ னங்குடிக் குதவி
நெய்யோ டிமைக்கு மைய[வி]த் திரள்தாள்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்
புதல்வனை யீன்றெனப் பெயர்பெயர்த் தவ்வரித்
திதலை யல்குன் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோமெல் லஞ்சி லோதியெனப்
[3]பன்மா ணகட்டிற் குவளை யொற்றி
யுள்ளினெ னுள்ளுறை [4]யெற்கண்டு மெல்ல
முகைநாண் முறுவ லொன்றித்
தகைமல ருண்கண் [5]கைபுதைத் ததுவே" [நற்றிணை - ௩௭௦]

எனவரும்.

பயங்கெழ துணையணைப் புல்லிப்புல்லாது உயங்குவனளிகிடந்த கிழத்தியைக் குறுகி அல்கல் முன்னிய நிறையழிபொழுதின் மெல்லென்சீறடி புல்லிய இரவினும் என்பது—தலைவன் பரத்தையிற் பிரிந்துழி ஊடற் கரு[த்]தினளாய்ப் பயங்கெழுதுணை அணையைப் புல்லிப் புல்லாதுவருந்திக் கிடந்த தலைவியைக் கிட்டித் தங்குதலைக்குறித்த நிறையழிபொழுதில் தலைவியது மெல்லென்ற சீறடியைப் புல்லிய இரத்தற்கண்ணும் [தலைவன் கூற்று நிகழும்] என்றவாறு.

உதாரணம்:—

"ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று" [குறள் - ௲௩௱௭]

"ஊடுக மன்னோ வொளியிழா யாமிரப்ப
நீடுக மன்னோ விரா" [குறள் - ௲௩௱௨௯]

"ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்" [குறள் - ௲௩௱௨௨]

எனவரும்.

---

(பிரதி)—1. புதல்வர்ப். 2. புதல்வரைப். 3. படைமானகட்டிற். 4. வெற்கண்டு. 5. கைபுதைதந் துகவே.

உறலருங்குரைமையி னூடன் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற்கண்ணும் என்பது—ஊடல் மிகுத்தோளை உறுதற்கருமையாற் பிறபிற பெண்டிர் ஏது [வாக] ஊடல் உணர்த்தற்கண்ணும் என்றவாறு.

"[1]புனம்வளர் பூங்கொடி யன்னாய்" என்னும் மருதக் கலியுள்,

ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டின மார்ப்ப விடையிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும். [கலித் - கூஉ]

எனப் பிறபிற பெண்டிரைக் காட்டித் தலைவன் ஊடலுணர்த்தியவாறு அறிந்து கொள்க.

பிரிவினெச்சத்துப் புலம்பிய விருவரைப் பரிவு நீக்கிய பகுதிக்கண்ணும் என்பது—பிரிவு நிமித்தமாக வருந்திய மனையாளையும் காமக்கிழத்தியையும் அவ்வருத்தத்து நின்று நீக்கிய பகுதிக் கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு. அஃதாவது பிரியேன் என்றல்.

"பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறிருங் கதுப்பும்
போது [2]மணையும் போலும் யாழநின்
மாத ருண்கணும் வனப்பின் தோளும்
இவைகாண் டோறு மகமலிந் தியானு
மறநிலை பெற்றோ ரனையே னதன்றலைப்
பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்
வினையும் வேறு புலத்திலே னினையின்
யாதினிற் பிரிகோ மடந்தை
காத லுறனுங் கடலினும் பெரிதே." [நற்றிணை - ௩௯௯]

இக்கூற்று இருவர்மாட்டும் ஒக்கும்.

நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும் என்பது—நிலைநிற்க மிகப்பிரியும் பிரிவின் கண் அஞ்சிய நோயின்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

"ஆள்வழக் கற்ற சுரத்திடைக் [க்] கதிர்தெற
நீளெரி பரந்த நெடுநிலை [3]யாஅத்துப்
போழ்வளி முயங்கும் புல்லெ னுயர்சினை
முடைநசை யிருக்கைப் பெடைமுக நோக்கி
யூன்பழித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனி னீடிய வேயுயர் நனந்தலை
மலையுழந் தெய்துஞ் செய்வினைப் பொருட்பிணிப்
பல்லிதழ் மழைக்கண் மா[அ] யோள்வயிற்
பிரியப் புணர்வ தாயிற் பிரியா
தேந்துமுலை முற்றம் வீங்கப் பல்லூழ்
சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளு

(பிரதி)—1. புள்வளர். 2. மணையும். 3. யாழத்துப்.

மனைமுதல் வினையொடு முவப்ப
நினைமா நெஞ்ச நீங்குதன் மறந்தே." [அகம் - ௫௧]

எனவரும்.

**சென்று கையிகந்து பெயர்த்துள்ளிய வழியும்** என்பது—மேற்கூறியவாறினைக் கையிகந்து முன்னொருகாற் சென்று மீட்டும் அந்நெறியினைப் போக நினைந்தவழியும் கூற்று நிகழும் என்றவாறு.

"இருங்கழி முதலை மேந்தோ லன்ன
கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை யீன்றிளைப் பட்ட
கொடுவாய்[ப் ]பேடைக்[1]கல்கிரை தரீஇயர்
மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
[2]வான்றோய் சிமய விறல்வரைக் கவா[அ]ற்
றுளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி [3]யும்வறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடைக்
கொள்ளை மாந்தரி னானது கவரும்
புல்லிலை [4]மராத்த வகன்சே ணத்தங்
கலந்தர லுள்ளமொடு கழியக் காட்டிப்
பின்னின்று துரக்கும் நெஞ்ச நின்வாய்
வா[ய்]போற் பொ[ய்]ம்மொழியெம் மெவ்வங் களைஇய
கவிரித ழன்ன காண்பின் செவ்வா
யந்தீங் கிளவி யாயிழை மடந்தை
கொடுங்குழைக் கமர்த்த நோக்கம்
நெடுஞ்சே ணாரிடை விலங்கு ஞான்றே." [அகம் - ௩]

எனவரும்.

**காமத்தின் வலியும்** என்பது—பொருளினுங் காமம் வலியுடைத்து என உட்கொண்ட வழியும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தே ணாடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே
பூப்போ லுண்கட் பொன்போன் மேனி
மாண்வரி யல்குற் குறுமகள்
தோண்மாறு படூஉம் வைகலோ டெமக்கே." [குறுந் - ௱௧]

எனவரும்.

**கைவிடின் அச்சமும்** என்பது—தலைவியைக் கைவிட்டவழி அவளது உயிர்ப்பொருட்டு அஞ்சுதற்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கேளா டமியண் மென்மெல

(பிரதி)—1. கலதிரை. 2. யான்றோய். 3. யும் வறிதுண்டருந்தும். 4. யார்த்த.

நலமிகு சேவடி நிலம்வரக் கொள்ளாக்
குறுக வந்து கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்ல னினைவுடன்
[1]முளிந்த வோமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல [2]மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கு நிரனிலை யதர
பரன்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப வெண்ணினி ராயி னறத்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன வாக வென்[னு]நள் போலு
முன்னங் காட்டி முகத்தி னுரையா
வோவச் செய்தியி னொன்றுநினைந் தேற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர்ப் பயந்த துணையமை பிணையன்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த வணியழி தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே யொண்டொடி
உழைய மாகவு [3]மினைவோள்
பிழையலண் மாதோ [4]பிரிதுநா மெனினே." [அகம் - ரு]

எனவரும்.

தானவட் பிழைத்த நிலையின் கண்ணும் என்பது—தலைவன் தலைவியை நின்னிற் பிரியேன் என்ற சொல்லிற் பிழைத்த நிலையின்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

பிழைத்தலாவது பிரிதல்.

"வயங்குமணி பொருத வகையமை வனப்பிற்
பசுங்காழ்ல்குன் மாஅ யோளொடு
வினைவனப் பெய்திய புனைபூஞ் சேக்கை
வினைபொலி நெடுநகர்த் தங்கி யின்றே
இனிதுடன் கழிந்தன்று மன்னே நாளைப்
பொருந்தாக் கண்ணேம் புலம்புவந் துறுதரச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே சாத்தெறிந்
ததர்கூட் டுண்ணு மணங்குடைப் பகழிக்
கொடுவி லாடவர் படுபகை வெரீஇ
ஊரெழுந் துலறிய பீரெழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிநுளங்கு சிறுபுற முரிஞ்ச வொல்கி

(பிரதி)—1. முனந்த. 2. மெழுகுநுனை. 3. மினையோள். 4. பிறிதுநா.

யிட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
[1]மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்
தெழுதணி கடவுள் போகலிற் புல்லென்
றொழுகுபலி மறந்த மெழுகாப் [2]புன்றிணைப்
பாணாய் துள்ளிய படைக்கட் சிற்றிற்
குயில்காழ் சிதைய மண்டி யயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
போர்மடி நல்லிறைப் பொதியி லானே." [அகம் - ௱௬௭]

எனவரும்.

உடன்சேறற் செய்கை யோடு என்பது—உடன்போக வேண்டு மெனச் சொல்லியவழியும் என்றவாறு. ஒடு எண்ணின்கண் வந்தது.

"எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மெல்வந்த சீறடித் தாமரை
அல்லிசே ராயித ழரக்குத் [3]தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ." [கலித் - ௰௩]

எனவரும்.

அன்னவை பிறவும் மடம்பட வந்த தோழிகண்ணும் என்பது—மேற் சொல்லப்பட்டவையிற்றினும் மடமைபடவந்த தோழி மாட்டும் கூற்று நிகழும் [என்றவாறு.]

அவையாவன:

"இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ." [கலித் - உ]

என்வரும்.

இங்ஙகரன கூறியவழித் தலைவன் கூற்று நிகழும். இவ்வழிக் கூறுங் கூற்றுக் காமமாகத் தோன்றாது பொருளாகத் தோன்றும்: காமத்திற்கு மாறாகக் கூறல் வேண்டுதலின்.

"இன்பம் விழையான் வினைவி[ழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன் றுந்] தூண்." [குறள் - ௬௱௰௫]

எனவரும்.

வேற்றுநாட் டகல்வயின் விழுமத்தானும் என்பது—வேற்றுநாட்டு அகலும்வழி வரும் நோயின்கண்ணும் என்றவாறு.

அஃதாவது, பிரிவு ஒருப்பட்ட பின்பு போவேமோ தவிர்வேமோ எனச்சொல்லும் மனநிகழ்ச்சி.

உதாரணம்:—

"உண்ணா மையி னுயங்கிய மருங்கு
லாடாப் படிவத் தான்றோர் போல
வரைசார் சிறுநெறி நிரையுடன் செல்லுங்
கான யானை கவினழி குன்றம்
இறந்துபொரு டருதலு மாற்றாய் சிறந்த

(பிரதி)— 1. பணிப்புறாத். 2. புன்றினை. 3. தொயலத்தவைபோற்.

சில்லிருங் கூந்த னல்லகம் பொருந்தி
யொழியின் வறுமை யஞ்சுதி யளி[த்]தக
வுடையை வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவே லெஃகிலை யிமைக்கு
மழைமருண் பஃறேருன் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை
யிறவொ[டு] வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
வொன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே." [அகம் - ௱உ௩]

எனவரும்.

மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும் என்பது—பிரிந்த தலைவன் மீட்டு வரவு வாய்ந்த வகையின் கண்ணும் என்றவாறு.

'வரவு' என்பது கடைகுறைந்தது.

உதாரணம்:—

"தாழிரு டிமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி யூழிற்
கடிப்பிடு முரசின் முழங்கி யிடித்திடித்துப்
பெய்யினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்ம லுள்ளமொ
டிவணின் மேவின மாகிக் குவளைக்
குறுந்தா ணண்மலர் நாறு
நறுமென் கூந்தன் மெல்லணை யேமே." [குறுந் - உ௭0]

இது வந்து புகுந்த தலைவன் கூற்று.

அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும் என்பது—தலைவன் பிரிந்துழிப் பெருகிய சிறப்பினும் கூற்று நிகழும் [என்றவாறு.]

"கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ டிடைப்பட விரைஇ
[ஐ]யதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோண் மேனி
முறியினும் வாயது முயங்குக மினியே." [குறுந் - ௬உ]

எனவரும்.

பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும் என்பது—தானுற்ற வின்பத்தினைப் பாகற்குக் கூறுதற் கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—

"மறத்தற் கரிதாற் பாக பன்னாள்
வறத்தொடு வருந்திய வுலகுதொழிற் [1]கொளீஇய
[2]மழைபெயல் பொழிந்த புதுநீர் வல்வர
நாநவில் பல்கிளை கறங்கு மாண்வினை
மணியொலி கொ[ள்]ளாள் வாணுத லதனை

---

(பிரதி)—1. கொழீஇய. 2. மழைமழை.

னேகுமி னென்ற விளையர் வல்லே
இல்புக் கறியுணர் வாக மெல்லென
மண்ணுக் கூந்தன் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குர லழுத்திய
வந்நிலை புகுதலின் மெய்வருத் துராஅய்
வீழ்பூ முடியள் கவைஇய
மடமா வரிவை மகிழ்ந்தயர் நிலையே.” [நற்றிணை - ௧௨]

எனவரும்.

**காமக் கிழத்தி மனையோ ளென்றிவ ரேழுறு கிளவி சொல்லிய வெதிரும்** என்பது—காமக்கிழத்தியும் மனையாளும் என்று சொல்லு மிருவரும் பாதுகாவலாகக் கூறிய கூற்றினெதிரும் தலைவன் கூற்று நிகழும் [என்றவாறு].

இவ்விருவரும் இல்லுறை மகளிராதலின் தலைவன்மாட்டு நிகழுமவை இருவருக்கும் ஒக்கும் என்க.

அஃதாவது வழிவந்தவா றென்னை யெனவும் வருத்த முற்றீ ரெனவும முந்நிகரன பல கூறுதல்.

உதாரணம்:—

“எரிகவர்ந் துண்ட [1]வென்றூழ் நீளிடை
யரிய வாயினு மெளிய வன்றே
யவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா ணேக்கிநின் [2]னுள்ளியாம் வரவே.” [ஐங்குறு - ௯௰]

எனவரும்.

**சென்ற தேளத் துழப்பு நனிவிளக்கி யின்றிச் சென்ற தன்னிலை கிளப்பினும்** என்பது—தான் சென்ற தேயத்து வருத்தத்தை மிகவும் விளக்கித் தலைவியை யொழித்துச் சென்ற தன்னிலைமை கிளப்பினும் [கூற்று நிகழும்] என்றவாறு.

உதாரணம்:—

“ஒழித்[த]து பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்
துள்ளியு மறிதிரோ வெம்[மெ]மன யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க
நோய்முந் துறத்து நொதுமன் மொழியனின்
ளுய்நல மறப்பனோ மற்றே சேணிகந்
[3]தொலிகழை பிசைந்த வொலிசொரி யொண்பொறி
படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுன் மீமிசை வளிசுழற் றுறுலிற்
காடுகவர் [4]பெருந்தீ யோடுவயி னோடலி
னதர்[செ]கடுத் தலறிய சாத்தோ டொராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்
தினந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு

(பிரதி)—1. வென்னூழ். 2. றுள்ளியாம். 3. தொலிதழைமிசைந்த. 4. பொருந்தி.

ஞான் றுதோன் றவிர்சுடர் மான்றுட் பட்டெனக்
கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி
[1]யருஞ்செல வாற்று வாரிடை ஞெரேரெனப்
பரந்துபடு பாய னவ்வி யற்றென
விலங்குவளை செறியா [2]விகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்
டின்னகை வினைய மாகவு மெம்வயி
னூடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு [3]குவவுநுத னீவி
[4]நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து
[வ]றுங்[கை] காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வுலம்வரல்
போற்று யாதலிற் புலத்தியா [லெம்]மே." [அகம் - ௩௯]

எனவரும்.

அருந்தொழில் முடித்த செம்மற் காலை விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும் என்பது—அரியவினையை முடித்து வந்த தலைமைக்காலத்து விருந்தினரோடு கூட நல்லவற்றைக் கிளத்தி விருப்ப முறுதற்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம் வந்தவழிக் காண்க.

மாலை ஏந்திய பெண்டிரு மக்களுங் கேளி ரொழுக்கத்துப் புகற்சிக் கண்ணும் என்பது—தலைவனை எதிர்கொண்டு மங்கலமாக மாலையேந்தி நின்ற பெண்டிரும் மக்களும் கேளிரும் ஒழுகும் ஒழுக்கத்து விருப்பத்தின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

கேளிரும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஈண்டு ஒழுக்கமாவது—சொல்லாது பெயர்ந்தீர் என்றலும், இளமையுங் காமமும் நோக்காது பெயர்ந்தீர் என்றலும் கூறி, இதற்குக் காரணம் என்னை எனத் தலைவன் வந்துழி அவர் நிகழ்த்தும் நிகழ்ச்சி.

உதாரணம்:—

"உள்ளினெ னல்லனோ யானே யுள்ளி
நினைந்தனெ னல்லனோ பெரிதே நினைந்து
மருண்டனெ னல்லனோ வுலகத்துப் பண்பே
நீடிய மராஅத்த கோடுதோய் மலிநிறை
யிறைத்துணைச் சென்றற் றாங்க
மனைப்பெருங் காமம் மீண்டுகடைக் [5]கொளவே." [குறுந் - ௯௯]

எனவரும்.

ஏனைய வாயிலோ ரேதிரொடு தொகைஇ என்பது—பெண்டிரு மல்லாத வாயில்களாயினர் எதிர் கூறுங் கூற்றும் தலைவன்மாட்டு நிகழும் என்றவாறு.

இவை யெல்லாம் காமப்பொருளாகத் தோன்றா: அவர்செயல் பொருளாகத் தோன்றும்.

உதாரணம் வந்தவழிக் காண்க.

(பிரதி)—1. யருசெலவாரவுரு விடை. 2. விகுதி. 3. குவவுங் குதனீ. 4. வந்துறுங் கதுப்புளிரிய. 5. கொளவோன்.

பண்ணமை பகுதிப் பதினேரு மூன்றும் எண்ணருஞ் சிறப்பிற்கிழவோன்மேன என்பது—செய்தலமைந்த பகுதியினையுடைய முப்பத்துமூன் றிடத்தினும் நிகழுங் கூற்று மிக்க சிறப்பினையுடைய கிழவோன் மேலன என்றவாறு.

மிக்க சிறப்பினையுடைய கிழவோன் மேலன என்றமையால், மிகாத சிறப்பினையுடையார் மாட்டு இவையெல்லாம் ஒருங்கு நிகழ்தலில என்று கொள்க. செயலமை பகுதி என்றதனன், இவ்விடங்களின் வரும் பொருள் வேறுபாடு[கட்கு]ம் இவையே இடமாகக்கொள்க.(௫)

௱௪௬. அவனறி வாற்ற வறியு மாகலின்
ஏற்றற் கண்ணு நிறுத்தற் கண்ணும்
உரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற்
பெருமையிற் றிரியா வன்பின் கண்ணுங்
கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலின்
அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்
இன்பமு மிடும்பையு மாகிய விடத்துங்
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளியி னீக்கிய விளிவரு நிலையும்
புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்
ககன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த் தருக்கி
எதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினுந்
தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி
எங்கையர்க் குரையென விரத்தற் கண்ணுஞ்
செல்லாக் காலைச் செல்கென விடுத்தலுங்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
யேமுறு விளையாட் டிறுதிக் கண்ணுஞ்
சிறந்த செய்கை யவ்வழித் தோன்றி
அறம்புரி நெஞ்சமொடு தன்வர வறியாமைப்
புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானுந்
தந்தைய ரொப்பர் மக்களென் பதனல்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கினுங்
கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது
நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியி னீங்கிய தகுதிக் கண்ணுங்
கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காத லெங்கையர் காணி னன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணுந்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை யுள்ளிய வழியுந்

தன்வயிற் சிறப்பினு மவன்வயிற் பிரிப்பினும்
இன்னாத் தொல்சூ ளெடுத்தற் கண்ணுங்
காமக் கிழத்தி நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணுங்
கொடுமை யொழுக்கத்துத் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமைக்
காய்த்லு முவத்தலும் பிரித்தலும் பெட்டலும்
ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப.

என்-னின், கற்பின்கண் தலைவிகூற்று நிகழும் இடந் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

ஏற்றல் முதலாக வாயிலின் வரூஉம் வகையொடுகூடத் தலைவி கூறல் உரியதாகும் என்றவாறு.

அவனறி வாற்ற வறியு மாகலின் ஏற்றற் கண்ணும் என்பது—தலைவனது நினைவைத் தலைவி மிக அறியுமாகலின் அவனை யுயர்த்துக்கூறுதற் கண்ணுந் தலைவி கூற்று நிகழும்.

உதாரணம்:—

"நின்ற சொல்ல[ர்] நீடுதோன் றினிய
ரென்று மென்றோள் பிரிவறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்திற் கொண்ட தீந்தேன் போலப்
புரை[ய] மன்ற புரையோர் கேண்மை
நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை யுறுப செய்பறி யலரே." [நற்றிணை - க]

எனவரும்.

நிறுத்தற் கண்ணும் என்பது—தலைவனது பண்பினைத் தோழி கூறியவாற்றால் தான் நிறுத்துக் கூறுதற்கண்ணும் என்றவாறு.

உதாரணம்.—

"முடமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
[1]பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமி ழருவிப் பாறை மருங்கி
னுடுமையின் முன்னர்த் தாகக் கோடியர்
விழவுக்கொண் மூதூர் விறலியர் பின்றை
முழவன போல வகப்படத் தழீஇ

(பிரதி)—1. மயல்கிளைத்.

இன்றுணைப் பயிருங் குன்ற நாடன்
குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியல
னெடுநா மொழிய [1]னன்பின னெனநீ
[2]வல்ல கூறி வாய்வதிற் [3]புணர்த்தோய்
[4]நல்லை நாணிற் காதலந் தோழி
கடும்பரிப் பு[ரவி] நெடுந்தே ரஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரும் பனுவற்
றொல்லிசை நிறீஇய வுரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புணர்ந்த திறத்தினும்
வதுவை நாளினு மினியனு லெமக்கே." [அகம் - ௩௫௨.]

எனவரும்.

உரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற் பெருமையிற் றிரியா வன்பின் கண்ணும் என்பது—தலைவிக்கு உரிமையைக் கொடுத்த கிழவோன்மாட்டுப் பெருமையிற் றிரியா அன்பின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"நிலத்தினும் பெரிதே [வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தே னிழைக்கும்] நாடனொடு நட்பே." [குறுந் - ௩]

எனவரும்.

கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலி னலமரல் பெருகிய காமத்து மிகுதியும் என்பது—தலைவனைத் தலைவி [நீங்கித்]தனிமையுறுதல் பெரிதாகலின் ஆண்டு அலமரல் பெருகிய காமத்தின் மிகுதியின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"[நீ]ர் நீடாடிற் கண்ணுஞ் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்குந்
தணந்தனி ராயினெம் மி[ல்]லுய்த்துக் கொடுமோ
வந்தண் [பொய்கை] யெந்தை யெம்மூர்க்
கடும்பாம்பு வழங்குந் தெருவி
னடுங்கஞ ரெவ்வங் களைந்த வெம்மே." [குறுந் - ௩௫௪]

எனவும்,

"என்கை[க்] கொண்டு தன்க ணொற்றியுந்
தன்கை[க்] கொண்டென் னன்னுத னீவியும்
அன்னை போல வினிய கூறியுங்
கள்வர் போலக் கொடிய[ன்] மாதோ
மணியென விழிதரு மருவிப் பொன்னென

---

(பிரதி)—1. னனவின. 2. வல்லே. 3. புறத்தோய். 4. செல்லே.

வேங்கை வீதரு மோங்குமலை யடுக்கத்
தாடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்குஞ் சேண
கோடுயர் பிறங்கன் மலைகிழ வோனே." [நற்றிணை - உ௮]

எனவும்,

"மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்று மியாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே." [ஐங்குறு - ௰௧]

எனவும்,

"வீழுநர் வீ[ழப் படு]வோர்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு." [குறள் - ௲௱௯௩]

எனவும் வரும்.

இன்பமும் இடும்பையு மாகியவிடத்தும் என்பது—தலைவிக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கு நிகழும் வழியும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாம் புணர்வு." [குறள் - ௲௱௫௨]

எனவும்,

"குக்கூ வென்றது கோழி யதனெதிர்
துட்கென் றற்றென் றூ[உ] நெஞ்சம்
தோடோய் காதல[ர்ப் பிரி]க்கும்
வா[ள்] போல் வைகறை வந்தன்று லெனவே." [குறுந் - ௱௫௭]

எனவும் வரும்.

கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியி னீக்கிய விளிவரு நிலையும் என்பது—புதல்வன் றோன்றிய நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறுமாறு பண்ணிச் செறிவுநீக்கி[ய] இளிவந்த நிலையின்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

இளிவந்த நிலையாவது தன்னை அவமதித்தான் என்னுங் குறிப்பு.

உதாரணம்:—

"கரும்புநடு பாத்தி[க்] கதிர்த்த வாம்பல்
சுரும்பு[ப]சி [1]களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்ற[வெம்] மேனி முயங்க
லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே." [ஐங்குறு - ௬௫]

எனவரும்.

(பிரதி)— 1. தீளையும்.

வேங்கை வீதரு மோங்குமலை யடுக்கத்
தாடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்குஞ் சேண
கோடுயர் பிறங்கன் மலைகிழ வோனே." [நற்றிணை - உ அ]

எனவும்,

"மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்று மியாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே." [ஐங்குறு - மக]

எனவும்,

"வீழுநர் வீ[ழப் படு]வோர்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு." [குறள் - ௲௱௩]

எனவும் வரும்.

இன்பமும் இடும்பையு மாகியவிடத்தும் என்பது—தலைவிக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கு நிகழும் வழியும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாம் புணர்வு." [குறள் - ௲௱௫௨]

எனவும்,

"குக்கூ வென்றது கோழி யதனெதிர்
துட்கென் றற்றென் றா[உ] நெஞ்சம்
தோடோய் காதல[ர்ப் பிரி]க்கும்
வா[ள்] போல் வைகறை வந்தன்று லெனவே." [குறுந் - ௱௫௭]

எனவும் வரும்.

கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியி னீக்கிய விளிவரு நிலையும் என்பது—புதல்வன் றோன்றிய நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறுமாறு பண்ணிச் செறிவுநீக்கி[ய] இளிவந்த நிலையின்கண்ணுங் கூற்று நிகழும் [என்றவாறு.]

இளிவந்த நிலையாவது தன்னை அவமதித்தான் என்னுங் குறிப்பு.

உதாரணம்:—

"கரும்புநடு பாத்தி[க்] கதிர்த்த வாம்பல்
சுரும்பு[ப]சி [1]களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்ற[வெம்] மேனி முயங்க
லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே." [ஐங்குறு - சுரு]

எனவரும்.

(பிரதி)— 1. தளையும்.

"நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரி[ல்வ]ழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
[1]ஞெகிழ்தொடி யிளையவ ரிளமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்:
... .. ...
... ... ...
மண்டுநீ ராரா மலிகடல் [போலுநின்]
தண்டாப் பரத்தை தலைக்கொள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி[மற் றி]யாமேற்
றேலாமோ நின் பொய் மருண்டு." [கலித் - எங]

எனக் கூறுதலால் தான் தாழ்ந்தவாறும், எங்கையர்க்கு உரை இற்றெனக் கூறிய வாறும் காண்க.

"நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே
நின்மார்பு நயந்த நன்னுத லரிவை
வேண்டிய குறிப்பினை யாகி
ஈண்டு நீ[ய]ருளா தாண்டுறை தல்லே." [ஐங்குறு - சசு]

இதுவும் அது.

செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும் என்பது — தலைவன் போகாத காலத்துப் போவெனக் கூறுதலும் என்றவாறு.

உதாரணம்:—

"பூங்கட் புதல்வனை பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை [2]நில்லாதி
ஆங்கே யவர்வயிற் சென்றி யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து." [கலித் - எக]

எனவரும்.

காமக் கிழத்தி தன்மகத் தழீஇ யேமுறு விளையாட் டிறுதிக் கண்ணும் என்பது—காமக்கிழத்தி தலைவிமகனைத் தழீஇ ஏமுற்ற விளையாட்டின் இறுதிக் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யவிரிதழ் புரையு
மாசி லங்கேழ் மணிமருள் செவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்ட
கூரெயிற் றரிவை குறுகி யாவருங்
காணுந ரின்மையிற் [3]சேர்த்தனள் பேணிப்
பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை

(பிரதி)—1. ஞெகிழ்முலை யிளையவ ரிடைமுலைத். 2. யில்லாதி. 3. சேர்த்தனன்.

வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து
கொண்டன [1]னின்றோட் கண்டுநிலே செல்லேன்
மாசில் குறுமக ளெவன்பே துற்றனை
நீயுந் [2]தாயை யிவற்கென யான்றற்
கரைய வந்து விரைவினள் கவைஇக்
களவுடன் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோ ளிலைகண் டியானும்
பேணின னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவு ளன்னோணின்
மகன்று யாதல் புரைவதா லெனவே." [அகம் - ⅲசு]

எனவரும்.

சிறந்த செய்கை யவ்வழித் தோன்றி யறம்புரி நெஞ்சமொடு தன் வரவறியாமை புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத்தானும் என்பது—சிறந்தசெய்கையினையுடைய அவ்விடத்துத் தலைவன் தோன்றி அறம்புரி நெஞ்சத்தோடே தனது வரவைத் தலைவியறியாளாக நின்று தலைவியைப் புறஞ்செய்து அவள் மாட்டுளதாகிய ஊடலைப் பெயர்த்தல் வேண்டினவிடத்தும் தலைவிமாட்டுக் கூற்று நிகழும் [என்றவாறு.]

அவ்வழி என்றது—தலைவியுங் காமக்கிழத்தியைப் போலத் தன்மகனைக் கொண்டு விளையாடிய வழியும் என்றவாறு.

"ஐயற விளங்கிய" என்னும் மருதக்கலியுள்,

"பெரும, விருந்தொடு [3]கைதுவா வெம்மையும் உள்ளாய்
பெருந்தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீகற்ற சொற்களியான் கேட்க
வருந்தோவா நெஞ்சிற் கமிழ்தயின் [4]றற்றுப்
பெருந்தகாய் கூறு சில"

எனவும்,

"எல்லிழாய்,
சேய்நின்று நாங்கொணர்ந்த பாணன் சிதைந்தாங்கே
வாயோடி யேனுதிப் பாடியோ மென்றற்றால்
நோய்நாந் தணிக்கு மருந்தெனப் பாராட்ட
வோவா தெடுத்தெடுத் தத்தத்தா வென்பவன்மான
வேய்மென்றோள் [வேய்த்][5]திறஞ் சேர்த்தலு மற்றிவன்
வாயுள்ளிப் போகா னரோ"

எனவும்,

"உள்ளி யுழையே யொருங்கு படைவிடக்
கள்வர் பட[ர்]தந் ததுபோலத் தாமெம்மை
யெள்ளுமார் வந்தாரே யீங்கு" [கலித் - அக]

எனவும், இவ்வாறு வரும்.

(பிரதி)—1. நிற்றோட். 2. தாம்வயிறுறற்கென. 3. கைதுவா. 4. றுற்றுப். 5. புறஞ்.

**தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால், அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கினும்** என்பது—தந்தையரை மக்கள் ஒப்பர் என்பதனால் அந்த மில்லாத சிறப்பினை யுடைய மக்களைப் பழித்தற்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

"மைபடு சென்னி மதகளிற்றோடை" என்னும் மருதக்கலியுள்,

"வீத லறியா விழுப்பொரு ணச்சியார்
காதன்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
மாதர்மா ணோக்கின் மகளிரை நுந்தைபோ
னோய்கூர நோக்காய் விடல்." [கலித் - அசு]

எனவரும்.

**கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப் பகுதியி னீங்கிய தகுதிக்கண்ணும்** என்பது—கொடியாரது கொடுமை சுடாநின்றதெனப் புணர்ச்சியை ஒடியாது புகழைவிரும்பினோர் சொல்லோடே ஒருப்பட்டு வேறுபடுதலின் நீங்கிய தகுதிக்கண்ணும் என்றவாறு.

அஃதாவது, அக்காலத்துத் தக்கதறிதல். புகழை விரும்பினோர் சொல்லும் சொல்லாவது, காமம் விரும்பும் பரத்தையரைப்போலாது அறத்தை விரும்புதல்.

உதாரணம்:—

[1]'யாரிவனெங் கூந்தல்' என்னும் மருதக்கலியுள்,

"[2]மாண மறந்துள்ளா நாணிலிக் குப்போர்
புறஞ்சாய்ந்து கண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடே[எ] னெனநெருங்கிற் றப்பினே
னென்றடி சேர்தலு முண்டு." [கலித் - அக]

என்பது ஆற்றாமை வாயிலாகப் பகுதியி னீங்கிய தகுதி.

பாணன் முதலானோர்க்கு வாயில் நேர்ந்தது வந்தவழிக் காண்க.

**கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக் காத லெங்கையர் காணி னன்றென மாதர் சான்ற வகையின் கண்ணும்** என்பது—தலைவனது கொடுமை யொழுக்கத்தினைத் தலைவியே பொறுக்கவேண்டி அவளடிமேல் வீழ்ந்தவனை நெருங்கி நின்மாட்டுக் காதலையுடைய எங்கையர் காணின் இப் பணிதல் நன்றா மெனக் காதலமைந்தவகையின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

'நில்லாங்கு நில்லா' என்னும் மருதக்கலியுள்,

"நல்லாய், பொ[ய்]யெல்லா மேற்றித் [3]தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தேன்; அருளினி ;
அருளுகம் யாம்யாரே [4]மெல்லா தெருள
வளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி யளித்து

(பிரதி)—1. யவாகவனெங்ங் கூந்தல். 2. மான. 3. தூறு. 4. யெல்லாந்.

விடலைநீ நீக்கலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லா நின்பூழ்." [கலித் - கூரு]

இதனுள் 'கையொடு [கண்]டை பிழைத்தேனருள்' என அடிமேல் வீழ்ந்தவாறும், 'அருளுகம் யாம்யாரேம்' எனக் காதலமைந்தவாறுங், 'நீ நீக்கலின் நின் பூழெல்லாம் நடலைப்பட்டு நோய்பெரிதேய்க்கும்' அவற்றை யின்னும் விளித்து நின் பாணனோடாடி யளித்து விடும் எனவும், இப்பணிதல் நின் பெண்டிர்க்கு நன்றாகுமே எனவுங் கூறியவாறு காண்க. ஈண்டுப் பூழ் என்றது குறிப்பினாற் பரத்தையரை.

தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை யுள்ளியவழியும் என்பது—தாயரைக் கிட்டிய நல்ல அணியை யுடைய புதல்வனை மாயப்பரத்தை குறித்த வழியுங் கூற்று நிகழும் [என்றவாறு.]

புதல்வனைப் பரத்தைமை குறித்தலாவது, தலைவன் புறப்பெண்டிர்மாட்டுப் போகியவழி வெகுளுமாறு போலப் புதல்வனையும் அவரிடைச் சென்றவழி வெகுளல். கண்ணி[ய] நல்லணி யெனவே அவர் கொடுத்த நல்லணி யென்பது பெறுதும். பரத்தைமை உள்ளாத வழி இவள் மாட்டுக் குறிப்பு நிகழாத[ா]ம். மாயமென்பது பரத்தைக்குப் பண்பாகி இனஞ் சுட்டாது வந்தது.

உதாரணம்:—

"உறுவளி தூக்கு [1]முயர்சினை மாவி
னறுவடி யாரிற் றவைபோ லழியக்
கரந்தியா [2]னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்தவென் மென்முலைப் [3]பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த போழ்தினு [4]னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீ[இ]யர் [வ]ாவெனச் சென்றாய் விலங்கினை
யீரமி லாத விவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு.

நீருள், அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ
வி[வ]ன்மன்ற யானேவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போதந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை [5]யென்றிவற்
கொத்தவை யாய்பாய்ந் [6]தணிந்தார்; பிறன்பெண்டிர்,
ஈத்தவை கொள்வா ரிஃதொத்தன் சீத்தை
[7]செறுத்தக்கான் மன்ற பெரிது.

சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு;

(பிரதி)—1. முயர்சிலை மாயி. 2. மரக்கவுங். 3. பாலமு. 4. னெல்லாங். 5. யின்றிவிவற். 6. தனனிநதிரா. 7. செறுதற்காண.

அவற்றுள், நறுவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
சுறுவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ்
செறியப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
1பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
யறீஇய செய்த வினை ;

அன்னையோ, இஃதொன்று:

முந்தையே கண்டு மெழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்று லிஃதொன்று
தந்தை யிறைத்தொடி மற்றிவன் றன்கைக்கட்
டந்தாரியா ரெல்லா விது ;

என்னெத்துக் காண்க பிறரு மிவற்கென் னும்
தன்னலம் பாடுவி தந்தாளோ நின்னை
யிதுதொடு கென்றவர் யார் ;

அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
2வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேலின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா
டானியாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்." [கலித் - அ௪]

எனவரும்.

தன்வயிற் சிறப்பினும் அவன் வயிற் பிரிப்பினும் இன்னாத் தொல்சூள் எடுத்தற் கண்ணும் என்பது—தன்மாட்டு நின்ற மிகுதியானும் அவன்மாட்டு நின்ற வேறுபாட்டானும் இன்னாத பழைய சூளுறவைத் தலைவி யெடுத்தவழியும் கூற்று நிகழும் [என்றவாறு.]

தலைமகள்மாட்டு மிகுதி யாதோ வெனின்,

"மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியு ளுரிய." [பொருளியல் - ௩௨]

என்றாராகலான், அக்காலத்து மிகுதியுளதாம்.

"தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீகூறும் பொய்ச்சூ ளணங்காகி[ன்] மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு." [கலித் - அஅ]

எனவரும்.

காமக்கிழத்தி நலம் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும் என்பது—காமக் கிழத்தி நலத்தினைப் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

1. பொடியொற்றிக். 2. வெனறிபுனலன்னது.

நலம்பாராட்டுவோள் தலைவி. அவள்பாராட்டுதல் தீமைபற்றி வருதலான், அதனாற் சால்லி முடிப்பது பிறபொருளாயிற்று.

உதாரணம்:—

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே." [ஐங்குறு - ஙஉஉ].

இதனுள் அவள்மிக்க இளமை கூறித் தலைவனைப் பழித்தாளாம்: ஒருமுகத்தாற் புலந்தவாறு. இன்னுந் தலைமகள் நலம்பாராட்டியவழிக் கூறவும் பெறும்.

"அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை யாயினு
நீயா கியரெங் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே." [குறுந் - சுக]

எனவரும்.

கொடுமை ஒழுக்கத்துத் தோழிக் குரியவை வடுவறு சிறப்பிற் றிரியாமைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையி னும் என்பது—தலைவி கொடுமையொழுக்கத்துத் தோழிக்குக் கூறுதற் குரியவை குற்ற மற்ற சிறப்பினையுடைய கற்பின்கண் திரியாது தலைவனைக் காய்தலும் உவத்தலும் நீக்கி நிறுத்தலும் பேணிக்கோடலும் அவ்விடத்து வரும் பலவாய் வேறுபட்டு வரு நிலையினும் தலைவி கூற்று நிகழும் [என்றவாறு.]

தோழிக்குரியவை என்றதனால் தோழிக்குக் கூறத்தகாதனவும் உள என்று கொள்க.

உதாரணம்:—

"நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினு முரைய லவர்நமக்
கன்னையு மத்தனு மல்லரோ தோழி
புல்லிய தெவனோ வன்பிலங் கடையே." [குறுந் - கூங]

இது காய்தல் பற்றி வந்தது.

"நாமவர் திருந்தெயி றுண்ணவு மவர்நம
தேந்துமுலை யாகத்துச் சாந்து கண்படுப்பவுங்
கண்டுசுடு பரத்தையின் வந்தோற் கண்டு
மூடுதல் பெருந்திரு வுறுகெனப்
பீடுபெற லருமையின் முயங்கி யேனே."

எனவும்,

"காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல்ல வை." [குறள் - கூஉஅகூ]

[எனவும்] இவை உவத்தல்பற்றி வந்தன.

"அடும்பவி ழணிமலர் சிதைஇ மீனருந்தும்
தடந்தா ணாரை யிருக்கு மெக்கர்த்
த[ண்]ணந் துறைவற் றொடுத்து நன்னலங் கொள்வா
மிடுக்க ணஞ்சி யிரந்தோர் வேண்டக்
கொடுத்தவை தாவெனக் கூறலி
னின்னு தோநம் மன்னுயி ரிழவே."

இது பிரித்தல் பற்றி வந்தது.

"நீரேர் செறுவி னெய்தலொடு நீடிய
நேரித ழாம்ப னிரையிதழ் கொண்மார்
சீரார் சேயிழை யொலிப்ப வோடு
மோரை மகளி ரோதை வெரீஇயெரி
யார லார்கை யஞ்சிறைத் தொழுதி
யுயர்ந்த பொங்க [1]ருயர்மர மேறி
யமர்க்கண் மகளி ரலப்பிய வந்நோய்
தனக்குரைப் பனபோற் பல்குரல் பயிற்று
முயர்ந்த போர்வி னொலிநல் லூரன்
புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலு மஃதியா
னோவென் றோழி நோவாய் நீயென
வெற்பார[ர்]த் துறுவோய் கேளினித் தெற்றென ;

[2]எல்லினை வருதி யெவன்குறித் தனையெனச்
சொல்லா திருப்பே னாயி னொல்லென
விரியுளைக் [3]கலிமான் றேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றும் ;

வாடிய [பூ]வொடு வாரலெம் மனையென
வூடி யிருப்பே னாயி னீடா
த[ச்]சா றகப் புணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னுகுவல்;

பகலாண் டல்கினை பரத்தை யென்றியா
னிகலி யிருப்பே னாயிற் றான்றன்
முதல்வன் பெரும்பெயர் முறையுளி பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயி றஞ்சும் ;
ஆங்க ;
விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கலாந் தொழியுமென் புலவி தாங்கா
தவ்வ விடத்தா னவையவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைக்கு
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவேன் றோழி கடனமக் கெனவே." [கலித் - எரு]

இது பெட்பின்கண் வந்தது.

(பிரதி)—1. ரூர்மாருமறிய. 2. எல்கினை. 3. கலமான்.

"நகையா கின்றே தோழி நெருநன்
மணிகண் ட[ன்ன] துணிகயந் துளங்க
விரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை
யாம்பன் மெல்லடை கிழியாக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்டா தீர்ம்புறத் திறைப்ப
மெல்கிடு கவுள வல்குநிலை புகுதரு
தண்டுறை யூரன் றண்டா ரகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன் றெருவிற்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யழிபட்
டெம்மனை புகு[த]ந் தோனே யதுகண்டு
மெய்ம்மலி யுவகை மறையினெ னெதிர்சென்
றிம்மனை யன்றஃ தும்மனை யென்ற
வென்னுந் தன்னு நோக்கி
மம்மர் நெஞ்சினன் மருண்டுநின் றதுவே." [அகம் - ருசு]

இது மேற்கூறியவாற்று னன்றிப் பிறவாற்றான் வந்தது.

ஒலிபுன லூரனை யொருதலை யாக
வலிநமக் காவது வலியென் றொழியப்
பந்தர் மாட்டிய பரூஉச்சுடர் விளக்கத்துக்
கந்த முனித்தலைத் தும்பி யார்ப்பக்
காலை கொட்டிய கவர்தோற் சிறுபறை
மாலை யாமத்து மதிதர விடாது
பூண்டுகிடந்து வளரும் [1]பூங்கட் புதல்வனைக்
காண்டலுங் காணுன் றன் கடிமனை யானே."

எனவரும்.

வாயிலின் வருஉம் வகையொடு தோகைஇக் கிழவோள் செப்பல் கிழவ தென்ப என்பது—வாயில்கள்மாட்டு வரு[உ]ங் கூற்றுவகை யுளப்படத் தலைவி கூற்று நிகழும் [என்றவாறு.]

வாயில்களாவார்:— பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி, பாணன், விறலி, இளையர், விருந்தினர், கூத்தர், அறிவர், கண்டோர்.

இவருள் தோழி வாயிலாதல் மேற்கூறுதலின் ஒழிந்த வாயில்கள் ஈண்டுக் கொள்ளப்படும்.

"அன்னு யிவனோ [2]ரிளமா ணுக்கன்
றன்னூர் மன்றத் தென்ன கொல்லோ
விரந்து ணிரம்பா மேனியொடு
விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே." [குறுந்-௩௩]

இது பாணன் வாயிலா[க] வந்துழிக் கூறியது.

"நீகண் டனையோ கண்டார்[க்] கேட்டனையோ
வொன்று தெளிய நகையின மொழிமோ
வெண்கோ[ட்] டியானை சோணைப் படியும்

(பிரதி)—1. பூக்கட். 2. யிளமா.

பொன்மலி பாடினீ பொறீஇயர்
யா[ர்]வாய்க் கேட்டனை காதலர் வரவே." [குறுந் - ௭௫]

இது வருகின்றான் என்ற உழையர்க்குக் கூறியது.

"ஆடியன் விழவி னழுங்கன் மூதா
ருடையோர்ப் பன்மையிற் பெருங்கை தூவா
வறனில் [1]புலத்தி யெல்லிற் றோய்த்த
புகாப்புகர்க் கொண்ட பூனாபூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர வோடிப்
பெருங்கயிறு நாலு மிரும்பனம் பிணையற்
பூங்க ணுய முயங்க வூங்கா
ளழுதனள் பெ[ய]ரு மஞ்சி லோதி
யல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
[ஊ]ச லுறுதொழிற் பூச லூட்டா
நயனின் மாக்களொடு கெழீஇப்
பயனின் றம்மவிவ் வேந்துடை யவையே." [நற்றிணை - ௯௰]

இது பாங்கனைக் குறித்துக் கூறியது.

"நெய்யுங் குய்யு மாடி [2]மையொடு
மாசுபட் டன்றே கலிங்கமுந் தோளுந்
திதலை மென்முலை தீம்பால் பிலிற்றப்
புதல்வர்ப் புல்லிப் புனிறு நாறும்மே
வாலிழை மகளிர் சேரத் தோன்றும்
[3]தேரோற் கொத்தனே மல்லே மிதனாற்
பொன்புரை நரம்பி னின்குரற் சீறியா
ழெழாஅல் வல்லை யாயினுந் தொழாஅல்
புரையோ ரன்ன புரையு நட்பி
னிளையோர் கூம்புகை மருள்வோ ராங்குக்
கொண்டுசெல் பாணநின் றண்டுறை யூரனைப்
பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்
புரவியும் [4]பண்ணிலை முனிகுவ
விரகில [5]மொழியல்யாம் வேட்டதில் வழியே." [நற்றிணை - ௩௮௰]

*'வாயிலின் வரூஉம் வகை' என்றமையான், தன் ஆற்றாமையும் வாயில்களாக் கொள்ளப்படும் என்பது பெற்றாம்.

"புல்லேன் மகிழ்ந புலத்தலு மிலனேஎ
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்

---

(பிரதி)—1. புகவிலதநி. 2. மெய்யொடு. 3. தேரோர் கொத்த மெனமல் லேயித னாற். 4. பன்னிலை. 5. மொழியல்வாம்.

* இங்கிருந்து $1\frac{3}{4}$ பக்கம் ஏட்டில் எழுதப்பெறாது விடப்பட்டுளது. 'புணர்ந்துடன் போகிய' என்ற சூத்திரமும், 'தோழியுள்ளுறுத்த' என்ற சூத்திரமும், 'பெறற்கரும்' என்ற சூத்திரமும் அதன் முதலிரண்டு அடிகளின் உரையும் மறைந்து விட்டனபோலும். இப்பகுதிக்கு நச்சினார்க்கினியத்தைத் தழுவி உரையெழுதி (இ. மு. சொ.) சேர்த்திருக்கின்றனர். இங்கே தரப்படுவது அவ்வாறு சேர்க்கப் பெற்றதேயாம். 'குற்றமில்லாத் தலைமகனைச் சுட்டிய தெய்வக் [கடன்] கொடுக்க வேண்டுமென்றலாம்' என்பது தொடங்கி யேட்டுப் பிரதியிற் காணப்படுகின்றது.

படைமாண் பெருங்குள மடைநீர் விட்டெனக்
காலணை தெதிரிய கணைக்கோட்டு வாளை
யள்ளலங் கழனி யுள்வா யோடிப்
பகடுசே றுதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சா லுழவர் கோற்புடை மதரிப்
பைங்காற் செறுவி னணைமுதற் புரளும்
வாணன் சிறுகுடி யன்னவென்
கோனே ரெல்வளை ஞெகிழ்த்த நும்மே.” [நற்றிணை - ௩௪0]

இது ஆற்றாமை வாயிலாகச் சென்றாற்குக் கூறியது.

‘புள்ளிமி ழகல்வயின்’ என்ற மருதக்கலியுள்,

“பூங்கட் புதல்வனைப் பொய் பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் சென்றி யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து.” [கலித் - எகூ]

என்று புதல்வன்வாயிலாகக் கூறியது காண்க. (சு)

௱சுசு. புணர்ந்துடன் போகிய கிழவோண் மனையிருந்
திடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி
யன்புறு தக்க கிளத்த றானே
கிழவோன் செய்வினைக் கச்ச மாகும்.

என்—னின் இதுவும் தலைமகட்குரிய கிளவிக்கட் படும் இலக்கணம் நுதலிற்று.

களவிற்புணர்ந்து உடன்போகிய தலைமகள் கற்புக்கடன் பூண்டொழுகுங் காலத்து மனைக்கணிருந்து, தான் முன்னர் இடைச்சுரத்திற் றலைவனுடன் கண்ட கருப்பொருண் முதலியவற்றையும் அவற்றின் றொழிலையும் குறித்துக் கிழவன் அன்புறுதற்குத் தக்கவற்றைக் கூறுதலே தலைமகன் இயற்றுந் தொழிற்கு அஞ்சும் அச்சமாகும் என்றவாறு.

எனவே புணர்ந்துடன் போகாத தலைவி அங்ஙனமிருந்து கூறல் தலைவற்கு அவன் செய்வினைக்கண் அச்சமாகாதென்றவாறு.

உதாரணம்:—

“கான யானை தோனயந் துண்ட
பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
யலங்க லுலவை யேறி யொய்யெனப்
புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரு
மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்ச்
சேர்ந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்
கொல்லே மென்ற தப்பற்குச்
சொல்லா தகறல் வல்லு வோரே.” [குறுந் - எகூ]

இதனுள் அஞ்சியவாறு காண்க. பிறவும் அன்ன. (எ)

௱௪௭. தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினு
மாவயி னிகழு மென்மனார் புலவர்.

என்—னின் இதுவுமது.

தோழியுள்ளிட்ட வாயில்களைப் போகவிட்ட அக்காலத்தும் முற்கூறிய நிகழு மென்றுரைப்பர் புலவர் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க. (அ)

௱௪௮. பெறற்கரும் பெரும்பொருண் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணு
மற்றமழி வுரைப்பினு மற்ற மில்லாக்
கிழவோற் சுட்டிய தெய்வக் கடத்தினுஞ்
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினு
மடங்கா வொழுக்கத் தவன்வயி னழிந்தோளை
யடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்
வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும்
புறம்படு விளையாட்டுப் புல்லிய புகர்ச்சியுஞ்
சிறந்த புதல்வனைத் தேராது புலம்பினு
மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்
பேணா வொழுக்க நாணிய பொருளினுஞ்
சூள்வயிற் றிறத்தாற் சோர்வுகண் டழியினும்
பெரியோ ரொழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை யில்லாப் பிழைப்பினு மவ்வழி
யுறுதகை யில்லாப் புலவியின் மூழ்கிய
கிழவோள் பானின்று கெடுத்தற் கண்ணு
முணர்ப்புவயின் வாரா வூடலுற் றோள்வயி
னுணர்த்தல் வேண்டிய கிழவோன் பானின்று
தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணு
மருமைக் காலத்துப் பெருமை காட்டிய
வெளிமைக் காலத் திரக்கத் தானும்
பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை யெதிரு
நீத்த கிழவனை நிகழுமா றுபடீஇயர்
காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்
பிரியுங் காலத் தெதிர்நின்று சாற்றிய
மரபுடை யெதிரு முளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாந்
தோழிக் குரிய வென்மனார் புலவர்.

என்—னின் கற்பின்கண் தோழிகூற்று நிகழும் இடம் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

பெறற்கரும் சிறப்பு முதலாக மரபுடை யெதிரும் உளப்படப்பிறவும் ஈரு௧ மொழியப்பட்டவை யாவும் தோழிக்குரிய வென்று கூறுவர் புலவர் என்றவாறு.

பெறற்கரும் பெரும்பொருண் முடிந்தபின் வந்த தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும் என்பது—பெறுதற்கு அரிய பெரும்பொருளை முடித்த பின்னர்த் தோன்றிய தெறுதற்கரிய மரபு காரணத்தாற் றலைவன் சிறப்பித்துக் கூறுமிடத்தும் தோழிகூற்று நிகழும் என்றவாறு.

பெரும்பொருள் ஈண்டு வரைவிற் கேற்றது. தெறுதல்—சுழல நோக்குதல்.

உதாரணம்:—

"அயிரை பரந்த வந்தண் பழனத்
தேந்தெழின் மலர்ந்த தாம்புடைத் திரள்கா
லாம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவ
ளிடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்
கரிய மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே." [குறுந் - ௱௭௮]

எனவரும்.

அற்றமழிவு உரைப்பினும் என்பது—முற்காலத்துற்ற வருத்தத்தின் நீங்கினமை கூறினும் என்றவாறு.

உதாரணம்:—

"எரிமருள் வேங்கை யிருந்த தோகை
யிழையணி மடந்தையிற் றோன்று நாட
வினிதுசெய் தனையா லுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே." [ஐங்குறு - உ௬௪]

எனவரும்.

அற்றம் இல்லாக் கிழவோற் சுட்டிய தெய்வக்கடத்தினும் என்பது—*குற்றமில்லாத தலைமகனைச் சுட்டிய தெய்வக்[கடன்] [1]கொடுத்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—

"நெஞ்சமொடு [2]மொழிகடத் தஞ்சுவர நோக்குந்
தாயவட் டெறுதர[க் க]ாக்கவெம் மகனெ[னச்]
சிறந்த தெய்வத்து மறையுறை குன்ற
மறைந்துநின் றிறைஞ்சினம் பலவே
பெற்றனம் யாமே மற்றதன் பயனே."

"வாழி யாதன் வாழி யவினியே
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
வெனவேட் டோளே யாயே யாமே

---

* 248-ம் பக்கத்தில் உடுக்குறியிட்ட இடத்தினின்று இதுவரை (இ. மு. சொ.) தாமே எழுதிச் சேர்த்தது.

(பிரதி)—1. கொடுக்கவேண்டு மென்றலாம். 2. மொழிகொடுத்.

மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
வெந்தையுங் கொடுக்க வெனவேட்[டே]டமே." [ஐங்குறு - ௬]

"திண்டேர் நள்ளி கானத் த[ண்]டர்
பல்லா பயந்த நெய்யிற் [1]றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்சூழ்ந்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே." [குறுந் - உ௱௰]

எனவரும்.

சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும்—என்பது சீருடைய பெரும்பொருளாவது இற்கிழமை: அதனைத் தலைமகண்மாட்டு வைத்தவிடத்து அவனை மறந்து ஒழுகினவழியும் என்றவாறு.

அஃதாவது அறத்தினானாதல் பொருளினானாதல் அவனுக்காகிய விசையுங் கூத்தும் முதலியவற்றான் அத்திறம் மறத்தல். அவ்வழியுந் தோழிகூற்று நிகழும்.

உதாரணம்:—

"பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கா னுவற் [2]பொதிப்புற விருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்டகோட் [க]சாந்து
கொள்ளா நரம்பி னிமிரும் பூச
லிரைதேர் நாரை யெய்தி [3]விடுக்குந்
துறைகெழு மாந்தை யன்ன விவணலம்
பண்டு மிற்றே கண்டிசிற் றெய்ய
வுழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய
நெகிழ்ந்த விவணலங் கொல்[லே]லா மகிழ்ந்தோர்
கட்களி செருக்கத் தன்ன
காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே." [நற்றிணை - ௩௫]

எனவரும்.

அடங்கா வொழுக்கத் தவன்வயி னழிந்தோளை யடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும் என்பது—அடங்கா வொழுக்கத்தை யுடைய தலைவன்மாட்டு மனன் அழிந்தோளை யடங்கக் காட்டுதற்கு ஏதுவான பொருட் பக்கத்தினும் [கூற்று நிகழும்] என்றவாறு.

உதாரணம்:—

"இதுமற் றெவனோ தோழி துனியிடை
யின்ன ரென்னு மின்னாக் கிளவி
[4]யிருமருப் பெருமை யீன்றணிக் காரா
னுழவன் யாத்த குழவியி னகலாது
பாற்செய் பைம்பயி ராரு மூரன்

(பிரதி)—1. றொன்றி. 2. பொதியபு. 3. யிடுக்குந். 4. யிருமைப்.

திருமனைப் பல்கடம் பூண்ட
பெருமுது பெண்டிரே மாகிய நமக்கே." [குறுந் - ௱௮௧]

எனவரும்.

பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும் என்பது—பிழைத்து வந்திருந்த தலைமகனை நெருங்கித் தலையளிக்குமாறு கூறித் தலைமகன்மாட்டாக்கிக் கொடுத்தற்கண்ணுங் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"[1]பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயி
னாம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
விவணலம் புலம்பப் பிரிய
லாவகல முடையளோ மகிழ்நநின் பெண்டே." [ஐங்குறு - ௫௭]

"கேட்டிசின் வாழியோ மகிழ்ந [2]வாறுற்ற
மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
யிவட்குமருந் த[ன்]மை நோமே நெஞ்சே." [ஐங்குறு - ௫௯]

எனவரும்.

வணங்கிய மொழியான் வணங்கற் கண்ணும் என்பது—தாழ்ந்த வியல்பினை யுடைய மொழியினுன் வணங்குதற்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"உண்டுறைப் பொய்கை வரா[அ] லினமிரியுந்
தண்டுறை யூர தகுவதோ— ஒண்டொடியைப்
பாராய் மனைதுறந் தச்சேரிச் செல்வதனை
யூராண்மை யாக்கிக் கொளல்." [ஐந்திணையெழு - ௫௪]

எனவரும்.

புறம்படுவிளையாட்டுப் புல்லிய [3]புகர்ச்சியும் என்பது—புறப்பட்ட விளையாட்டினைத் தலைவன் பொருந்திய புகர்ச்சிக்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

புகர்ச்சி—குற்றம்.

உதாரணம்:—

"காலை யெழுந்து கடுந்தேர்ப் பண்ணி
வாலிழை மகளிர் மரீஇய சென்ற
மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவர் தாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே." [குறுந் - ௪௫]

எனவரும்.

சிறந்த புதல்வனைத் தேராது புலம்பினும் என்பது—இருவர்க்குஞ் சிறந்த புதல்வனை நினையாமையால் தலைமகன் தனிமையுறுதற் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

(பிரதி)—1. அகற லின்றும் பரிகதிர்த். 2. தவாறுற் - றமையெ. 3. புகற்சியும்.

உதாரணம்:—

“நெடுநா வொண்மணி கடிமனை யிரட்டக்
குரையிலை போகிய விரவுமணற் பந்தர்
பெரும்பாண் காவல் பூண்டென வொருசார்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
வெறியுற விரிந்த வறுவை மெல்லணைப்
புனிறுநாறு செவிலியொடு புதல்வன் றுஞ்ச
வையவி யணிந்த நெய்யா டீரணிப்
பசிநோய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை [1]யீரிமை பொருந்த
நள்ளென் கங்குற் கள்வன் போல
வகன்றுறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே.” [நற்றிணை - சு௰]

எனவும்,

“நுண்ஞாண் வலையிற் பரதவர் போ[த்]தந்த
பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக்
கண்ணினாற் காண வியையுங்கொ லென்றோழி
வண்ணந்தா வென்கந் தொடுத்து.” [ஐந்திணையெழு - சுசு]

எனவும் வரும்.

மாணலந் தாவென வகுத்தற் கண்ணும் என்பது—நீ கொண்ட நலத்தினைத் தந்து போ எனக் கூறுதற்கண்ணும் [கூற்று நிகழும்] என்றவாறு.

“[2]விட்டென விடுக்குநா[ள்] வருக வதுநீ
நொந்தனை யாயிற் றந்தனை சென்மோ
குன்றத் தன்ன குவவுமண லடைகரை
நின்ற புன்னை நிலந்தோய் படுசினை
வம்ப நாரை சேக்குந்
தண்கடற் சேர்ப்பநீ யுண்டவென் னலனே.” [குறுந் - உ௱௩௬]

எனவரும்.

பேணா வொழுக்கம் நாணிய பொருளினும் என்பது—தலைமகனைப் பேணாத ஒழுக்கத்தினாற் றலைமகள் நாணிய பொருண்மைக்கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

“யாயா கியளே மாஅ யோளே
மடைமாண் செப்பிற் றமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கா னெய்த
லினமீ னிருங்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின மானுந்
தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு னாணிக் கரப்பா டும்மே.” [குறுந் - ௯]

எனவரும்.

(பிரதி)—1. யுரிமை. 2. வீட்டெனெ விடுக்குந வருவதுநீ.

சூள்வயிற் றிறத்தாற் சோர்வுகண் டழியினும் என்பது—தலைமகன் சூளுற்ற சூளுறவிற் சோர்வுகண்டு அழிந்து கூறினும் [கூற்று நிகழும்] என்றவாறு.

உதாரணம்:—

"எம்மணங் கினவே மகிழ்ந முன்றி
னனைமுது புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ்
செந்நெல் வான்பொரிச் சிதறி யன்ன
வெக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை
நேரிழை முன்கை பற்றிச்
சூரர மகளிரோ டுற்ற சூளே." [குறுந் - ௫௩]

எனவரும்.

பேரியோரொழுக்கம் பெரிதெனக் கிளந்து பெறுதகை யில்லாப் பிழைப்பி னும் என்பது—பெரியோ ரொழுக்கம் பெரிதாகுமெனச் சொல்லித் தலைமகளைப் பெறுந் தகைமை யில்லாத பிழைப்பின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"வெள்ளி விழுத்தொடி மென்கரும் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க
மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழற் றமர்வளம் பாடி
யூர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வார லருந்திய சிறுசிரன் மருதின்
றாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழைய மாயினுங்
கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வழா[அ]மை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடித்த
லனைய பெரியோ ரொழுக்க மதனா
லரிய பெரியோர்[த்] தெரியுங் காலை
நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோ வுலகத் தானே." [அகம் - ௨௮௬]

எனவரும்,

அவ்வழி யுறுதகை யில்லாப் புலவியின் மூழ்கிய கிழவோள் பானின்று கெடுத் தற் கண்ணும் என்பது—மேற் சொல்லியவாற்றாற் றலைவன் பிழைத்தவழி அவனு லுறுந் தகைமையில்லாத புலவியின் மூழ்கிய தலைவி பக்கத்தாளாகி நின்று அதனைக் கெடுத்தற் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"மானோக்கி நீயழ நீத்தவன் ன[ன]து
நாணில னாயி னலி[தந் த]வன்வயி

னூடவ தென்னோ வினி.” [கலித் - அஎ]

எனவரும்,

1உணர்ப்புவயின் வாரா வூடலுற் றோள்வயி னுணர்த்தல் வேண்டிய கிழவோன் பானின்று தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணும் என்பது—தலைவன் ஊடல்தீர்க்கவு மதன்வழி வாராத ஊடலுற்றோள்வயின் அவ்வூடலைத் தீர்த்தல் வேண்டிய தலைவன் பக்கத்தாளாகி நின்று தலைவனை வெகுண்டுநின் றுண்டாக்கிய தகுதிக்கண்ணும் கூற்று நிகழும்[என்றவாறு.]

“உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.” [குறள் - ௧௩௦௨]

எனவரும்.

அருமைக் காலத்துப் பெருமை காட்டிய வெளிமைக் காலத் திரக்கத் தானும் என்பது—தாமரியராகிய களவுகாலத்துத் தமது பெருமையைக் காட்டிய தாம் எளியராகிய கற்புக்காலத்து இதிரக்கத்தின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

பெருமைகாட்டிய விரக்கம் எனக் கூட்டுக. இதனாற் சொல்லியது வாளாதே இரங்குதலன்றிப் பண்டு இவ்வாறு செய்தனை இப்பொழு திவ்வாறு செய்யாநின்றனை [என]த் தமதுயர்ச்சியுந் தலைமகனது நிலையின்மையுந் தோற்ற இரங்குத லாயிற்று. இதுவும் புலவிமாத்திர மன்றித் தலைவ னீங்கியொழுகும் ஒழுக்கம் மிக்கவழிக் கூறுவ தெனக் கொள்க.

உதாரணம்:—

“வேம்பின் பைங்காயென் றோழி தரினே
தேம்பூங் கட்டி யென்றனி ரினியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கட் டண்ணிய தரினும்
வெய்ய வுவர்க்கு மென்றீ
ரைய வற்றா லன்பின் பாலே.” [குறுந் - ௱௧௬]

எனவரும்,

பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர் பேணிச் சொல்லிய குறைவினை யெதி ரும் என்பது—பாணராயினுங் கூத்தராயினும் விறலியராயினும் இத்தன்மையர் விரும்பிச் சொல்லிய குறையுறும்வினைக் கெதிராகவுங் கூற்று நிகழும் [என்றவாறு.]

குறையுறும் வினை குறைவினை யென ஒட்டிற்று; அது சொல்லிய என்னும் பெய ரெச்சத்திற்கு முடிபாயிற்று.

உதாரணம்:—

“புலைமக னாதலிற் பொய்ந்நின் வாய்மொழி
நில்லல் பாண செல்லினிப் பரியல்
பகலெஞ் சேரிக் காணி
னகல்வய லூர னாணவும் பெறுமே.”

எனவும்,

(பிரதி)—1. உணராப் புலவியா லூடலுற்.

"அணிநிறக் கெண்டை யாடிடம் பார்த்து
மணிநிறச் சிறுசிரன் மயங்குநம் பொய்கை
விரைமல காற்று விருந்தினம் யாமென
முழவிமிழ் முன்றின் முகம்புணர் சேர்த்தி
யெண்ணிக் கூறிய வியல்பினின் வழா[அ]து
பண்ணுக்கொளப் புகுவ கணித்தோ பாண
செவிநிறை யுவகையே மாக
விதுநா ணன்மைக் குரைத்துச்சென் றீமே."

என[வும்] வரும்.

**நீத்த கிழவனை நிகழுமாறு படீஇயர் காத்ததன் வயிற்கண் நின்று பெயர்ப் பினும்** என்பது—தலைவியை நீத்த கிழவனை அவளுடன் நிகழுமாறு படுத்தல் வேண்டி அவனைப் புறங்காத்த [தன்]னிடத்துற்ற தலைமகனைக் கண்ணோட்ட மின்றிப் பெயர்த் தற் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"மனையுறு கோழிக் குறங்காற் பேடை
[வேலி] வெருகின் மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇப்
[1]பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்
கின்னா திசைக்கு[ம]ம்பலொடு
வாரல் வாழிய ரையவெந் தெருவே." [குறுந் - ௱௩௯]

எனவரும்.

**பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப்பட** என்பது—தலைவன் சேயிடைப் பிரியுங் காலத்து முன்னின்று சொல்லிய மரபுடை மாறுபாடும் என்றவாறு. எனவே அகத்திணை யியலுட் கூறப்பட்டது களவுகாலத்தை நோக்கிக் கூறு தலான் அயலிதாகக் கூறப்பெறும் என்பதூஉம், இவ்வோத்தினுட் செல வழுங்குவித்தல் பார்ப்பார்க் குரித்தாகக் கூறுதலானுங் கற்பினுட் பிரிவு மரபு கெடாமற் கூறவேண்டும் [2]என்பதூஉங் கருத்து. மரபினாற் கூறுதலாவது குற்றேவன் முறைமையாற் கூறுதல். பிரிவை அகத்திணையியலுள் வைத்ததனான், ஆண்டுக் கூறிய கிளவி இருவகைக் கை கோளிற்கும் பெரும்பான்மை யொக்கும் எனக் கொள்க. உடன்போக்கும் ஒக்குமோ எனின், கற்பினுள் உடன்போக்கு உலகியலுட் பெரும்பான்மை யென்று கொள்க. இக் கூற்றுத் தலைமகன்மாட்டுந் தலைமகள்மாட்டு[மா]ம்.

உதாரணம்:—

"அறனின்றி யயறூற்று மம்பலை நாணியும்
வறனீந்தி நீசெல்லும் நீளிடை நினைப்பவு
மிறைநில்லா வளையோட விதழ்சேர்பு பனிமல்கப்
பொறைநில்லா நோயொடு புல்லென்ற நுதலிவள்
விறனலம் விளர்ப்பவும் வினைவேட்டாய் கேளினி;

(பிரதி)—1. பைததறகிப் பிள்ளைகிளை கின்னுப் பயிர்ந்தாங். 2. என்பது.

உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல
விடைகொண்டியா மிரப்பவு மெங்கொள்ளா யாயினை
கடைஇய வாற்றிடை [1]நீர்நீத்த வறுஞ்சுனை
யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன ;

வல்லையிற் றுறப்பாயேல் வகைவாடு மிவளென
வொல்கியா முரைப்பவு முணர்ந்தீயா யாயினை
செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த [2]மரம்வாடப்
புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன ;

பிணிபு நீ விடல்சூழிற் பிறழுகு மிவளெனப்
பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை
துணிபு நீ செலக்கண்ட வாற்றிடை [3]யம்மரத்
தணிசெல வாடிய வந்தளிர் தகைப்பன

எனவாங்கு ;

யாநிற் கூறவு மெங்கொள்ளா யாயினை
யானு திவள்போ லருள்வந் தவைகாட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போ னீசெல்லுங்
கானந் தகைப்ப செலவு." [கலித் - ௩]

எனவரும்.

இனித் தலைமகட்குக் கூறியதற்குச் செய்யுள்:—

"அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிறிதாற்றிப்
பின்னெழிந்து வாழ்வார் பலர்." [குறள் - ௲௱௬]

எனவரும்.

பிறவும் வகைபட வந்த கிளவி யெல்லாந் தோழிக்குரிய வென்மனார் புலவர் என்பது—மேற்சொல்லப்பட்ட கிளவியன்றிப் பிற வாய்பட்டாற் பாகுபடவந்த கிளவி யெல்லாந் தோழிக்குரிய [என்றுரைப்பர் புலவர்] என்றவாறு.

வகைபடவந்த கிளவியாவன:—பிரிந்த தலைமகன் வருவனெனக் கூறுதலும், பருவங்கண்டு கூறுதலும், வற்புறுத்தலும், நிமித்தங் கண்டு கூறுதலும், வந்தானெனக் கூறுதலும் இந்நிகரனவும் மேற்சொல்லப்பட்ட விடங்களிற் கூற்று வேறுபாடாகி வருவனவுங் கொள்க. அவற்றிற் களவுக்குங் கற்பிற்கும் பொதுவாகி வருவன அகத்திணை யியலுட் கொள்க. கற்பிற்கே உரித்தாகி வருவன ஈண்டுக் கொள்க.

உதாரணம்:—

"ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை
யேமாண் சிலையார்க் கினமா விரிந்தோடுந்
தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கண்டு
வாய்மாண்ட பல்லி படும்." [கைந்நிலை - ௰அ]

இது நிமித்தங் கண்டு கூறியது.

(பிரதி)—1. நீநீர்த்த. 2. வாய்வாடப். 3. யம்பரத்.

"[1]வாளிலங் குண்கண் வையெயிற் றோயே
ஞாலங் காவலர் வந்தனர்
காலை யன்ன மாலையுந் துறுத்தே."

இது தலைவன் வந்தமை கூறியது. பிறவும் அன்ன. (௬)

௱௪௬. புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணு
மில்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி யுவப்பினு
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணுங்
காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற்
றாய்போற் கழறித் தழீஇய மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணு
மின்னகைப் புதல்வனைத் தழீஇ யிழையணிந்து
பின்னை வந்த வாயிற் கண்ணும்
மனையோ ளொத்தலிற் றன்னோ ரன்னோர்
மிகையெனக் குறித்த கொள்கைக் கண்ணு
மெண்ணிய பண்ணையென் றிவற்றொடு பிறவுங்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன.

என்—னின், காமக்கிழத்தியர் கூற்று நிகழும் இடம் உணர்த்திற்று.

புல்லுதன் மயக்கும் புலவி முதலாகச் சொல்லப்பட்ட விடத்தினும் அந்நிகரன பிறவிடத்தினும் குறிக்கப்பட்ட கூற்றுக் காமக்கிழத்தியர் மேலன என்றவாறு.

கூற்றென்பது அதிகாரத்தான் வந்தது.

காமக்கிழத்தியராவார் பின்முறை யாக்கிய கிழத்தியர். அவர் மூவகைப்படுவர்; ஒத்த கிழத்தியரும் இழிந்த கிழத்தியரும் வரையப்பட்டாரும் என. ஒத்த கிழத்தி[யர்]— முந்துற்ற மனையா ளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல். இழிந்தா ராவார்—அந்தணர்க்கு அரசகுலத்தினும் வணிககுலத்தினும் வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனை யிரண்டுகுலத்தினுங் கொடுக்கப்பட்டாரும், வணிகர்க்கு வேளாண் குலத்திற் கொடுக்கப் பட்டாரும். வரையப்பட்டார்— செல்வராயினோர் கணிகைக் குலத்தி னுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரைந்து கோடல். அவர், கன்னியில் வரையப்பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இருவகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக்கிழத்தியர்பாற் பட்டனர். பரத்தைய ராவார் யாரெனின், அவர் ஆடலும் பாடலும் வல்லராகி அழகு மிளமையுங் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர்மாட்டுந் தங்காதார். இவருள்ளும் 'ஒருவரைப் பற்றி மறுதலைப் பெண்டிரைச் சார்த்துக் கூறுவனவும் காமக்கிழத்தியர் கூற்றின் பாற் படும். இவற்றின் வேறுபாடு அவரவர் கூற்றானறிக. இச்சூத்திரத்திற் காமக்கிழத்தியென ஓதாது 'கிழத்தியர்' என ஓதுதலானும் பல வகையார் என்பது கொள்க.

புல்லுதன் மயக்கும் புலவிக்கண்ணும் என்பது—புல்லுதலைக் கலக்கும் புலவி மாட்டுங் காமக்கிழத்தியர்கூற்று நிகழும் என்றவாறு.

---

(பிரதி)—1. வானிலங்.

அஃதாவது முதிராத புலவிமாத்திர மாகிய புணர்ச்சியை யுடன்பட்ட நெஞ்சத்த ளாதல்.

உதாரணம்:—

பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு
1மதிமொழி யிடன்மாலை வினைவர்போல் வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராற் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர ;

ஊரன்மன் னுரனல்ல னெமக்கென வுடன்வரா
தோரூர்தொக் கிருந்த[நின்] பெண்டிரு 2ணாராகிக்
களையாநின் குறிவந்தெந் கதவஞ்சேர்ந் தசைத்தகை
வளையினவாய் விடன்மாலை மகளிரை நோவேமோ ;
கேளல்ல னமக்கவன் குறுகன்[மி னெனா]மற்றெந்
தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம் ;

ஊடியார் நலந்தேம்ப வொடியெறிந் தவர்வயின்
மாறீர்க்கு மவன்மார்பென் றெழுந்தசொன் னோவேமோ
முகைவாய முலைபாயக் குழைந்துநின் றாரெள்ள
வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம் ;

சேரியாற் சென்றுநீ சேர்ந்தவில் 3வினாயினன்
றேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ
வலிகொண்ட சும்மையான் மணமனை குறித்தெம்மிற்
பொலிகெனப் புகுந்தநின் புலையனைக் கண்டியாம் ;
ஆங்க,
நனவினான் வேறாகும் 4வேளா முயக்க
மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள் வாட
வினைய ரெனவுணர்ந்தா ரென்றேக்கற் றாங்குக்
கனவினா னெய்திய செல்வத் தனையதே. ஐய
வெய்ய வெமக்குநின் மார்பு." [கலித் - கூஅ]

இது மூவகையார்க்கும் பொது.

இல்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும் என்பது—மனையகத்தோர் செய்த வினையை யிகழ்ந்து கூறுதற்கண்ணும் என்றவாறு.

பன்மையால் தலைமகனை யிகழ்தலுந் தலைமகளை யிகழ்தலுங் கொள்க.

உதாரணம்:—

"கழனி மா[அ]த்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரா
னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூங்கு

(பிரதி)—1. மதுமொழி. 2. டாராகிக். 3. வினையிநின். 4. வேளாண்.

மாடியிற் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் ருய்க்கே. [குறுந் - அ]

என்றும்,

“நன்மரங் குழீஇய நனைமுதிர் [1]சாடிப்
பன்னா ளரித்த [2]கோதுடை வைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்பன் னெல்லின் வேளூர் வாயி
னறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்
பொறிவரி யினவண் டூதல் கழியு
முயர்பலி பெறூஉ முருகெழு தெய்வம்
புனையிருங் கதுப்பி [3]னீகடுத் தோள்வயி
னனையே னாயி னணங்குக வென்மென
மனையோட் டேற்று மகிழ்ந னாயின்
யார்கொல் வாழி தோழி நெருநைத்
தார்பூண் களிற்றிற் றலைப்புணை [4]தழீஇ
வதுவை யீரணிப் பொலிந்து நம்மொடு
புதுவது வந்த காவிரிக்
கோடுதோய் [5]மலிர்நிறை யாடி யோரே.” [அகம் - ஶசுசு]

என்றும் வரும். இவை தலைவனை இகழ்ந்தன.

“அளியர் தாமே மகிணன் பெண்டிர்
தாமவற் பிணித்த றேற்ருர் நாமழச்
செய்தா ரகலம் வவ்வின ரிவரென
வெம்பழி யறையுநர் போலத்
தம்பழி தூற்றும் பெரும்பே தையரே.”

“எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரிமுகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை [6]யுணீ[இ]ய பைப்பயப்
பறைதபு முதுசிர லசைபுவந் திருக்குந்
துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை
நம்மொடு புலக்கு மென்ப வதுநாஞ்
செய்யா மாயி னுய்வா மரபிற்
செறிதொடி தெளிர்ப்ப வீசிச் [7]சிறிதவ
ணுலம்வந்து வருகஞ் சென்மோ தோழி
[யொளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்]
[8]வெளிறில் கற்பின் மண்டமர் தோறுங்
களிறுபெறு வல்சிப் பாண னெறியுந்
தண்ணுமைக் கண்ணி னலைஇயர் தன் வயிறே.” [அகம் - ஶசு]

இவை பரத்தை கூற்று.

---

(பிரதி)—1. சாமப். 2. கோஒஉடைப்பின். 3. னீதடுத். 4. கழீஇ. 5. மலர்நிறை. 6. யுணீயெனப்பயப். 7. சிதறிவன். 8. வெளிவல்.

பல்வேறு புதல்வர்க் கண்டுநனி யுவப்பினும் என்பது—பலவகைப் புதல்வரைக் கண்டு மிகவும் உவந்து கூறியவழியு மென்றவாறு.

உதாரணம்:—

"நயந்தலை மாறுவார் மாறுக மாறாக்
கயந்தலை மின்னுங் கதிர்விடு முக்காழ்ப்
பயந்தவெங் கண்ணார யாங்காண நல்கித்
திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇப்
பவளம் புனைந்த பருதி சுமப்பக்
கவள மறியாநின் கைபுனை வேழம்
புரிபுனை [1]பூங்கயிற்றிற் பைபய வாங்கி
யரிபுனை புட்டிலி [2]னாங்கணீர்த் தீங்கே
வருகவெம் பாக மகன்;

ஐய, கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச்சாஅய்ச் செல்லுந்
தளர்நடை காண்ட லினிதுமற் றின்னாதே
யுளமென்னா நுந்தைமாட் டெவ்வ முழப்பார்
வளைநெகிழ்ப் பியாங்காணுங் கால்;

ஐய, காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்
றேமொழி கேட்ட லினிதுமற் றின்னாதே
எய்யின்றி நுந்தை நலனுணச் சாஅய்ச்சாஅய்மா
ரெவ்வநோ யாங்காணுங் கால்;

ஐய, திங்கட் குழவி வருகென யானின்னை
யம்புலி காட்ட லினிதுமற் றின்னாதே
நல்காது நுந்தை புறமாறப் பட்டவ
ரல்குவரி யாங்காணுங் கால்;

ஐய, காதிற் கணங்குழை வாங்கிப் பெயர்தொறும்
[பே]ாதில் வறுங்கூந்தற் கொள்வதை நின்னையா
னேதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பிற்
றாதுதேர் வண்டின் கிளைபாடத் தைஇய
கோதை பரிபாடக் காண்கு." [கலித் - அ௰]

எனவரும்.

மறையின் வந்த மனையோள் செய்வினை பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும் என்பது—களவின் வருகின்ற மனையோள் செய்வினை பொறையின்றிப் பெருகிய துன்பத்தின் கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—

"வாளை வாளிற் பிற[ழ] [3]நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயி லேற்குங்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த

(பிரதி)—1. பூங்கையிற் புடையடைய. 2. னுங்கணிர். 3. நாரும்.

வயல்வெள் ளாம்ப லுருவ நெறித்தழை
யைதக லல்கு லணிபெறத் தைஇய
விழவிற் செலீ[இ]யர் வேண்டு மன்னோ
யாண ரூரன் காணுந னாயின்
வரையா மையோ வரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையு நற்றோ
ளளிய தோழி தொலையுந பலவே." [நற்றிணை - ௩௱௬௰]

இது பரத்தையராகி வந்த காமக்கிழத்தியர் கூற்று.

காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற் றாய்போற் கழறித் தழீஇய மனை வியைக் காய்வின் றவன்வயிற்பொருத்தற் கண்ணும் என்பது—காதற் சோர்வினும் ஒப்புர வுடைமையானுந் தாய்போற் கழறிப் பொருந்தப்பட்ட மனைவியைக் காய்தலின் றித் தலைமகன்மாட்டுப் பொருத்தற் கண்ணுங் கூற்று நிகழும் [என்றவாறு.]

இதுவும் அவள் கூற்று. காதற் சோர்வு என்பது தன்மாட்டுக் காதல் சோர்தல். இது தலைமகன்மாட்டுத் [1]துனியுளவழி நிகழும் நிகழ்ச்சி.

உதாரணம்:—

"வயல்வெள் ளாம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
லோய்நடை முதுபக டாரு மூரன்
றொடர்புநீ வெஃகினை யாயி னென்சொற்
கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே
[நீயே] பெருநலத் தகையே யவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்
தண்கமழ் புதுமலர் கதூஉம்
வண்டென மொழிப மகனென் னாரே." [நற்றிணை - உ௱௯௰]

இது காமக்கிழத்தி யாகிய தலைமகட்கு முன் வரையப்பட்ட பரத்தை கூற்று.

இன்னகைப் புதல்வனைத் தழீஇ யிழையணிந்து பின்னைவந்த வாயிற் கண்ணும் என்பது—இனிய நகையையுடைய புதல்வனைத் தழீஇ இழையணிந்து பின்னை வந்த வாயிலின் கண்ணும் என்றவாறு. பின்னை என்றதனால் ஏனைய வாயில்களை மறுத்த வழி யென்று கொள்க.

"புள்ளிமி ழகல்வய லொலிசெந்நெ லிடைப்பூத்த
முள்ளரைத் தாமரை முழுமுதல் [2]சாய்த்ததன்
வள்ளிதழ் உறநீடி வயங்கிய வொருகதி
ரவைபுகு பூரங்கின்மே லாடுவா ளணிநுதல்
வகைபெறச் செரீஇய வயந்தகமே போற்றோன்றுந்
தகைபெறு கழனியந் தண்டுறை யூரகேள் ;
அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி
மணிபுரை செவ்வாய்நின் மார்பகல நனைப்பதாற்

(பிரதி)—1. துணியளவழி. 2. காய்த்தன.

ஞேய்ந்தாரை யறிகுவல் யானெனக் கமழுநின்
சாந்தினாற் குறிகொண்டாள் சாய்குவ ளல்லளோ ;

புல்லலெம் புதல்வனை புகலநீ நின்மார்பிற்
பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானன்
மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பிற்
பூணினாற் குறிகொண்டாள் புலக்குவ ளல்லளோ ;

கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவானு
னண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழுநின்
கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ ;

எனவாங்கு,

பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
யாங்கே யவர்வயிற் சென்றீ யணிசிதைப்பா
னீங்கெம் புதல்வனைத் தந்து." [கலித் - எக]

என வரும்.

மனையோள் ஒத்தலிற் றன்னோரன்னோர் மிகையெனக் குறித்த கோள்கைக் கண்ணும் என்பது—தான் மனையாளை ஒத்தலாற் றன் போல்வார் தலைவற்கு மிகையெனக் குறித்த கோளின் கண்ணும் கூற்று நிகழும் [என்றவாறு.]

உதாரணம்:—

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற [1]விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் [2]கெண்டை கதூஉந்
தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தேர் ரஞ்சிக்
கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே." [குறுந் - கூக]

என வரும்.

எண்ணிய பண்ணையென் றிவற்றொடு என்பது—எண்ணப்பட்ட விளையாட்டு என்று சொல்லப்பட்ட இவற்றொடென்றவாறு.

விளையாட்டாவது ஆறுங் குளனுங் காவும் ஆடுதல்.

உதாரணம்:—

"கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த [3]விருந்துறை விரும்பி
ய[ா]மஃ தையர்கன் சேறுந் தானஃ
தஞ்சுவ துடைய ளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி

(பிரதி)—1. விளைக்கனி. 2. கெண்டை. 3. விருந்திறை.

முனையான் பெருநிரை போலக்
கிளையொடு நுகர்[க]த[ன்] கொழுநன் மார்பே." [குறுந் -அ௰]

பிறவும் என்றதனால் தலைமகட் குரித்தாகச் சொல்லப்பட்டவற்றுள் ஒப்பன கொள்ளப்படும். அவற்றுட் சில வருமாறு:—

"ஞாலம் வறந்தீர" என்னும் மருதக்கலியுள்,

"அடக்கமில் போழ்தின்கட் டந்தைகா முற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்கான்"

எனவும்,

"வழிமுறைத் தாயுழைப் புக்கான்"

எனவும்,

"தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றிஃதோர்
புலத்தகைப் புத்தேளிற் புக்கான்" [கலித் - அஉ]

எனவும்,

கூறுதலிற் புதல்வனை யீன்றாள் மூன்றுங் காமக்கிழத்தி யாயினவாறும் இவன் மாட்டுத் தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை யுள்ளிக் கூற்று நிகழ்ந்தவாறுங் கண்டுகொள்க. பிறவு மன்ன. தோழிகூற்றும் இவட்கும் ஒக்கும். (௰)

௱௬௰. கற்புங் காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியற் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவு மன்ன [1]கிழவோண் மாண்புகண்
முகம்புக[ன்] முறைமையிற் கிழவோற் குரைத்த
லகம்புகன் மரபின் வாயில்கட் குரிய.

என்-னின், [அகம் புகன் மரபினவாய வாயில்கள் கூ]ற்று நிகழுமாறு உணர்த்திற்று.

கற்பு முதலாகச் சொல்லப்பட்டனவும் பிறவுமாகிக் கிழவோள்மாட்டுளதாகிய தன்மைகளை முகம்புகு தன்மையானே தலைமகற்கு உரை[த்தல் அகம்புகு மர]பின் வாயில்கட் குரிய என்றவாறு.

செய்யுளியலுள் "வாயி லுசாவே தம்மு ளுரிய" [சூ-௱கக] என்பதனால், தலைமகற் குரைத்தலே யன்றித் தம்முள் தாம் கூறுதலு முரிய ரென்று கொள்க.

"[மதவலி யானை மற]லிய பாசறை
இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப
வென்றுகொடி யெடுத்தனன் வேந்தனுங் கன்றொடு
கறவைப் பல்லின[ம்] புறவுதொறுத் துகளாக்
குழல்வாய் வைத்தனர் கோவலர் வல்விரைந்
[2]திளைய ரேகுநர் பரப்ப விரியுளைக்
கடுநடைப் புரவி வளியா யோட
வலவன் வள்புவலி யுறுப்ப வுலவிய
சுரும்பு கடிகொண்ட பொலந்தா ரகலத்துத்

(பிரதி)—1. கிழவோன். 2. திளையா.

தண்கமழ் சாந்த நுண்டுகே ளி[ரி]ய
வென்றிகொ ளுவகையொடு புகுதல் வேண்டினன்
யாண்டுறை வதுகொ ளூனே மாண்ட
போதுடன் கொண்ட வுண்கட்
டுதி லாட்டி திருநுதற் பசப்பே." [அகம் - ௩௱௪]

எனவும்,

"கண்டிசிற் பாண பண்புடைத் தம்[ம]
மாலை விரிந்த பசுவெண் ணி[லவி]ற்
குறுங்காற் கட்டி னறும்பூச் சேக்கைப்
பள்ளி யானையி னுயிர்த்தன னசையிற்
புதல்வற் புல்லினன் விறலவன்
புதல்வன் றாயவன் புறங்கவ வினளே." [குறுந் - ௩௱௫௧]

எனவும்,

"யாயா கியளே [மாஅ] யோளே
மடைமாண் செப்பிற் றமிய வைகிய
பெய்[யாப்] பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கா னெய்த
லினமீ னிருங்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானுந்
தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு னாணிக் காப்பா டும்மே." [குறுந் - க]

எனவும்,

"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரற்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கழுமத்
தான் றுழந் தட்ட தீம்புளிப் பாக
ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணு தன் முகனே." [குறுந் - ௱௬எ]

எனவும்,

"கானக் கோழிக் கவர்குரற் சேவ
லொண்பொறி யெருத்திற் றண்சித [1]ருறைப்பத்
[1]தேநீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு வரினுஞ்
சேர்ந்துவர லறியா செம்ம றேரே." [குறுந் - உ௬உ]

எனவும்,

"பிரசங் கலந்த [2]வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்

(பிரதி)—1. தேனீர். 2. ஒன்னமைத்.

புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோ
லுண்ணென் றோக்குபு பிழைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றருநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரிமெலிந் [1]தொழியப் பந்த ரோடி
யேவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
யறிவு மொழுக்கமும் யாங்குணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தாதை கொழுஞ்சோ றுள்ளா
தொழு[கு]நீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துய்க்குஞ் சிறுமது கையளே." [நற்றிணை - ௱ய]

எனவும்,

"பாணர் முல்லை பாடச் சுடரிழை
மாணுத லரிவை முல்லை மலைய
வினிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத் தன் புதல்வனொடு பொலிந்தே."
[ஐங்குறு - சா௱அ]

எனவும்[வரும்.] இவையெல்லாம் வாயில்கள் தம்முட் கூறின. தலைவற்குக் கூறின வந்தவழிக் காண்க. (௰க)

௱றிக. கழிவினு நிகழ்வினு மெதிர்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலு மல்லவை கடிதலுஞ்
செவிலிக் குரிய வாகு மென்ப.

என்-னின், செவிலிக்குரிய கூற்று வருமா றுணர்த்திற்று.

இறந்த காலத்தினும் நிகழ்காலத்தினும் எதிர்காலத்தினும் தன்குலத்தினுள்ளார் வழிகொள்ளுமாறு நல்லவை கூறுதலும் அல்லவை கடிதலுஞ் செவிலிக்கு உரித்து என்றவாறு.

[2]இறந்தகால முதலியவற்றுற் கூறுதலாவது முன்புள்ளார் இவ்வாறு செய்து நன்மைபெற்றூர் இவ்வாறு செய்து தீமைபெற்றூர் எனவும், இப்பொழுது இன்னோர் இவ்வாறு செய்து பயன் பெறுகின்றூரெனவும், இவ்வாறு செய்தார் பின்பு நன்மை தீமை பெறுவர் எனவுங் கூறுதல்.

[3]அவை அறனும் பொருளும் இன்பமும் பற்றி நிகழும்; அவையாவன தலைமகன் மாட்டும் உலகத்தார் மாட்டும் ஒழுகும் திறன் கூறுதல்.

அவை மனையாளைப் பற்றி வருதலிற் காமதந்திரத்துட் பாரியாதிகாரமெனக் கூறப்பட்டன. அறம்பற்றி வருதல திருவள்ளுவப்பயன்முதலிய சான்றோர்செய்யுட்களுள் அறப்பகுதியிற் கூறப்பட்டன.

[உதாரணம்]வருமாறு:—

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்." [குறள் - ருசு]

எனவும்,

(பிரதி)—1. தொழிப்பப். 2. இறந்தகாலத்தாற். 3. இவை.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை." [குறள் - ௫௫]

எனவும்,

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை." [குறள் - ௫௧]

எனவும்,

"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூர்நா ணியல்பினா—ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண்" [நாலடி - ௩௮௪]

[இதனுள்] 'கட்கினியாள்' என்றதனான் கோலஞ் செய்தல் வேண்டுமெனக் கூறியவாறும்.

[எனவும்,]

"அடிசிற் கினியாளை யன்புடை யாளைப்
படுசொற் பழிநாணு வாளை—யடிவருடிப்
பின்றுஞ்சி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என்றுஞ்சுங் கண்க ளெனக்கு."

[எனவும் வரும்.] இவை நல்லவை யுரைத்தல்.

"எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
யட்டில் புகாதா ளரும்பிணி—யட்டதனை
யுண்டி [1]யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை." [நாலடி - ௩௬௩]

எனவும்,

"தலைமகனிற் றீர்ந்தொழுகல் தான்பிறரிற் சேற
னிலைமையிறீப் பெண்டிரிற் சார்தல்—கலனணிந்து
வேற்றூர் புகுதல் விழாக்காண்ட னோன்பெடுத்தல்
கோற்றொடியார் கோளழியு மாறு." [அறநெறிச் - ௬௪]

[எனவும் வரும்.] இங்ஙனம் அல்லவை கடிதலாம்.

பிறவு மன்ன. (௰உ)

௱௫௨. சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய.

என்-னின், அறிவர் கூற்று நிகழுமா றுணர்த்திற்று. மேற் செவிலிக் குரித்தாகச் சொல்லப்பட்ட கிளவி யறிவர்க்கும் உரிய வென்றவாறு. உதாரணம் மேற்காட்டப்பட்டன. (௰௩)

௱௫௩. இடித்துவரை நிறுத்தலு மவர தாகுங்
கிழவனுங் கிழத்தியு மவர்வரை நிற்றலின்.

என்-னின், அறிவர்க் குரியதோர் மரபு உணர்த்திற்று.

---

(பிரதி)—1. யுவவாதா.

கழறி[ய] வெல்லையின் கண்ணே நிறுத்தலும் அறிவர்க்குரிய : தலைவனும் தலைவியும் அவர் ஏவல்வழி நிற்றலின் என்றவாறு.

உதாரணம்:—

"உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு [1]வருதி நீயே யிஃதோ
வோரான் வல்சிச் சீறில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
வினிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே." [குறுந் - உ௯௫]

இது தலைமகற்குக் கூறியது.

"துறைநீர் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
யரிமல ராம்பன் மேய்ந்த நெரிமருப்
பீர்ந்தண் ணெருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற் றள்ளற் றுஞ்சிப் பொழுதுபடப்
பைந்நிண வரா[அ]ல் குறையப் பேர்ந்து
[2]பரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்
போர்ச்செறி மள்ளரிற் புகுதரு மூரன்
றேர்தர வந்த நேரிழை மகிழ்நோ
ளூர்கோ ளகலா மகளிர் தரத்தரப்
பரத்தை [3]தாங்கலோ வலனென் பது நீ
புலத்த லொல்லுமோ மனைகெழு மடந்தை
யதுபுலந் துறுதல் வல்லி யோரே
[4]செய்யோ ணீங்கச் சில்பதங் கொழித்துத்
தாமட் டுண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப
வைகுந ளாத லறிந்து
மறியா ரம்மவஃ துடலு மோரே." [அகம் - ௩௱௬௬]

இது தலைவிக் குரைத்தது. (௰௪)

௩௫௪. உணர்ப்புவரை யிறப்பினுஞ் செய்குறி பிழைப்பினும்
புலத்தலு மூடலும் கிழவோற் குரிய.

என்-னின், தலைமகன் புலக்கு மிடம் கூறுதல் நுதலிற்று. புலவி அண்மைக் காலத்[த]து; ஊடல் அதனின் மிக்கது. பொருள் சூத்திரத்தான் விளங்கும்.

உதாரணம்:—

"எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலைப் போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்
தெல்லுறு மௌவ லாறும்
பல்லிருங் கூந்த லாரே நினக்கே." [குறுந் - ௰௯]

எனவரும். (௰௫)

(பிரதி)—1. வருந்தி. 2. பரூஉக்கோலடிப். 3. தாங்கோ. 4. செய்கெயா.

௱ருரு. புலத்தலு மூடலு மாகிய விடத்துஞ்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய.

இது தோழிக்குரிய மரபுணர்த்திற்று.

"அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் காமம்
புலந்தாரைப் புல்லா விடல்." [குறள் - ௲௩௱௩]

இது கற்பு.

"கலந்தநோய் கைம்மிகக் கண்படா [1]வெம்வயிற்
புலந்தாயு நீயாகிப் பொய்யானே வெல்குவை
யிலங்குதா ழுருவியோ டணிகொண்ட [நின்மலை]ச்
சிலம்பு பே[ா]ற் கூறுவ கூறு
மிலங்கே ரெல்வளை யிவளுடை நோயே." [கலித் - ௬௬]

இது களவு. (ருரு)

௱ருசு. பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி
மடத்தகு கிழமை யுடைமை யானு
மன்பிலை கொடியை யென்றலு முரியள்.

இதுவும் தோழிக்கு உரியதோர் இயல்பு உணர்த்திற்று. இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

உதாரணம்:—

"மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை
முகிழ்செய மூழ்கிய தொடர்பவ ளுண்க
ணவிழ்பனி யுறைப்பவு நல்காது விடுவா
[2]யிமிழ்திரைக் கொண்க கொடியை காணீ;

இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
[3]நலஞ்செய நல்கிய தொடர்பிவள் சா[அ]ய்ப்
புலந்தழப் புல்லாது விடுவா
யிலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காணீ." [கலித் - ௱உரு]

எனவரும். (ருசு)

௱ருஎ. அவன்குறிப் ப்றிதல் வேண்டியுங் கிழவி
யகமலி யூட லகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.

இது தலைவிக் குரியதோர் மரபுணர்த்திற்று.

தலைவன் குறிப்பறிதல் வேண்டியுந் தலைவி தனது அகமலிந்த வூடனீங்கு மிடத்திலும் வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறும் என்றவாறு.

"யாரிவ னெங்கூந்தல் கொள்வான்." [கலித் - அக]

(பிரதி)—1. வெம்மை. 2. உமிழ். 3. யலசெயனல்கிய.

எனவும்,

"யாரையோ வெம்மில் புகுதருவாய்." [கலித் - கூஅ]

எனவும் கூறியவாறு காண்க. (ὧஅ)

௱௫அ. காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை யவட்கிய லான.

இது தலைமகற் குரியதோர் மரபுணர்த்திற்று. இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

உதாரணம்:—

"ஒரூஉ, கொடியிய னல்லார் குரனுற்றத் துற்ற" என்னும் மருதக்கலியுள்,

"பெரியார்க் கடியரோ வாற்று தவர்."

எனத் தலைவி கூறியவழி,

"கடிய தமக்கினி யார்சொலத் தக்கரா மற்று." [கலித்-அஅ]

எனவரும். (ὧகூ)

௱௫கூ. அருண்முந் துறுத்த வன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட் குரித்தே.

இது தலைமகட் குரியதோர் இயல்புணர்த்திற்று.

பொருள்பட மொழிதலாவது பொய்யாக் கூறுது மெய்யே கூறல். உதாரணம் வந்தவழிக் காண்க. (உ ὧ)

௱சூὧ. களவுங் கற்பு மலர்வரை வின்றே.

என்-னின் அலர் ஆமாறு உணர்த்திற்று.

களவினுங் கற்பினும் அலராகு மென்று கூறுதல் வரைவின்று என்றவாறு.

'தொகுத்துக்கூறல்' என்பதனுற் களவும் ஈண்டு ஓதப் பட்டது.

உதாரணம்:—

"கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று." [குறள் - ௲௱சூகூ]

[இது களவு.]

"வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்துஞ்
சுரனே சென்றனர் காதல ரானழிந்
தீங்கியா னழுங்கிய வெவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே." [குறுந் - ௱சூὧ]

இது கற்பு. (உக)

௱சூக. அலரிற் றோன்றுங் காமத்து மிகுதி.

[உதாரணம்:—]

"ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொ
னீராக நீளுமிந் நோய்." [குறள் - ௲௱௪௭]

எனவரும். (உஉ)

௱௬உ. கிழவோன் விளையாட் டாங்கு மற்றே.

இதுவும் அது.

கிழவோன் விளையாட்டும் காமத்தின் மிகுதியைக் காட்டும் என்றவாறு.

ஆங்கு—அசை.

"அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணும்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத லியைவதா
[னின]க்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றம[ர்]பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே." [கலித் - எ௰]

எனவரும்.

விளையாட்டாற் காமமிக்கு உறங்காமை கண்டுகொள்க. உ௩

௱௬௩. மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை
தம்முள வாதல் வாயில்கட் கில்லை.

என்-னின், வாயில்கட் குரியதோர் மரபுணர்த்திற்று.

மனைவிமாட்டுக் கிழவோன் கொடுமையைத் தாங்கார்கூறல் வாயில்கட் கில்லை என்றவாறு. (உச)

௱௬௪. மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக் குறுதி யுள்வழி யுண்டே.

என்-னின், இதுவு மது.

மனைவி முன்னர்ச் செயலற்றுக் கூறுஞ் சொல் மனைவிக்கு உறுதியுள்வழி வாயில் கட்கு உண்டு என்றவாறு.

உதாரணம்:—

"இனியவர், வரினும் நோய்மருந் தல்லாய் வாரா
தவண ராகுக காதல [1]ரிவணங்
காமம் படர்பட வருத்திய
நோய்மலி வருத்தங் காணன்மா ரவரே."

எனவரும். (உரு)

௱௬௫. முன்னிலைப் புறமொழி யெல்லா [2]வாயிற்கும்
பின்னிலைத் தோன்று மென்மனார் புலவர்.

இதுவு மது.

(பிரதி)—1. ரிவ்வணங். 2. வாயில்கட்கும்.

முன்னிலைப் புறமொழியாகக் கூறுஞ் சொல் எல்லா வாயில்கட்கும் உரிய: பின்னிலை முயலுங்காற் றோன்றும் என்றவாறு.

முன்னிலைப் புறமொழியாவது முன்னிலையாக நிற்பாரைக் குறித்துப் பிறனைக் கூறுமாறுபோலக் கூறுதல்.

"உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றாகுதல்
பண்டுமிவ் வுல[கத்] தியற்கை" [கலித் - ௨௨]

என்றவழி அவ்வுரை தலைமகனை நோக்கியவாறு காண்க. (௨௬)

௱௬௬. தொல்லவை யுரைத்தலு நுகர்ச்சி யேத்தலும்
பல்லாற் றானு மூடலிற் றகைத்தலு
முறுதி காட்டலு மறிவுமெய்ந் நிறுத்தலு
மேதுவி னுரைத்தலுந் துணியக் காட்டலு
மணிநிலை யுரைத்தலுங் கூத்தர் மேன.

என்-னின், கூத்தர்க்குரிய திறங் கூறுதல் நுதலிற்று.

தொல்லவை யுரைத்த லாவது — முன்புள்ளார் இவ்வாறு செய்வரெனக் கூறுதல்.

நுகர்ச்சி யேத்த லாவது—நுகர்ச்சி யிவ்வாறு இனியதொன்றெனப் புகழ்தல்.

பல்லாற்றானு மூடலிற் றணித்தலும் என்பது—பலநெறியானும் ஊடலினின்றுந் தலைமகளை மீட்டல்: அஃதாவது இவ்வாறு செய்தல் குற்றமென்றானும் அன்புடையார் செய்யாரென்றானும் மனைக்கிழத்தியர் செயலன்று [1]என்றானும் இவ்வாறு கூறுதல்.

உறுதிகாட்ட லாவது—இவ்வூடல் தணிந்ததனாற் பயனிது [2]வெனவும் நன்மை பயக்கும் எனவும் கூறுதல்.

அறிவு மெய்ந்நிறுத்த லாவது — தலைமகள் மெய்யின்கண் மிக்க துணிவினாற் கெட்டவறிவை இது தக்கதன்றென அறிவு கொளுத்துதல்.

ஏதுவினுரைத்தலும் என்பது—இவ்வாறு செய்யின் இவ்வாறு குற்றம் பயக்கும் என ஏதுவினாற் கூறுதல். அது பிறள் ஒருத்தி கெட்டபடி கூறுதல்.

துணியக்காட்ட லாவது—அவள் துணியுமாறு க[ா]ரணங்காட்டுதல்.

அணிநிலை யுரைத்த லாவது—இவ்வாறு உளதாகிய அணியைப் புலரவிடுகின்றத னாற் பயன் என்னையெனக் கூறுதல்.

இவை யெல்லாங் கூத்தர் மேலன என்றவாறு. அவர் எல்லா நெறியினானும் புனைந் துரைக்க வல்ல ராதலான் அவர் மேலன [3]என வுரைத்தார். இவற்றிற்குச் செய்யுள் வந்த வழிக் கண்டுகொள்க. இந்நூல் வழக்குஞ் செய்யுளும் பற்றி நிகழ்தலின் இப் பொருண் மேல் வரும் வழக்குரை யுதாரண[மா]ம். (௨௭)

௱௬௭. நிலம்பெயர்ந் துரைத்த லவணிலை யுரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தனவை யுரிய.

(பிரதி)—1. எனவும். 2. வெனறும. 3. யெனறாரர்

இது மேற்கூறப்பட்ட கூத்தர்க்குஞ் சொல்லாத பாணர்க்கும் உரிய கிளவி உணர்த்திற்று.

நிலம்பெயர்ந் துரைத்தல் என்பது — தலைவன் பிரிந்தவிடத்துச் சென்று கூறுதல்.

அவணிலை யுரைத்தல் என்பது—அவள்நின்ற நிலைமையைத் தலைவற்குக் கூறுதல்.

"அருந்தவ மாற்றியா னுகர்ச்சிபோல்" என்னும் பாலைக்கலியுள்,

"தணியாரோ யுழந்தாளுக் தகையவ டகைபெற
வணிகிளர் நெடுக்கிண்டே ரயர்மதி பணிபுநின்
காமர் கழலடி சேர்க
நாமஞ்சா றெவ்வரி னடுங்குநள் பெரிதே." [கலித் - ௩௰]

எனப் பாசறைக்கண் தலைவற்குத் தலைவிவருத்தம் கூறியவாறு காண்க. (உ௮)

௱சு௮. ஆற்றது பண்பும் கருமத்து வினையு
மேவன் முடிபும் விளுவுஞ் செப்பு
மாற்றிடைக் கண்ட பொருளு மிறைச்சியுந்
தோற்றஞ் சான்ற வன்னவை பிறவு
[1]மிளையோர்க் குரிய கிளவி யென்ப.

இஃது இளையோர்க்குரிய கிளவியாமா றுணர்த்திற்று. சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

உதாரணம்:—

"விருந்து பெறுகுவள் போலுந் திருந்திழைத்
தடமென் பணைத்தோண் மடமா வரிவை
தளரியற் கிள்ளை யினிதினி னெடுத்த
வளராப் பிள்ளைத் தூவி யன்ன
[2]வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவிற்
பறைக்க ணன்ன நிறைச்சுனை தோறும்
சுழிபடு மொக்கு ளெழுவன சாலத்
தெ[ா]ளிபொரு பொகுட்டிற் றோன் றுவன மாய
விரிசினை யுதிர்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிர[ற்]சிற கேய்ப்ப வறற்கண் [3]வரித்த
வண்டு [4]ணறவீ துமித்த நேமி
தண்ணில மருங்கிற் போழ்ந்த வழியு
ணிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லு நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புக நயந்தே." [அகம் - ௱உ௪]

எனவரும். பிறவு மன்ன. (உ௯)

௱சு௯. உழைக்குறுந் தொழிலுங் காப்பு முயர்ந்தோர்
நடக்கை யெல்லா மவர்கட் படுமே.

(பிரதி)—1. மிளைஞோர்க். 2. வார்பெய்தல். 3. வாத்த 4. ளறுவி.

இதுவும் இளையோர்க்குரிய திறன் உணர்த்திற்று.

இடத்தினின்று குற்றேவல் செய்தலும் மெய்காத்தலும் பிறவும் உயர்ந்தோர்க்குளதாகிய நடை யெல்லாம் இளையோர்கட் படும் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க. (௩௰)

௱௪௰. பின்முறை யாகிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி யெதிர்ப்பா டாயினு
மின்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினு
மிறந்த துணைய கிழவோ னாங்கட்
கலங்கலு முரிய னென்மனார் புலவர்.

இது தலைமகற் குரியதோர் மரபுணர்த்திற்று.

உதாரணம்:—

["இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமு மறு]¹வின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறும் ²பழமொழி யெல்லாம்
வாயே யாக வாய்த்த[ன]ந் தோழி
நிரைதார் மார்ப னெருனை யொருத்தியொடு
வதுவை ய[ய]ர்தல் வேண்டிப் புதுவ[தி]
னியன்ற வணிய னித்தெரு விற[ப்] போன்
மாண்டேர் மாமணி கறங்கக் கடைகழிந்து
காண்டல் விருப்பொடு தளர்புதளர் போடு[ம்]
பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தேர்
தாங்குமதி வலவவென் றிழிந்தனன் றாங்காது
மணிமரு ளவ்வாய் மார்பகஞ் சிவணப்
புல்லிப் பெரும செல்லினி யகத்தெனக்
கொடுப்போற் கொல்லான் க[லு]ழலிற் றடுத்த
மாநிதிக் கிழவனும் போன்மென மகனொடு
தானே புகு[த]ந் தோனே யானது
தடுத்தனெ னாகுத லணி யிடித்திவற்
கலக்கினன் போலுமிக் கொடியோ னெனச்சென்
றலைக்குங் கோலொடு குறுகித் தலைக்கொண்
டிமிழ்குரன் முரசி னின்சீ ரவ[ர்]மனை
பயில்வன போலவந் திசைப்பவுந் தவிரான்
³கழங்க[ா] டாஅயத் தன்றுநம் மருளிய
⁴பழங்க ணோட்டமு நலிய
வழுங்கின னல்லனோ வயர்ந்தனன் மலனே." [அகம் - ௬௬]

என வரும். (௩௧)

(பிரதி)— 1. வின்றி வெய்துப. 2. பழிமொழி. 3. கழங்கடா அயத். 4. பழங்கா ணோட்டமு.

௱எக. தாய்போற் கழறித் தழீஇக் கோட
லாய்மனைக் கிழத்திக்கு முரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான.

இது தலைமகட் குரியதோர் கிளவி யுணர்த்திற்று.

காமக்கிழத்திமாட்டுத் தாய்போற் கழறித் தழீஇக்கோடல் மனைக்கிழத்திக்கு[ம்] உரித்து க[வ]வால் வருத்தமுற்ற காலத்தென்றவாறு : [அஃதாவது] புலவாதவழி என்றவாறு.

இவ்வாறு கூறுவது தலைமகன் முதிர்ந்தவழி என்று கொள்க. உம்மை இறந்தது தழீஇயிற்று.

உதாரணம்:—

"வயல்வெள் ளாம்ப[ற் சூடுதெரி புதுப்பூக்
கன்றுடைப் புனிற்று தின்ற மிச்சி
லோய்வுடை நடைப்பக டாரு மூரன்
றொடர்புநீ வெஃகினை யாயி னென்சொற்
கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே
நீயே பெருநலத் தகையே யவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்
தண்கமழ் புதுமல ரூதும்
வண்டென மொழிப மகனென் னோரே]." [நற்றிணை - உ௯ ]

என்பது கொள்க. 'கவவொடு மயங்கிய காலை' என்பதற்குச் செய்யுள் வந்தவழிக்காண்க. (௩உ)

௱எஉ. அவன்சோர்வு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்றா யுயர்புந் தன்னுயர் பாகுஞ்
செல்வன் பணிமொழி யியல்பாக லான.

இதுவும் தலைமகட்குரிய கிளவி யுணர்த்திற்று. மேலதற் கோர் புறனடை.

தலைமகனது சோர்வுகாத்தல் தலைமகட்குக் கடனாகலால் தன்மகனுக்குத் தாயாகிய காமக்கிழத்தியுயர்புந் தன்னுயர்பாகும் : இருவருந் தலைமகன் பணித்த மொழிகோடல் இயல்பாகலான் : என்றவாறு.

சோர்வாவது ஒழுக்கத்திற் சோர்வு. அது பரத்தையிற்பிரிவு. அதனை மறையாது காமக்கிழத்தி யாற்றிற் றலைமகற்குக் குறைபாடு வரும் என்பதனால், அவளை யுயர்த்தி ய[வ்]வொழுக்கம் பிறர்க்குப் புலனாகாமை யேற்றுக் கோடல் வேண்டுமெனக் கூறுதலுந் தனக்கு இழிபு ஆகாது உயர்ச்சியாம் என்றவாறு. இது மேலதற்குக் காரணங் கூறிற்று. (௩௩)

௱எ௩. எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரார்.

இது தலைமக்கட் குரியதோர் மரபு உணர்த்திற்று.

நினைத்தற்கரிய பாசறைக்கண் தலைமகளிரொடும் புணரார் தலைமக்கள் என்றவாறு.

நினைத்தற்கருமை - மாற்றாரை வெல்லுங் கருத்து மேற்கோடலிற் றலைமகளிரை நினைக்கலாதாயிற்று. 'பாசறை' என விசேடித்தவதனால் ஏனைப் பிரிவுக்கு மாமென்று கொள்க. (௩௪)

௱௭௪. புறத்தோ ராங்கட் புணர்வ தாகும்.

இது மேலதற்குப் புறனடை.

மேற் சொல்லப்பட்ட பாசறைக்கட் புறப்பெண்டிர் புணர்ச்சி பொருந்துவது என்றவாறு.

பொருந்துவது என்றதனாற் கூட்டமென்றுகொள்க. அவராவார் தாதியருங் கணிகையரும். (௩௫)

௱௭௫. காமநிலை யுரைத்தலுந் தேர்நிலை யுரைத்தலுங்
கிழவோன் குறிப்பினை யெடுத்துக் கூறலு
மாவொடு பட்ட நிமித்தங் கூறலுஞ்
செலவுறு கிளவியுஞ் செலவழுங்கு கிளவியு
மன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய.

இது பார்ப்பார்க் குரிய கிளவி யுணர்த்திற்று.

காமநிலை யுரைத்த லாவது—நீ பிரியின் இவள் காமமிகும் என்று கூறுதல்.

"அறனின்றி யயறூற்று மம்பலை" என்பதனுள்,

"உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல
விடைகொண்டியா மிரப்பவு மெங்கொள்ளா யாயினை
கடையவாற் றிடைநீர நீரற்ற வறுஞ்சுனை
யடைவொடு வாடிய வணிமலர் தகைப்பன." [கலித் - ௩]

எனவரும்.

தேர்நிலை யுரைத்த லாவது—ஆராய்ச்சிநிலையாற் கூறுதல்.

அது வருமாறு:—

"வேனி [1]லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்காங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானொன்
றுசாவுகோ வைய சிறிது;

நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே

இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோன்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே;

நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் வரிய வம்பு தெரிதியே

இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
லிணைநோக் குண்க ணீர்நில் லாவே;

நீயே, புலம்பிய வுள்ளமொடு பொருள்வயிற் செலீ[இ]யர்
வலம்படு திகிரி வாய்நீ வுதியே

(பிரதி)—1. லுயர்ந்த.

இவட்கே, அலங்கி[த]ழ்க் கோடல் வீயுகு பவையோ
விலங்கே ரெல்வளை யிறைவா ரும்மே;

என நின்
சொன்னவை யாவது மிளையவ ணீநீப்பிற்
ற[ன்ன]லங் கடைகொள்ளப் படுதலின் மற்றிவ
ளின்னுயிர் தருதலு மாற்றுமோ
முன்னிய தே[எ]த்து முயன்றுசெய் பொருளே.” [கலித் - எ]

கிழவோன் குறிப்பினை யெடுத்துக் கூறலும் என்பது—தலைவன் குறிப்பினைத் தலைவிக்கு விளங்கக்கூறலும் என்றவாறு.

ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும் என்பது—ஆவொடுபட்ட நிமித்தங் கூறுதலும் என்றவாறு. ‘பட்ட நிமித்தம்’ என்றதனால் எல்லாநிமித்தமுங் கொள்க.

செலவுறு கிளவி என்பது— செலவுற்ற சொல்லும் என்றவாறு. அஃதாவது தலைமகன் போயினான் என்று கூறுதல். இவற்றிற்கு இலக்கியம் வந்தவழிக்காண்க.

செலவழுங்கு கிளவி என்பது— செலவழுங்கல் வேண்டுமெனக் கூறுதல்.

உதாரணம்:—

“நடுவிகந் தொரீஇய நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூடிக் காய்சினந் தெறுதலி
னுறலூறு கமழ்கடாஅத் தொல்கிய வெழில்வேழம்
வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
செ[ா]ல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றை[இ]ய

வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர் பிசைக்குங்கோ
லேழுந்த[ம்] பயங்கெட விடைநின்ற நரம்பதூஉம்
யாழினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

புரைதவப் பயனோக்கா[ர்] தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுது கண்ணோடா துயிர்வௌவு
மரசினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்கா றிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எனவாங்கு,

நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிகல் வேண்டுவல் சூழிற் பழியின்று
மன்னவன் புறந்த[ர] வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூட
லின்னுறழ் வியன்மார்ப வதுமனும் பொருளே.” [கலித் - அ]

எனவரும்.

இவை பார்ப்பார்க் குரிய வென்றவாறு. 'ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்' [பொருளியல்-உஎ] வரும் என்பதனால் தோழிமாட்டும் பாங்கன்மாட்டும் கொள்க. (௩௬)

ரஎசூ. எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப.

இது வாயில்கட் குள்ளதோர் மரபு உணர்த்திற்று.

வாயில்கள் எல்லாம் இருவர்மாட்டும் பொருந்திய மகிழ்ச்சிப் பொருண்மையை யுடைய என்றவாறு.

இருவராவார் தலைவனுந் தலைவியும். எனவே வெகுட்சிப்பொருண்மை கூறப் பெறார் என்றவாறு. (௩எ)

ரஎஎ. அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றிற்
சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர்.

இது மேலதற்கோர் புறனடை.

வாயில்கண் மகிழ்ச்சிப் பொருண்மை கூறுதலன்றி யன்பு நீங்கிய கிளவி கூறினாரா யிற் றலைவன் சிறைப்புறத்தனாகப் பெறுவர் எனச் சொல்லுவர் என்றவாறு.

இதுவும் ஓரிலக்கணங் கூறியவாறு. (௩அ)

ரஎஅ. தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்த
லெத்திறத் தானுங் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த விரண்டலங் கடையே.

இது தலைவிக் குரியதோர் மரபுணர்த்திற்று.

தலைவன்முன்னர்த் தன்னைப்புகழுங் கூற்று எவ்வழியானுங் கிழத்திக்கு இல்லை: முற்படக் கூறிய இரண்டிடமும் அல்லாதவழி யென்றவாறு.

அவையாவன தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தவழி இரத்தலுந் தெளித்தலும் என அகத்திணையியலுட் கூறிய இரண்டும். அவ்வழிப் புகழ்தலாவது:

"[1]ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல் யாநின்னை
[2]வெரூஉதுங் காணுங் கடை" [கலித் - அஎ]

என்றவழித் தன்னை யுயர்த்துக் கூறுதலாற் புகழ்ந்தாளாம்: நின்னை வெருவாதார் பிறர் என்னும் உள்ளக்கருத்தினால்.

"நீ கூறும் பொய்ச்சூ[3]ளணங்காயின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு" [கலித் - அஅ]

என்றவழியும் பெண்டிர் பலர் உளராயினும் அவர் எல்லார் மாட்டுஞ் செல்லாது தன்மேல் வருமெனக் குறித்தாராதலில் தன்னைப் புகழ்ந்தாளாம். பிறவுமன்ன. (௩கூ)

ரஎகூ. கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயி னுரிய வென்ப.

இது தலைவற் குரியதோர் மரபுணர்த்திற்று.

---

(பிரதி)—1. ஒருவுநீ. 2. வெருவுதும். 3. ளணங்காகி.

தலைவிமுன்னர்த் தலைவன் றன்னைப்புகழுங் கூற்று வினைவயிற் பிரியும்வழி யுரிய என்றவாறு.

"இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிழிவு" [கலித் - உ]

என்றும்,

"இல்லிருந் தமகிழ்வோர்க் கில்லையாற் புகழ்"

என்றும் இவ்வாறு கூறுதல். இவ்வாறு கூறவே "யான் செய்யேன்" எனத் தன்னைப் புகழ்ந்தவாறும். (௬௦)

௱அ௰. மொழியெதிர் மொழிதல் பாங்கற் குரித்தே.

இது பாங்கற் குரியதோர் மரபுணர்த்திற்று. இது களவிற்கும் கற்பிற்கும் பொது: ஒப்பக்கூறல் என்னும் உத்திவகையாற் கூறப்பட்டது.

தலைவன் கூறியவழி எதிர்கூறுதல் பாங்கற்குரித்து என்றவாறு. எதிர் கூறுதலாவது மாறுபடக் கூறுதல். அவை களவு காலத்துக் கழறலுங் கற்புக்காலத்துப் பரத்தையிற் பிரிவிற்கு உடம்படாது கூறலும் இவை போல்வனவும்.

[உதாரணம்:—]

"காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நுணங்கிக்
கடுத்தலுந் தணித்தலு மின்றே யானை
குளகு மெஃகுளம் போலப்
பாணியு முடைத்தது காணுநர்ப் பெறினே." [குறுந் - ௱௩௬]

என்றும்,

"மருட் பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்." [குறள் - ௯௰௪]

என்றும் வரும். (௬௧)

௱அ௧. குறித்தெதிர் மொழித லஃகித் தோன்றும்.

இது[வு மது.]
[மே]மற் குறித்ததற் கெதிர் கூறுதல் அருகித்தோன்றும் என்றவாறு. அது வந்த வழிக்காண்க. (௬௨)

௱அ௨. துன்புறு பொழுதினு மெல்லாங் கிழவன்
வன்புறுத் தல்லது சேற லில்லை.

இது தலைவற்குரிய தோர் மரபுணர்த்திற்று. துன்புறு பொழுதினும் எல்லாப்பிரிவினும் தலைவன் தலைவியை வற்புறுத்தியல்லது சேறலில்லை என்றவாறு.

துன்புறுபொழுதாவது களவுகாலம். களவினும் கற்பினும் பொது என்றவாறு. (௬௩)

௱அ௩. செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே
வன்பொறை குறித்த வவிர்ச்சி யாகும்.

இதுவு மது.

தலைவன் போகக் கருதித் தவிர்தல் போகாமை யன்று; தலைவியை வற்புறுத்து தலைக் குறித்துத் தவிர்ந்த தவிர்ச்சியாம் என்றவாறு.

எனவே வினைமேற் செல்லுங்காலத்துத் தலைவி பொருள் எனப் போகாமை இல்லை; வற்புறுத்திப்போம் என்றவாறும். (சுசு)

௱அச. கிழவி நிலையே வினையிடத் துரையார்
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்.

உரையாமை யாவது உருவு வெளிப்பாடு. அதனை வினைநிகழு மிடத்து உரைக்கப் பெறார்; தலைமக்கள் தமது வினைமுடிந்த காலத்து விளங்கித்தோன்று மென்றவாறு.

எனவே வினையிடத்துள் நினைப்பாராயினும் அமையும்: உரைக்கப்பெறார் என்பதூஉம், வென்றிக்காலத்துக் குற்றமறத் தோன்றும் என்பதூஉம் கொள்ளப்படும்.

உதாரணம்:—

“தங்கிய வொள்ளொளி யோலைய தாய்த்தட மாமதின்மேற்
பொங்கிய வேந்த ரெரிமுகந் தோன்றின் று போதுகண்மேற்
பைங்கயல் பாய்புனற் பாழிப்பற் றூரைப் பணித்ததென்னன்
செங்கய லோடு சிலையுங் கிடந்த திருமுகமே.” [பாண்டிக்கோவை]

என வரும். (சுரு)

௱அரு. பூப்பின் புறப்பா டீரறு நாளும்
நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.

இதுவு மது.

பூப்பினது புறம்பு பன்னிரண்டு நாளும் விட்டகன் றுறைவாரல்லர் என்று சொல்லுவர் பரத்தையிற் பிரிந்தகாலத்து என்றவாறு.

பரத்தையர்சேரியா ராயினும் பூத்தோன்றி மூன்றுநாள் கழித்தபின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று என்றவாறு. இதனாற் பயன் என்னையெனின் அது கருத் தோன்றுங் காலம் என்க. (சுசு)

௱அசு. வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது.

இதுவு மது.

விரும்பப்பட்ட கல்விக்கட் பிரியுங் காலம் மூன்றியாண்டின் மிகாது என்றவாறு. எனவே ஓரியாண்டாயினு மீரியாண்டாயினும் ஆமென்பது கொள்ளப்படும். (சுஎ)

௱அஎ. வேந்துறு தொழிலே யாண்டின தகமே.

இதுவு மது.

வேந்துறு தொழிலாவது பகைதணிவினை.

வேந்தற்குற்றவழி, தூது காவல் என அவ்வழிப்பிரிவிற்கும் ஆண்டினது அகமே காலம் என்றவாறு.

எனவே அறுதிங்கள் முத்திங்கள் எல்லாங் கொள்ளப்படும். (சுஅ)

௱அஅ. ஏனைப் பிரிவு மவ்விய னிலையும்.

இதுவு மது.

ஒழிந்த பொருள்வயிற் பிரிவிற்குங் காலம் யாண்டின தகம் என்றவாறு. (சுகூ)

௱அகூ. யாறுங் குளனுங் காவு மாடிப்
பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப.

இது தலைவற்குங் கிழத்திக்கு முரியதோர் மரபு உணர்த்திற்று.

**யாறுங் குளனும் காவு மாடி** என்பது— விளையாட்டு என்று கொள்க.

உதாரணம்:—

"அருந்தவ மாற்றியா னுகர்ச்சிபோ லணிகொள" என்னும் பாலைக்கலியுள்,

"துயிலின்றி யானீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்கொல்லோ" [கலித் - ௩௰]

என்று தலைவன் பதியிகந்து நுகர்ந்தமை தலைவி கூறியவாறு காண்க. (௭௰)

௱கூ௰. காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே.

இது தலைவற்குந் தலைவிக்கு முரியதோர் மரபுணர்த்திற்று.

**சிறந்தது பயிற்ற** லாவது—அறத்தின்மேன் மனநிகழ்ச்சி.

சூத்திரத்தாற் பொருள்விளங்கும். (௭க)

௱கூக. தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாட்டி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலிய ரறிவர் விருந்தினர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப.

[இது] கற்பின்கண் வாயில்களாவாரை உணர்த்திற்று.

பாட்டி யென்பது பாடினி யென்றவாறு.

தோழிமுதலாகச் சொல்லப்பட்ட பன்னிருவரும் வாயில்களாவார் என்றவாறு. (௭உ)

௱கூஉ. வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை
யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை
யுள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான

இது வினைமுற்றி மீண்ட தலைவற் குரியதோர் மரபு உணர்த்திற்று.

சூத்திரத்தாற் பொருள்விளங்கும்.

'இடைச்சுர மருங்கிற் றவிர்தலில்லை' என்பது [1]வழியில் இடையிற் றங்காது இரவும் பகலுமாக வருமென்பது கருத்து; தங்குவானாயின் மனையாள்மாட்டு விருப்பின்றாம்.

உதாரணம்:—

"இ[ரு]ந்த வேந்த னருந்தொழின் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் [2]யானு
மேறி யல்லது வந்த வாறு
நனியறிந் தன்றோ விலனே தாஅய்
[3]முயற்பற ழுகளு முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூ ராங்கண்
மெல்லிய லரிவை யில்வயி [4]னிறீஇ
யிழிமின் னெ[ன்]றநின் மொழிமருண் டிசினே
வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
[5]மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
வுரைமதி வாழியோ வலவ வெனத்தன்
வரைமருண் மார்பி னளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்க நெடுந்தகை
விருந்தோ பெற்றன ளருந்திறை யோளே." [அகம் - ௩௮௪]

என வரும். பிறவு மன்ன. (ருங)

கற்பியன் முற்றிற்று.

---

(பிரதி)—1. தங்குதல். 2. யாய. 3. பறழும் பாந்தளு. 4. னறீஇ. 5. ...லகு.

# ஐந்தாவது - பொருளியல்.



௩௯௩. இசைதிரிந் திசைப்பினு [1]மியையுமன் பொருளே
யசைதிரிந் திசையா வென்மனார் புலவர்.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்னபெயர்த்தோ எனின், பொருளியல் என்னும் பெயர்த்து: பொருளியல்பு உணர்த்தினமையாற் பெற்ற பெயர். என்னை பொருளியல்பு உணர்த்திய வாறு எனின், மேற் சொல்லப்பட்ட ஓத்துக்களினும் இனிச் சொல்லும் ஓத்துக்களினும் வரும் பொருளினது தன்மை யுணர்த்துதலிற் பொருளியல் உணர்த்திற்றும்.

இதனை 'ஒழிபியல்' எனினும் இழுக்காது: அகப்பொருள் புறப்பொருள் என்பன விரண்டு பொருண்மையினும் எஞ்சி நின்றன கூறினமையின்.

இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ எனின், தொடர்மொழிக்கட் பொருள் இயையுமாறு உணர்த்திற்று.

இசைதிரிந்து ஒலிப்பினும் பொருள் இயையும்; அவ்வழி அச்சொற்கு அங்கமாகிய [2]அசை திரிந்தொலியா என்றவாறு.

என்றது சொல்லொடுசொல் தொடர்வுபடும் வாய்பாட்டாற் றொடராது பிறிதோர் வாய்பாட்டாற் றொடுப்பினும் பொருட்டொடர்பு உண்டாயிற் பொருள் இயையும்வழி அசைச்சொற்கள் திரியாது நின்றநிலையே பொருள்படுமா றாயிற்று.

உதாரணம்:—

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பி னஃதே மைபி னுண்ஞா
ணுதல திமையா நாட்ட மிகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்ட[த்]தோலா தோற்கே
யூர்ந்த தேறே சேர்ந்தோ ளுமையே
செவ்வா னன்ன மேனி யவ்வா
ணிலங்குபிறை யன்ன விளங்குவால் வையெயிற்
றெரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை
[3]முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி
மூவா வமரரு முனிவரும் [4]பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற் றந்தணன்
[5]றாவி றாணிழற் றவிர்ந்தன்றா லுலகே." [அகம்-கடவுள்வாழ்த்து]

(பிரதி)—1. மிசையுமன். 2. அங்கம். 3. முதிர்ந்த. 4. யர்வரும் பிறரு. 5. றாவின்.

இதற்குக் கொன்றையாலமைந்த தாரினனாய் மாலையனாய் கண்ணியனாய் நுண்ஞாண் மார்பினனாய் இமையா நாட்டத்து நுதலினனாய்க் கணிச்சியு மழுவு மூவாய் வேலும் ஏந்திய கையினனாய் யாவர்க்குந் தோலாதோனுமாய் ஏற்றினையு மூர்ந்து உமையாளையுஞ் சேர்ந்து செவ்வானன்ன மேனியையும் பிறைபோன்ற எயிற்றினையும் எரிபோன்ற சடையினையும் திங்களொடு சுடருஞ் சென்னியையு[மு]டையனாய் மூவாவமரர் முதலிய யா[வ]ரு மறியாத் தொன்முறை மரபினனாய்ப் புலியதளையு முடுத்த யாழ்செழு மணிமிடற்றந்தணனது சிவானுபூதியிற் பேருலகந் தங்கிற்று எனப்பொருள் உரைக்குங் காலத்து அதன்கண் இடைக்கிடந்த சொற்கள் முன்னொடுபின் வாய்பாடுகள் சேராதன்றே; அவ்வழி அவ்வாய் பாட்டாற் போந்த பொருளுரைப்பச் சேர்ந்தவாறும் இசைதிரித் திசைத்தவாறும் அவை தத்தம் நிலையிற் குலையாமை நின்று பொருள்பட்டவாறுங் கண்டுகொள்க.

"ஊறொரா றுற்றபின் னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப வாய்ந்தவர் கோள்." [குறள் - ௬௬௨]

இதுவும் இரண்டென்னுந் தொகைக்கு 'ஊறொராமை' எனப்பொருள் உரைக்க வேண்டும். (௧)

௱௬௪. நோயு மின்பமு மிருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
வெட்டன் பகுதியும் விளங்க வொட்டி[ய]
வுறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன்
மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியு
மவரவ றுறுபிணி தமபோற் சேர்த்தியு
[1]மறிவும் புலனும் வேறுபட நிறீஇ
யிருபெயர் மூன்று முரிய வாக
வுவம வாயிற் படுத்தலு முவம
மொன்றிடத் திருவர்க்கு முரியபாற் கிளவி.

என்-னின், ஒருசார் காமப்பொருண்மைபற்றி நிகழ்வதோர் கிளவி யுணர்த்திற்று.

நோயு மின்பமு மிருவகை நிலையிற் காமங் கண்ணிய மரபிடை தெரிய வெட்டன் பகுதியும் விளங்க வொட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோன் மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்தும் என்பது—துன்பமும் இன்பமும் ஆகிய இருவகை நிலையினையுமுடைய காமத்தைக் குறித்த மரபு இடையீடுபடுதலான் மெய்ப்பாடு எட்டாகிய எட்டன் பகுதியும் விளங்கப் பொருந்திய உறுப்புடையது போலவும் உணர்வுடையது போலவும் மறுத்துரைப்பது போலவும் நெஞ்சொடுபுணர்த்துக் கூறியும் என்றவாறு.

'காமங்கண்ணிய' என்றதனால் அகப்பொருளாகிய காமமும் புறப்பொருளாகிய காமமும் கொள்ளப்படும். 'இடைதெரிய' என்பதனை

... ... —இன்பம்
'இடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா
றடைவொழிந்தா ரான்றமைந் தார்" [நாலடி - ௫௪]

(பிரதி)—1. மறிவுமைம்.

என்றாற் போலக் கொள்க. 'தெரிய' என்னும் செயவெனெச்சம் ஏதுப்பொருண்மை குறித்துநின்றது. மெய்ப்பாடு எட்டாவது:—நகை, அழுகை, உவகை, இளிவரல், அச்சம், பெருமிதம், மருட்கை, வெகுளி: இவற்றின்பகுதி மெய்ப்பாட்டியலுட் காண்க. இம் மெய்ப்பாடு உறுப்புடையது போலச் சொல்லப்பட்ட நெஞ்சின்கட் புலப்பட என்றவாறு.

சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச் செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும் என்பது—சொல்லாத மரபினையுடையவற்றொடு கெழுமி யவை செய்யாத மரபையாண்டுப் படுத்தி யவற்றையும் நெஞ்சினைப்போல அடக்கியும் என்றவாறு.

சொல்லாமரபின வாவன—புள்ளும், மாவும், மரனும், கடலும், கானலும் முதலாயின. செய்யா மரபாவன—தூதாச் சேறலும் வருதலும் உளபோலக்கூறும் அவைபோல்வனவும் பிறவும்.

அவரவ ருறுபிணி தமபோற் போற்றியும் என்பது—யாவர்சிலர் யாதொரு பிணியுற்றார் அவருற்ற பிணியைத் தாமுற்ற பிணிபோலச் சேர்த்தியும் என்றவாறு.

'அவரவர்' என்பது உயர்திணையாய்க் கூறினும் இருதிணையுங் கொள்ளப்படும்:

> "ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
> வருவகை தானே வழக்கென மொழிப." [பொருளியல் - உஎ]

என்பதனால்.

அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இருபெயர் மூன்று முரியவாக வுவம வாயிற் படுத்தலும் உவமம் ஒன்றிடத்து என்பது—அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி இருவகைப்பட்ட பெயரும் மூவகைப்பட்ட பொருட்கும் உரித்தாக உவமம் பொருந்து மிடத்து உவமவாயிற் படுத்தலும் என்றவாறு.

வேறுபட நிறுத்தலாவது—தத்தம் நிலைமை யொழியவென்றவாறு. இருபெயராவது—உவமைப்பெயரும் உவமிக்கும் பெயரும். மூன்றும் உரியவாகும் என்பது—தொழிலும் பண்பும் பயனும். 'உவமம் ஒன்றிடத்து' என்றதனை மொழிமாற்றுக.

இருவர்க்கும் உரியபாற் கிளவி என்பது—தலைமகற்குந் தலைமகட்கும் உரியவொருகூற்றக் கிளவி என்றவாறு.

அவற்றுள் நெஞ்சொடுபுணர்த்தற்கு உதாரணம்:—

> "கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
> பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்தன்
> தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
> நாணொடு மிடைந்த கற்பின் வாணுத
> லந்தீங் கிளவிக் குறுமகள்
> மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே." [அகம்-கூ]

என்பது உறுப்புடையது போல உவகைபற்றி வந்தது.

> "சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
> நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றின்
> முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
> குழந்துபின் சென்றவென் னெஞ்சு." [முத்தொள்ளாயிரம்]

இது அவலம்பற்றி நெஞ்சினை உறுப்புடையதுபோற் கூறிய பெண்பாற் கூற்று.

"உள்ளம் [1]பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல றீர்கஞ் செல்வா [2]மென்னும்" [நற்றிணை - உஅச]

என்றவழி உணர்வுடையது போல் இளிவரல் பற்றிவந்த தலைமகன் கூற்று.

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
[3]வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
[4]கண்களி பெறூஉங் கவின்பெறு காலை
யெல்வளை [5]நெகிழ்த்தோற் கல்ல லுறீஇயர்
சென்ற நெஞ்சஞ் செய்வினைக் குசாவா
தொருங்குவர னசையொடு வருந்துங் கொல்லோ
வருளா னாகலி னழிந்திவண் வந்து
தொன்னல னிழந்தவென் பொன்னிற நோக்கி
யேதி லாட்டி யிவளெனப்
போயின்று கொல்லோ நோர்தலை யிழந்தே." [நற்றிணை - ருசு]

இது உணர்வுடையது போல் இளிவரல் பற்றி வந்த தலைமகள் கூற்று.

"நின்மொழி கொண்டியானோ விடுவெனென் மொழிகொண்
[டொ]டன்னெஞ்ச மேவல் செயின்." [கலித் - ாயரு]

இது மறுத்துரைப்பது போல் தலைமகன் கூற்று: உவகைபற்றி வந்தது.

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது." [குறள் - கூஉகக]

இதுவும் மறுத்துரைப்பது போற் றலைவி கூற்று: இளிவரல் பற்றி வந்தது.

"இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்றவென் னெஞ்சு" [அகம் - ாஉக]

இஃது அச்சம்பற்றி வந்தது. பிறவு மன்ன.

சொல்லாமரபி னவற்றொடுகெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத் தடக்கியும் என்ப[தற்குச் செய்யுள்]—

"கானலுங் கழறாது கழனியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநீ யல்ல துறுதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் கழிசிறந்து
பறவை கிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால்." [அகம் - ாஎய]

என்பது தலைவிகூற்று. தலைவன்கூற்று வந்தவழிக் காண்க.

(பிரதி)—1. துணிகொண். 2. மெனினும். 3. வண்டுக்க நாற்ற மவள்கலந். 4. நெகிழ்த்தோ ரகல வரீஇயர்

அவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியதற்குச் செய்யுள்:—

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிறம்
நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ." [கலித் - ௱உக]

பிறவு மன்ன.

அறிவும் புலனும் வேறுபட நிறீஇ உவமவாயிற் படுத்தற்குச் செய்யுள்:—

"ஓங்கெழிற் கொம்பர் நுவலி தெனப்புல்லுங்
கார்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு
மாந்தளிர்க் கையிற் றடவரு மாமயில்
பூம்பொழி னோக்கிப் புகுவன பின்செல்லும்
தோளெனச் சென்ற துளங்கொளி வேய்தொடும்
நீள்கதுப் பிஃதென நீரற் றறல்புகும்
வாளொளி முல்லை முகையை முறுவலென்
றாள்வலி மிக்கா னஃதறி கல்லான்"

இவை இடையுங் கையு முதலாகிய வுறுப்புக்களைப் பற்றிய உவமவாயிற் படுத்தறியும் அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி யுவமம் பொருந்தியவழிக் கூறியவாறு காண்க. வேயைத் தோள்போலு மென்னுது தோளென்று தொட்டமையால் அறியப்படும் பொருள் வேறுபட்டது. அதனைத் திரியக் காண்டலால் அறிவு வேறுபட்டது. பித்துங் களியும் போல் முலையெனச் சென்று வேயைத்தொடும் என்னுது தோளெனச் சென்று வேயைத் தொட்டமையால் உவம மொன்றியவழி உவமவாயிற் படுத்தது. (உ)

௱கூ௩. கனவு முரித்தா லவ்விடத் தான.

என்-னின், இதுவுங் காமம் இடையீடுபட்டுழி வருவதோர் பொருள்வேறுபாடு உணர்த்திற்று.

மேற்கூறியவாற்றால் காமம் இடையீடுபட்டுழிக் கனாக் காண்டலு முரித்தென் வாறு.

இது தலைமகற்குந் தலைமகட்கு முரித்து.

"இன்னகை யினைய மாகவு மெம்வயி
னூடல் யாங்குவந் தின்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி
நறுங்கதுப் புளரிய நன்ன ரமை[ய]த்து
வறுங்கை காட்டிய வாயல் கனவி
னேற்றேக் கற்ற வலமரல்
போற்றா யாகலிற் புலத்தியா லெம்மே." [அகம் - ௩௯]

என்றது கனாக் கண்டு கூறியது.

"கேட்டிசின் வாழி தோழி யல்கற்
பொய்வ லாளன் மெய்யுறன் மரீஇ
வாய்த்தரு பொய்க்கன மருட்ட வேற்றெழுந்
தமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற வளியன் யானே." [குறுந் - ௩௰]

இது தலைவி கனாக் கண்டு கூறியது. (௩)

௱கககூ. தாய்க்கு முரித்தாற் போக்குடன் கிளப்பின்.

என்-னின், நற்றாய்க் குரியதோர் மரபு உணர்த்திற்று.

மேற்சொல்லப்பட்ட கனவு தாய்க்கும் உரித்து: உடன்போக்குக் கிளக்கப்பட்டுழி என்றவாறு. உதாரணம்:—

'கண்படை பெறேன் கனவ' [அகம் - ருரு]

எனவரும். வேறும் வந்தவழிக்காண்க. (ச)

௱ககஎ. பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே
நட்பி னடக்கை யாங்கலங் கடையே.

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுதனுதலிற்று.

பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்து என்பது—பான்மை கெழுமப்பட்டகிளவி [1]பெண்பாலா ராகிய நால்வர்க்கும் உரித்தென்றவாறு.

நால்வராவார்—தலைவி, தோழி, நற்றாய், செவிலி. அஃதேல் தலைமகளை யொழிய மூவர் என்று அமையாதோ எனின், மேல் தலைமகட்கும் உரித்தென்றார் அவரொடு கூட நால்வர் என வகையறுத்தல் என்பது.

நட்பி னடக்கை யாங்கலங் கடையே என்பது—நட்பின் வழங்கும் வழக்கல்லாதவிடத்து என்றவாறு.

அஃதாவது, தலைவியொடு தோழி யொழுகும் ஒழுக்கம் அவ்வழி யல்லாதவிடத்தென்றவாறு. [2]அவண்மாட்டு நிகழ்வது தலைவன் தோழிக்குணர்த்தாது பிரிந்தவழி என்று கொள்ளப்படும். பாற்கிளவி என்பது பயிலாதுவரும் ஒருகூற்றுச்சொல் எனப்பட்டது. அதனைக் கெழுமிய சொல் பால்கெழு கிளவி யாயிற்று. ஆண்டு நற்றாய் கூறியதற்குச் செய்யுள்:—

"கருமணற் கிடந்த பாவையென்
மருமக ளேயென முயங்கின ளழுமே." [அகம் - ௱சரு]

செவிலி கூறியதற்குச் செய்யுள்:—

"தான்றாயாக் கோங்கந் தளரா முலைகொடுப்ப
வீன்றாய்நீ பாவை யிருங்குரவே—யீன்றாள்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டாய் நீயெனக்கு வந்து." [திணைமாலை - சரு]

தோழிகூறியதற்குச் செய்யுள் வந்தவழிக்காண்க. (ரு)

௱கக அ. உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பி னால்வர்க்கு முரிய.

என்-னின், மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கு முரியதோர் பொருண்மை யுணர்த்திற்று.

உயிரும் நாணும் மடப்பமும் என்று சொல்லப்பட்டவை குற்றந் தீர்ந்த சிறப்பினை யுடைய தலைமகட்கும் தோழிக்கும் நற்றாய்க்கும் செவிலிக்கும் உரிய வென்றவாறு.

(பிரதி)—1. பெண்பாலா. 2. அவன்.

செயிர்தீர் சிறப்பி னென்றமையான் ஏனையோர் போலாது இவர் நால்வரும் ஒருநீர்மையர் என்று கொள்க. இதனற் சொல்லியது என்னை யெனின், இந்நால்வரும் ஆக்கமுங் கேடும் ஒருவர்மாட்டு வந்துழித் தமக்குற்றது போல் நினைப்பராதலான் ஒருவரை யொருவர் இன்றியமையாது ஒருயிர் போல்வர் எனவும், நாணமும் மடனும் நால்வர்க்கும் ஒக்குமாகலான் அ[வ]லமாகிய வழியும் வருத்தம் ஒக்கும் எனவும் கூறியவாறு. அதற்குச் செய்யுள்:—

"இவளே நின்னல 1திலளே யாயுங்
குவளை யுண்க ணிவளல திலளே
யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே."

என வரும். (சு)

ாகூகூ. வண்ணந் திரிந்து புலம்புங் காலை
யுணர்ந்தது போல வுறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே.

என்-னின், தலைமகட் குரிய தோர் பொருளுணர்த்திற்று.

தலைமகள் வண்ணம் வேறுபட்டுத் தனிமையுறுங் காலைத் தலைமகன் பிரிவைத் தன் உறுப்புக்கள் உணர்ந்தனபோலப் பொருந்தும்வகையாற் கூறவும் பெறும் என்றவாறு.

உம்மை எதிர்மறை.

"தணந்தமை சால வறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்." [குறள் - கூ உ ௩௩]

"தண்ணந் துறைவன் றுறந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை." [குறள் - கூ உ எ எ]

என வரும். (எ)

உா. உடம்பு முயிரும் வாடியக் கண்ணு
மென்னுற் றனகொ லிவையெனி னல்லதை[க்]
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

என்-னின், இது உடம்பும் உயிரும் மெலிந்த இடத்தும் இவை என்னுற்றன எனக் கூறினல்லது, கிழவோன் உள்வழிப் படர்தல் கிழத்திக்கு இல்லை என்றவாறு.

உதாரணம்:—

"கதுமெனத் தாநோக்கித் தாமே கலிழ்
மிதுநகத் தக்க துடைத்து." [குறள் - கூ ா எ ௩]

எனவும்,

(பிரதி)—1. திவளே வாயும்.

"ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிடர்ப்பட் டன." [குறள் - ௲௱எசு]

எனவும் வரும். (அ)

உ௱க. ஒருசிறை நெஞ்சோ டுசாவுங் காலை
யுரிய தாகலு முண்டென மொழிப.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

தனித்து நெஞ்சோடு உசாவுங்காலத்துக் கிழவோற்சேர்தல் உரியதாகலும் உண்டு என்றவாறு.

உம்மை எச்சவும்மை யாகலாற் றோழியொடு உசாதலுங் கொள்க.

"கோடீ ரிலங்குவளை நெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
யீங்கிவ ணுறைதலு முய்குவ மாங்கே
யெழுவினி வாழிய நெஞ்சே" [குறுந் - ௰க]

என வரும்.

"பகலே பலருங் காண நாண்விட்
டகல்வயிற் படப்பை யவனகர் வினவிச்
சென்மோ வாழி தோழி" [நற்றிணை - ௩௬ரு]

என்றது தோழியொடு உசாவியது. (கூ)

உ௱உ. தன்வயிற் கரத்தலு மவள்வயின் வேட்டலு
மன்ன விடங்க ளல்வழி யெல்லா
மடனொடு நிற்றல் கடனென மொழிப.

என்-னின், தலைமகட் கின்றியமையாத மடன்அழியும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

தலைமகன் தனதொழுக்கந் தலைமகள்மாட்டுக் கரந்து உணர்த்தும்வழியுந் தலைமகள் மாட்டுப் புணர்ச்சி வேட்கை தோற்றியவழியு மாகிய [வ]த்தன்மைப்பட்ட விடங்களல்லாதவழி யெல்லாந் [1]தலைமகள் மடனொடு நிற்றல் கடன் என்று சொல்லுவர் என்றவாறு.

தன்வயிற் கரந்தவழி மடனழிய நின்றதற்குச் செய்யுள்:—

"முத்தேர் முறுவலாய் நம்மலைப் பட்டதோர்
புத்தியானை வந்தது; காண யான் றங்கினேன்"

என்றவழி, அதற்குடம்படாது

"அவ்வியானை வனப்புடைத் தாகலுங் கேட்டேன்" [கலித் - ௬எ]

என்றவழி, பொய்கூறினான் என்னுங் [2]கருத்தினளாகிக் கூறுதலின் மடனழிதலாயிற்று.

---

(பிரதி)—1. தலைமகன். 2. கருத்தினராகிக்.

"கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி [1]மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க் [2]கொத்தனிர் நீயி ரிஃதோ
செல்வர்க் கொத்தனம் யாமென மெல்லவென்
மகன்வயிற் பெயர்[த]ந்த[ெ]னனே" [அகம் - உ௬]

என்றவழி வேட்கை தணிதலாகாதாள் அது தணியுந்துணையு முயங்காது, கவவுக்கை நெகிழ்ந்ததெனப் பெயர்தல் மடனழிதலாயிற்று. (௰)

உ௱௩. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
யறத்தியன் மரபில டோழி யென்ப.

இது அறத்தொடுநிற்கு நிலைமரபு உணர்த்திற்று. தலைவி அறத்தொடு நிற்குங் காலத்தன்றித் தோழி தானே அறத்தொடு நிற்கும் மரபு இலள் என்றவாறு.

தலைவி அறத்தொடு நிற்குமாறு:—

"வீழ்ந்த மாரிப் பெருந்தண் சாரற்
கூதிர்க் கூதலத் தலரி நாறு
மாதர் வண்டி னயவருந் தீங்குரன்
மணநாறு சிலம்பி னசுண மோர்க்கு
முயர்மலை நாடற் குரைத்த லொன்றோ
துயர்மருங் கறியா வன்னைக் கிந்நோய்
தணியுமா றிதுவென வுரைத்த லொன்றோ
செய்யா யாதலிற் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த
செயலை மருதளி ரன்னவென்
மதனின் மாமைப் பசலையுங் கண்டே." [நற்றிணை - உ௪௪]

என வரும். தோழி யறத்தொடு நிற்[றல் வரு]கின்ற சூத்திரத்தாற் கூறுப. (௰௧)

உ௱௪. எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுத லுசாஅத லேதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇய
வேழு வகைய வென்மனார் புலவர்.

என்-னின், இது தோழி யறத்தொடு நிற்குமாறு உணர்த்திற்று.

இதற்குப் பொருள் களவியலுள் தோழிகூற்று உரைக்கின்றுழி உரைக்கப்பட்டது. (௰௨)

உ௱௫. உற்றுழி யல்லது சொ[ல்]ல லின்மையி
னப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப.

என்-னின், இது செவிலிக் குரியதோர் மரபுணர்த்திற்று

காமம் மிக்கவழி யல்லது சொல்நிகழ்ச்சி யின்மையின் தலைமகள் தான்கருதிய பொருண்மேல் வேட்கை [யைத்] தலைமகடன்னுனே யறிவர் என்றவாறு.

---

(பிரதி)—1. மகவுடைச். 2. கொத்தநீர் நிநீஇயதோர்.

பன்மையாற் கூறினமையால் அவ்வுணர்ச்சி செவிலிக்கும் நற்றாய்க்கும் ஒக்கும் என்றவாறு.

இதனாற் சொல்லியது அறத்தொடு நிற்பதன் முன்னம் செவிலி குறிப்பினான் உணரும் எனக் கொள்க.

"அன்னாய் வாழி வேண்டன்னை நின்மகள்
பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி" [அகம் - ௪௮]

என்றவழிச் செவிலி குறிப்பினான் உணர்ந்தவாறு காண்க. வேட்கைதோற்றத் தலைமகனில்லாதவழித் தோழிகூற்று நிகழும். அது "காமர் கடும்புனல்" [கலித் - ௩௯] என்னும் பாட்டினுள் காண்க. (௰௩)

உ௱௬௬. செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு
மறிவு மருமையும் பெண்பா லான.

என்-னின், இது பெண்டிர்க் குரியதோர் இயல்புணர்த்திற்று.

செறிவு என்பது—அடக்கம்.

நிறைவு என்பது—அமைதி.

செம்மை என்பது—மனங்கோடாமை.

செப்பு என்பது—சொல்லுதல்.

அறிவு என்பது—நன்மை பயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிதல்.

அருமை என்பது—உள்ளக் கருத்தறிதலருமை. இவை எல்லாம் பெண்பக்கத்தன என்றவாறு.

இதனாற் சொல்லியது மேற்சொல்லிய அறத்தொடுநிலைவகை இனிக்கூறுகின்ற வரைவு கடாதற்குப் பகுதியும் உண்மைவகையானும் புனைந்துரைவகையானும் கூறுங்கால் இவை பேதையராகிய பெண்டிர்க்கு இயையுமோ என ஐயுற்றார்க்குக்கூறப்பட்டது. (௰௪)

உ௱௬௭. பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலுந்
தன்னை [1]யழிதலு மவணா றஞ்சலு
மிரவினும் பகலினும் நீவா வென்றலுங்
கிழவோன் றன்னை வார லென்றலு
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த வன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப.

என்-னின், இது தோழி கூற்றிற் கூறப்பட்ட சில கிளவிக்குப் பயன்உணர்த்திற்று. தலைமகன் வருகின்ற பொழுதும் நெறியும் ஊரின்கட் காவலும் என்று சொல்லப் பட்டவற்றின்கண் வரும் தப்பினால் உளதாகுங் குற்றங் காட்டலும், தான் மனனழிந்து கூறலும், தலைமகட்கு வருமிடையூறு கூறலும், தலைமகளைப் பகற் குறிவிலக்கி இரவுக்குறி

(பிரதி)—1. யறிதலு.

நீ வா என்றலும், இரவுக்குறிவிலக்கிப் பகற்குறி நீ வா என்றலும், தலைமகனை வாரா தொழியெனக் கூறலும், நன்மையாகவுந் தீமையாகவும் பிறபொருளை எடுத்துக்கூறலும், இத்தன்மையவாகிக் குற்றம் பயப்ப வந்த வத்தன்மைய பிறவும், புணர்ச்சி விருப்ப மின்மையாற் கூறப்பட்டனவல்ல: வரைதல்வேண்டும் என்னும் பொருளையுடைய என்றவாறு.

இவையெல்லாந் தோழி கூற்றினுள் கூறப்பட்டன. ஆயின் ஈண்டோதிய தென்னை எனின், அவை வழுப்போலத் தோற்றும் என்பதனைக் கடைப்பிடித்து அன்பிற்கு மாறுகாது ஒருபயன்படவந்த தென வுணர்த்துதலே ஈண்டு ஓதப்பட்ட தென்ப. நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும் என்பது நாடும் ஊரும் இல்லுங் குடியும் என ஆண்டோதப்பட்டது. இவை வரைதல் வேட்கைப் பொருளவாமாறும் ஆண்டுக் காட்டப்பட்ட உதாரணத்தான் உணர்க. (௰௫)

உ௱அ. வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தன்
மரீஇய மருங்கி னுரித்தென மொழிப.

என்-னின், இதுவும் தலைமகட்குந் தோழிக்கும் உரியதோர் இயல்புணர்த்திற்று.

வரைதல் வேட்கைப் பொருளாற் கூறுதலை மறுத்துப் பட்டாங்கு கூறிச்சொல்லுதல் மருவிய பக்கத்தி னுரித் தென்றவாறு. மருவியபக்கமாவது களவொழுக்கம் நீட்டித்த விடம். அவ்வழிப்பட்டாங்கு கூறுலும் ஆம் என்றவாறு. எனவே மேற்கூறியவாறுகூறுதல் மருவாதவழி என்றவாறும்.

"கொ[டி]ச்சி யின்குரல் கிளை[செ]த் தடுக்க[த்து]ப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
க[ா]வலுங் கடியுநர் போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மே." [ஐங்குறு - உஅகூ]

என வரும். (௰௬)

உ௱கூ. தேரு மியானையுங் குதிரையும் பிறவு
மூர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப.

என்-னின், இது தலைமகற்குரிய தோர் மரபுணர்த்திற்று.

களவுகாலத்துத் தேரும் யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்து சேறலும் உரியர் என்றவாறு. களவின்கண் என்பது அதிகாரத்தான் வந்தது.

"நெடுந்தேர் கடாஅய்த் தமியராய் வந்தோர்
கடுங்களிறு காணீரோ வென்றீர்—கொடுங்குழையார்
யானை யதருள்ளி நிற்பரோ தம்புனத்
தேனல் கிளிகடிகு வார்.

பிறவு மன்ன.

'ஊர்ந்தன ரியங்கலு முரியர்' என்றமையால் தனி வருதல் பெரும்பான்மை. இத்தனை எச்ச வும்மையாக்கி வையமூர்தலும் இளையரோடு வருதலுங் கொள்க.

"வல்வே விளையரொ [டெ]டல்வி[ச்] செல்லாது" [அகம் - ௱உ௰]

என வரும்.

பிறவுமன்ன. இதனுஞ் சொல்லியது பெரியார் இவ்வாறு செய்வார் எனவுங்கூறியவாறும். (௰௭)

உ௱௰. உண்டற்குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே.

என்-னின், இது ஒருசார் வழுவமைத்தலை நுதலிற்று.

உண்டற்றொழிலுக் குரியவல்லாத பொருளை யுண்டனவாகக் கூறலும் மரபென்ற வாறு.

'பசலையா லுணப்பட்டு பண்டைநீ ரொழிந்தக்கால்' [கலித் ௰௫]

எனவும்,

'நீலமுண்ட துகில்'

எனவும்,

"கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்கா[ண] லுற்று." [குறள் - ௲௨௪௪]

எனவும் வரும்.

இது சொல்லின்கட் கிடந்ததோ ரொழுபு. (௰௮

உ௱௰௧. பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக்கை[ம்] மிகுத லுண்மை யான
[அன்பே யறனே யின்ப நாணொடு
துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலி
னொன்றும் வேண்டா காப்பி னுள்ளே.]

என்-னின், இது களவுக் காலத்துத் தலைமகற் குரியதோர் இயல்புணர்த்திற்று.

பொருள்வயிற் பிரிதல்வேண்டும் எனக்கூறுதலும் கடியப்படாது: தலைமகளைத் தமர் காக்குங்காவல் மிகுதியுள்ளவழி யிவைநீங்கப்பெறும் என்றவாறு.

இதனாற் சொல்லியது அன்பையும் அறத்தையும் இன்பத்தையும் நினைத்து வருந் தப்பெறான் எனவும் நாணத்தைக் கைவிட்டுத் தமர்கொடுக்குமாறு முயலவேண்டுமென் பதூஉம் கூறியவாறும். இவை ஒருவழித் தணத்தற்கண் நிகழ்வன. (௰௯)

உ௱௰௨. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.

என்-னின், இதுவும் தலைமகற்குரியதோர் திறன் உணர்த்திற்று.

தலைமகன் பொருள்வயிற் பிரியும்வழி உடன்போக்குக் கருதிய தலைமகட்கு யான் போகின்ற நெறி கல்லுங் கரடுமாகிய சுரம் எனக்கூறுதலும் நீக்கப்படாது என்றவாறு. இதனாற் சொல்லியது காப்பு மிகுதிக்கண் வருத்தமுறுந் தலைமகளை யுடன்கொண்டு போதல் தக்கது என்பார்க்கு நெறியருமை கூறி விலக்கவும் பெறும் என்றவாற. (உ௰)

உ௱௰௩. உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.

என்-னின், இதுவு மோர் மரபு உணர்த்திற்று.

உயர்ந்தோர்கூற்று வழக்குவழிப்படுதலின் வழக்குப்படுதல் செய்யுட்குக் கடன் என்றவாறு.

எனவே வழக்கழியவருவன செய்யுட்கண் வரப்பெறா என்றவாறு. இதனானே மேலதிகாரத்திற் கூறிய சொல்லும் இவ் வதிகாரத்திற் கூறுதற் கியன்ற பொருளும் வழக் கொடு புணர்ந்தனவே செய்யுட்கண் வருவன; புணராதன செய்யுட்கண் வரப்பெறா என்றவாறும். இன்னும் இந்நூலகத்து அகப்பொருளாகவும் புறப்பொருளாகவும் எடுத் தோதப் பட்டதன்றி உயர்ந்தோர் வழக்கொடுபொருந்தி வருவனவெல்லாஞ் செய்யுட்குப் பொருளாகப் புணர்க்க என வெஞ்சிய துணர்த்தியவாறு மாம். உயர்ந்தோர் வழக்கென் றமையானும், பொருளுமின்பமும் கொடாமல் மூன்றினுளொன்று பயப்பக்கூறுதல் கொள்க. (உக)

உ௱௰௪. அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே
வழக்கென வழங்கலும் பழித்த தென்ப.

என்-னின், மேலதற் கோர் புறனடை.

அறத்திற் கழிவுடையன பொருட்குப் பயன்படவரின் அதனை வழக்கென்று வழங்குதலும் பழித்த தென்றவாறு.

பொருளாவது அகப்பொருளும் புறப்பொருளும். அறத்திற் கழிவு வரும் அகப்பொ ருளாவது பிறன்மனைக் கூட்டம். பொருட்பயன் வருதலாவது அவராலே பொருள் பெறுதல். அவ்விடத்து இன்பமும் பொருளும் பயப்பினும் அதனை வழங்குதலும் பழிக்கப் பட்டதென்றவாறு. உம்மை முற்றும்மையாகலான் வழக்கென் றுரையற்க என்றவாறு.

"எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்." [குறள் - ௱௪௪]

என வரும்.

புறப்பொருட்கண் அறக்கழி வுடையன பகைவர்தேஎத்து நிரைகோடலும் அழித் தலும் போலப் பொருட்பயன் காரணத்தான் நட்டோர் தேஎத்துஞ் செயல். இவையும் பொருள் பயப்பினும் வழக்கென வழங்குத லாகா என்றவாறு. இதுவு மோர்முகத்தான் நீதி கூறியவாறு.

"பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை." [குறள் - ௬௫௭]

எனவரும். (உஉ)

உ௱௰௫. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரி[யா] நல்வழிப் படுத்தே.

என்-னின், இதுவு மது.

மிக்கபொருளாவது மேற்கூறப்பட்ட அகப்பொருள். அப்பொருட் கண்ணும் நாண் நீங்காத நல்வழிக்கட் படுத்துப் பொருள்வகை புணர்க்க என்றவாறு. எனவே அற முதலாயின வழுவின் றாயினும் நாணழிய வரும் பொருண்மை [1]புணர்த்தற்க என்றவாறு.

"பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து." [குறள் - ௲௰௮]

என வரும். (உ௩)

(பிரதி)—1. புணர்க்க

உ௱௰௬. முறைப்பெயர் மருங்கி[ன]ற் கெழுதகைப் பொதுச்சொ
னிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே.

என்-னின், இதுவும் வழுவமைத்தலை நுதலிற்று.

முறைப்பெயராவது—இயற்பெயர் முதலிய பெயரானன்றி முறைமைபற்றி வருவது; அது தந்தைமகனைக் கூறும்பொழுது தம்முன், தம்பி, [என்பனவும்] கிழவன் தோழன் [1]என்பனவும் போல வருவன.

அப்பெயரகத்துவரும் நன்றாகிய கெழுதகைப் பொதுச்சொல் லாவது—பயிற்சியாற்கூறும் 'எல்லா' என்பது.

நிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே என்பது—நிற்றற்குரிய மரபினானே யிருபாற்கு முரித்தென்றவாறு. நிற்றற்குரிய மரபின் என்பது இவ்வாறு தோற்றுமையான் என்றவாறு.

"எல்லாவிஃதொத்தனெ[ன்]பெறுன் கேட்டைக்காண்" [கலித்-௬௧]

என்றவழிப் பெண்பான்மேல் வந்தது.

"எல்லா, தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று." [கலித் - ௬௨]

என்[றவழித் தலைமகன்மேல் வந்]தது.

இதுவும் ஒரு சொல்வழு அமைத்தவாறு. இச் சொற் காமப்பொருளாகத் தோற்றுதலாற் சொல்லதிகாரத்து ஓதாது ஈண்டு ஓதப்பட்டது. (உ௬)

உ௱௰௭. தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
வெம்மென வரூஉங் கிழமைத் தோற்ற
மல்ல வாயினும் புல்லுவ வுளவே.

என்-னின், இதுவும் ஒருசார் மரபுவழு வமைத்தலை நுதலிற்று.

தாயத்தான் எய்துதலாவது தந்தைபொருள் மகற்குறுதல். ஈயச் சேறலாவது ஒருவன் கொடுப்ப ஒருவன் கோடல். வினைவயிற் றங்கலாவது உழவுமுதலியன வற்றான் வருதல். வீற்றுக்கொளப் படுதலாவது வேறுபடுத்திக் கோடல்; அஃதாவது பகையினால் வந்தது கோடல். இந்நான்கினும் வரும் பொருளினது உரிமை[த்]தோற்ற மல்ல வாயினும் பொருந்துவ வுள என்றவாறு.

செய்யா என்னும் வினை யெச்சம் வரூஉம் என்னும் பெயரெச்சத்தொடு முடிந்தது. அன்றியும் செய்யா என்பதனைப் பெயரெச்ச எதிர்மறையாக்கி இந்நான்கினும் வருந்தகவு இல்லாதபொருள் பொருளலவாயினும் எம்மெனவரும் உரிமைத்தோற்றம் பொருந்துவ வுள என்றவாறு.

அல்லவாயினும் என்பதனை மாறிக்கூட்டுக. எனவே ஒரு முகத்தாற் பொருள் தேடுவார் திறன்கூறினாருமாம். இனி அக் கிழமை[ம]த் தோற்றம் ஆவது:

"விரும்பினீ, யென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்" [கலித் - ௰௮]

(பிரதி)—1. என்றாற்.

என்றவழித் தலைமகள் தோளைத் தோழி தன்னையுமுளப்படுத்தி எனதெனக் கூறியவாறு. காண்க. பிறவுமன்ன. (உ௫)

உ௱மஅ. ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவகை தாமே வழக்கென மொழிப.

என்-னின், இதுவு மொருசார் பொருள்கொளுந்திறன் உணர்த்துதல்நுதலிற்று.

ஒருபக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக் கண்ணும் வருவகைதாம் வழக்கு நெறி என்றவாறு.

மனையோள்மாட்டுங் காமக்கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும் பிரிவும் ஊடலும் பரத்தையர் மாட்டு நிகழும். அது வருமாறு:—

'அன்னை கடுஞ்சொ லறியாதான்' [கலித்-கூஎ] என்னுங் கலியுள்,

"சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
வவ்வழி யென்றும்யான் காண"

என்பது புணர்வு குறித்துவந்தது.

"உள்ளுதொறு நகுவ ரேழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
றேங்கம ழைம்[பால்] பற்றி யெம்வயின்
வான்கோ லெல்வளை வவ்விய [1]பூசற்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்ப லென்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநெறி வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின்
[2]மண்ணுார் கண்ணி னதிரு
[3]நன்ன ராளன் நடுங்களுர் நிலையே." [நற்றிணை - ௱]

இது ஊடல் குறித்து வந்தது. இப் பரத்தையர் பொருட்பெண்டி ராகலின் இன்பம் பயக்குமோ எனின், அஃது இன்பமாமாறு வருகின்ற சூத்திரத்தான் எல்லாப் பொருட்கும் உளதாகும் பொதுவிலக்கணம் கூறியவாறு. (உ௬)

உ௱மகூ. எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது
தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

எல்லாவுயிர்க்கும் இன்பமென்பது தான் மனம்பொருந்திவரும் விருப்பத்தை யுடைத்து என்றவாறு. எனவே மனம்பொருந்தியவழிப் பரத்தையர் மாட்டும் இன்பமுளதாகும் எனவும் பொருந்தாதவழி மனைவியர்மாட்டும் இன்பமின்றாம் எனவும் கொள்க.(உஎ)

உ௱உ௰. பரத்தை வாயி னால்வர்க்கு முரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

(பிரதி)—1. வூசற். 2. மன்ணுர்க். 3. நன்னளா.

என்-னின், பரத்தையிற் பிரிவிற்கு உரியாரை யுணர்த்துதல் நுதலிற்று.

பரத்தையர்மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம்பெயர்தல் இல்லை என்றவாறு.

எனவே, தன்னூரகத்துஞ் சார்ந்தவிடமுங் கொள்க. நால்வர்க்கும் உரித்து என்றமையான் நான்குவருணத்துப் பெண்பாலாரும் அவளொடு ஊடப்பெறுப என்றவாறுமாம்.

"யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" [கலித் - அக]

என்பது பார்ப்பனி கூற்று.

"பெரியார்க் கடியரோ வாற்று தவர்" [கலித் - அ௮]

என்பது அரசி கூற்று. (உ௮)

உ௱உக. ஒருதலை யுரிமை வேண்டினு மகடூஉப்
பிரித லச்ச முண்மை யானு
மம்பலு மலருங் களவுவெளிப் படுக்குமென்
றஞ்ச வந்த வாங்கிரு வகையினு
நோக்கொடு வந்த விடையூறு பொருளினும்
போக்கும் வரைவு மனைவிகட் டோன்றும்.

என்-னின், இது களவின்கண் தலைமகட்குரியதோர் மரபு உணர்த்திற்று.

ஒருதலையுரிமை வேண்டினும் என்பது—ஒருதலையாகத் தலைமகள் உரிமை பூண்டலை வேண்டியவிடத்து மென்றவாறு.

மகடூஉப் பிரித லச்ச முண்மை யானும் என்பது—பிரிதற்கண் வரும் அச்சம் பெண்பாற்கு இயல்பாகு மென்றவாறு.

அம்பலு மலரும் களவுவெளிப் படுக்குமென் றஞ்ச வந்த வாங்கிரு வகையினும் என்பது—களவொழுக்கத்தை வெளிப்படுக்குமென்று அஞ்சும்படியாக வந்த அம்பலும் அலருமாகிய இருவகையின் கண்ணும் என்றவாறு.

நோக்கொடு வந்த விடையூறு பொருளினும் என்பது—தலைமகன் வரவுபார்த்திருந்தவழி வந்த இடையூறுகிய பொருளின் கண்ணும் என்றவாறு.

அவையாவன:—தாய்துஞ்சாமை நிலவுவெளிப்படுதன் முதலியன.

போக்கும் வரைவு மனைவிகட் டோன்றும் என்பது—தலைமக ளுடன்போதற் குறிப்பும் வரைவுகடாதற் குறிப்பும் மனைவிமாட்டுத் தோன்றும் என்றவாறு.

உதாரணம்:—

"சிலரும் பலரும் கட்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச்
சிறுகோல் வலத்த ளன்னை யலைக்க
வலந்தனென் வாழி தோழி [1]கானற்
புதுமலர் தீண்டிய பூணுறு குரூஉச்சுவற்
கடுமான் பரிய கதழுளி கடைஇ
நடுநாள் வரூஉ மியறேர்க் கொண்கனொடு

(பிரதி)—1. சாரற்.

செலவயர்ந் திசினல் யானே
யலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே." [நற்றிணை - ௱௬௪]

இது போக்குக்குறித்தது. 'இரும்பிழி மகாஅர்' என்னும் பாட்டு வரைவு குறித்தது. (௨௪)

௨௱௨௨. வருத்த மிகுதி சுட்டுங் காலை
யுரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்.

என்-னின், இது தலைமகட்குந் தோழிக்கு முரியதோர் திறன் உணர்த்திற்று.

வருத்தமிகுதியைக் குறித்தவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் உரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

எனவே வருத்தமிகுதியைச் சுட்டாதவழி மனைவாழ்க்கையுள் இரக்கம் இன்றெனக் கொள்ளப்படும்.

"செல்லாமை யுண்டே லெமக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை." [குறள் - ௲௱௫௧]

"அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
[1]யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்கு [2]நின்செம்மல் சிதை[ய]த்
தவலருஞ் செய்வினை முற்றாமை யாண்டோ
ரவலம் படுதலு முண்டு." [கலித்-௰௪]

இதுவு மோர் மரபுவழு வமைத்தது. (௩௰)

௨௱௨௩. மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு
நினையுங் காலைப் புலவியு ளுரிய.

என்-னின், கற்புக்காலத்துத் தலைமகட் குரியதோர் மரபு உணர்த்திற்று.

தலைமகள் உயர்வும் தலைமகன்தாழ்வும் ஆராயுங்காலத்துப் புலவிக்காலத்து உரிய வென்றவாறு.

எனவே [3]ஒழிந்த ஊடல் துனிவென்பனவற்றிற் குரியவாம்.

"ஒரூஉக் கொடியிய னல்லார் குரனுற்றத் தேற்ற
முடியுதிர் பூந்த[ா]து மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரைப் பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்
கடியதமக்கினி, யார்சொலத் தக்கரா மற்று
வினைக்கெட்டு [4]வாயல்லா வெண்மை யுரையாதி சென்றீநின்
மாய மருள்வா ரகத்து.

ஆயிழாய், நின்கண் பெறினல்லா வின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு." [கலித் - அஅ]

(பிரதி)—1. யெனறிதமை. 2. நிரைசெம்மல். 3. ஒழித்த. 4. வாயெல்லா.

இதனுள் தலைமகன் பணிவுந் தலைவி யுயர்வுங் காண்க. இஃதீண்டுக் கூறிய தென்னை? 'காமக் கடப்பினுட் பணிந்த கிளவி'[கற்பியல்-௰௧] யென மேற்கூறப்பட்டதா லெனின், ஆண்டுக் கூறிய[து] ஊடல் புலவி துனி யென்னு மூன்றிற்கும் பொதுப்பட நிற்றலின், இது புலவிக்கே உரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு காண்க. (௩௧)

உ௱உ௪. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

என்-னின், இதுவு [மோர் மரபுணர்த்திற்று.]

கற்புக்காலத்து நிகழாநின்ற தகையின் பக்கத்து வேட்கைமிகுதியாற் புகழ்தலை நீக்கார் என்றவாறு.

களவுக்காலத்து நலம்பாராட்டிய தலைமகன் கற்புக்காலத்து [1]மெழினலம் பாராட்டப் பெறும் என்றவாறு.

தகை என்பது அழகு. அதனைப் பற்றிப் புகழும் எனக் கொள்க.

"அணைமரு ளின்றுயி லம்பணைத் தடமென்றோட்
டுணைமல ரொளிநீலத் தேந்தெழின் மலருண்கண்
[மண]மௌவன் முகையன்ன மாநிரை வெண்பன்
[2]மணநாறு நறுந்தண் மாரி மிளிருங் கூந்த
லலர்முலை யாகத் தகன்ற வல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி" [கலித் - ௰௪]

என வரும். (௩௨)

உ௱உ௫. இறைச்சி தானே யுரிப்புறத் ததுவே.

என்-னின், இறைச்சிப்பொருளாமா றுணர்த்திற்று.

இறைச்சிப்பொருளென்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும் பொருள் என்றவாறு.

அஃதாவது கருப்பொருளாகி[ய] நாட்டிற்கும் ஊர்க்குந் துறைக்கும் அடையாகி வருவது.

"[நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே] சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே" [குறுந் - ௩]

என்றவழி நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவுந் தேனும் இறைச்சிப் பொருள் என்று கொள்க. (௩௩)

உ௱உ௬. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே.

(பிரதி)—1. மொழிநலம். 2. மணநாறு.

என்-னின், இது இறைச்சிப் பொருள்வயிற் [பிறக்கும்] பிறிது மோர்பொருள் உணர்த்துதல் நுதலிற்று.

இறைச்சிப் பொருள்வயிற் றோன்றும் பொருளும் உள, பொருட்டிறத்தியலும் பக்கத்து ஆராய்வார்க் கென்றவாறு.

இறைச்சிப் பொருள் பிறிதுமோர் பொருள் கொள்க் கிடப்பனவுங் கிடவாதனவு மென இருவகைப்படும். அவற்றிற் பிறிதோர் பொருள்பட வருமாறு:—

"ஒன்றே னல்லெ னொன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாழ் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய்ய மலரு நாடனே
டொன் [றேன்]றோழி யொன்றி னானே." [குறுங் - ௨௱௮]

என்பது வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்தவழித் தலைமகனோடு ஒன்றுமாறு என்னெனக் கவன்ற தோழி[க்கு] உடன்போதற் குறிப்பினளாய்த் தலைமகள் கூறியதாதலின், இதனுட் பொருகளி றென்றமையால் தலைமகள்தமர் தலைமகன்வரைவிற் குடன்படு வாரும் மறுப்பாருமாகி மாறுபட்ட தென்பது தோற்றுகின்றது. 'பொருகளிறு மிதித்த வேங்கை' யென்றதனாற் பொருகின்ற விரண்டுகளிற்றினும் மிதிப்ப தொன்றாகலின் வரை வுடன்படாதார் தலைமகனை யவமதித்த வாறு காட்டிற்று. 'வேங்கை நின்று கொய்யமலரும்' என்றதனான் முன்பு ஏறிப்பறித்தல் வேண்டுவது இப்பொழுது நின்று பறிக்கலாயிற்று என்னும் பொருள்பட்டது. இதனானே பண்டு நமக்கரியனாகிய தலைமகன் றன்னை யவமதிக்கவும் நமக்கெளியனாகி யருள் செய்கின்றானெனப் பொருள் கொளக் கிடந்த வாறு காண்க. (௩௪)

௨௱௨௭. அன்புறு தகுவன விறைச்சியிற் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

என்பது [சூத்திரம்.] என்-னின், இது இறைச்சிப்பொருளாற் படுவதோர் பொருள் உணர்த்திற்று

அன்புறுதற்குத் தகுவன விறைச்சிப் பொருட்கட் சுட்டுதலும் வற்புறுத்தலாம் என்றவாறு. உம்மை இறந்தது தழீஇயிற்று.

"அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே [கனங்குழாய் காடென்றா ரக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு] முரைத்தனரே."
[கலித் - ௰௧]

என்றது வற்புறுத்தற் குறிப்பு. (௩௫)

௨௱௨௮. செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவு
மெய்பெற வுணர்த்துங் கிழவி பாராட்டே.

என்-னின், இது தலைமகட்குரிய தோர் இயல்புணர்த்துதல் நுதலிற்று.

தலைமகன் பொருள்வயிற் பிரியு மிடத்து அறினனமையா னுளதாகிய அச்சமும்

வினைவயிற் [பிரிவும்] பிரியுங் காலத்தினுந் தலைவியைப் பாராட்டிப் பிரிதலினால், அப் பாராட்டினான் மெய்பெறவுணரும் என்றவாறு.

உதாரணம்:—

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி" [கலித் - உ௪]

என்றமையாற் பாராட்டினால் தலைமகள் பிரிவு உணர்ந்தவாறு அறிக. (௩௬)

௨௱௨௬. கற்புவழிப் பட்டவள் பரத்தைமை யேத்தினு
முள்ளத் தூட லுண்டென மொழிப.

என்-னின், இதுவு மது.

கற்புக் காரணமாகத் தலைமகனது பரத்தைமைக் குடன்பட்டாளே யாயினும், உள்ளத்தின்கண் ஊடல் நிகழும் என்றவாறு. (௩௭)

௨௱௩௰. கிழவோள் பிறள்குண மிவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கு முரியள்.

என்-னின், இது தலைமகட் குரிய தோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

தலைவி மற்றொருத்தி குணம் இத்தன்மையள் எனச்சொல்லித் தலைமகன் குறிப்பினை யறிதற்கு முரியள் என்றவாறு.

இது கற்பியலுட் கூறியதற் கிலக்கணம்.

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே." [ஐங்குறு - ௱௨௨]

என வரும். பிறவு மன்ன. (௩௮)

௨௱௩௧. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு
மெய்ம்மை யாக வவர்வயி னுணர்ந்துந்
தலைத்தாட் கழறறம் மெதிர்ப்பொழு தின்றே
மலிதலு மூடலு மவையலங் கடையே.

என்-னின், இது தலைமகட்குரிய தோர் மரபுணர்த்திற்று.

பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகட்குக் கூறியவழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்துவைத்துந் தலைமகன்மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்ட பொழுது இல்லை, மகிழ்ச்சியும் புலவியும் அல்லாத காலத்து என்றவாறு.

கூறினும் என்ற உம்மை எதிர்மறை. கூறாமை பெரும்பான்மை. அதனை ஐயப்

படாது துணிதலான் மெய்ம்மையாகவென்றார். அதனைத் தலைமகன் வந்தவழிக் கூறுவாளாயிற் றனக்குப் புணர்ச்சியிற் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறியவதனாற் பயனில்லையாம். அதனைக் கலவியிறுதியினும் புலவியினும் கூறப்பெறும் என்றவாறு.

"நின்னணங் குற்றவர் நீசெய்த கொடுமைக
ளென்னுட னெண்ணுவர் துரையாமை பெறுகற்பின்" [கலித் - எ௭]

எனப் புலவியிற் கூறியவாறு காண்க.

கலவியிறுதியிற் கூறுதல் வந்தவழிக் [காண்க.] (௩௧)

உ௱௩உ. பொழுதுதலை வைத்த கையறு காலை
யிறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்த மருட்கை மிகுதியொ
டவைநாற் பொருட்க ணிகழு மென்ப.

என்-னின், இது பருவம் வந்துழித் தலைமகட் குரியதோர் வழுக்காத்தலை நுதலிற்று.

பொழுது தலைவைத்த லாவது—யாதானு மொரு பருவத்தைக் குறித்தவழியப் பருவம் இருதிங்களை யெல்லையாக வுடைத்தாயினும் அது தோற்றியவழி என்றவாறு.

கையறு காலை என்பது—இது கண்டு செயலற்றகாலை என்றவாறு.

இறந்தபோலக் கிளத்த லாவது—அக்காலந் தோன்றிய பொழுது கழிந்தது போலக் கூறுதல்.

மடனே வருத்தம் மருட்கை மிகுதியோடு அவை நாற்பொருட்கண் நிகழும் என்ப என்பது—அவ்வாறு கூறுதல் அறியாமையானுதல் வருத்தத்தானுதல் மயக்கத்தானுதல் அக்காலத்திற் குரிய பொருள் மிகத்தோன்றுதலானுதல் என இந்நான்கு பொருளானும் நிகழும் என்றவாறு.

சிறுபொழுதாயின் யாமங் கழிவதன்முன்னர்க் கூறுதல். எனவே இவ்வாறு வருஞ் செய்யுள் காலம் பிழைத்துக் கூறுகின்றதல்ல வென்றவாறு.

உதாரணம்:—

"பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற்
றிருவிலங் கூன்றிறற் றீம்பெய றாழ
வருது மெனமொழிந்தார் வாரார்கொல் வானங்
கருவிருந் தாலி நகும்." [கார்நாற் - க]

இது பருவங்கண்டவழி வாரார்கொல் என்றமையால் இறந்தபோலக் கிளந்த வாறாயிற்று. பிறவு மன்ன. இதுவு மோர் மரபுவழு வமைத்தல். (௩௨)

உ௱௩௩. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே,

என்-னின், களவுக்காலத்துத் தோழிக்குரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இரந்து குறையுற்ற தலைமகனைத் தோழி நிரம்பநீக்கி நிறுத்தலன்றி மெய்ம்மை கூறுதலும் பொய்ம்மைகூறுதலும் நல்வகையுடைய நயத்தினாற் கூறியும் பல்வகையானும் படைத்து மொழிந்து சொல்லவும் பெறும் என்றவாறு.

உதாரணம் களவியலுட் காட்டப்பட்டனவுள்ளுங் காண்க. நல்வகையுடைய நயத்திற்குச் செய்யுள்:—

“வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
யவையினும் பலவே சிறுகருங் காக்கை
யவையினு மவையினும் பலவே குவிமட
லோங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
தூங்கணங் குரீஇக் கூட்டுவாழ் சினையே.”

இது மடலேறுவல் என்ற தலைவனைப் [1]பழித்து அருளுடையீராதலான் மடலேறுவது அரிது என நயத்திற் கூறியது.

இதுவு மோர் மரபுவழு வமைத்தவாறு. (௩௧)

௨௭௩௪. உயர்மொழிக் கிளவி யுறழுங் கிளவி
ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே.

என்-னின், தலைமகற்குந் தலைமகட்கு முரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உயர்த்துச் சொல்லுதற்குரிய கிளவி தலைமகற்குந் தலைமகட்கு மொத்தகிளவி; ஐயக்கிளவி தலைமகற்கே உரித்தென்றவாறு.

தலைவிமாட்டு ஐயக்கிளவி யின்றென்றவாறும். அதனாற் குற்ற மென்னையெனின், தெய்வமென்று ஐயுறுங்கால் அதனை முன்பு கண்டறிவாளாதல் வேண்டும். காணாமையின் ஐயமிலள் என்க. இனி உயர்த்துச் சொல்லுதல் உளவாம்.

“அவன்மறை [2]தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்[ற]னள்” [அகம் - ௪௮]

என்பது உயர்த்துச் சொல்லியவாறு.

தலைவன் உயர்த்துச் சொல்லியதற்குச் செய்யுள்:—

“மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.” [குறள் - ௱௱௨௮]

பிறவு மன்ன. ஐயக்கிளவி களவியலுட் கூறப்பட்டது. (௩௨)

௨௭௩௫. உறுக ணோம்ப றன்னியல் பாகலி
னுரிய தாகுந் தோழிக ணுரனே.

என்-னின், இது தோழிக் குரியதோர் மரபுவழுக் காத்தலை நுதலிற்று.

(பிரதி)—1. பதித்து. 2. தேர்.

தலைமகற் குற்றதுன்பம் பரிகரித்தல் தோழியியல்பாகலின் அவட்குரியதாகும் அறிவு என்றவாறு.

அதனானே 1யன்றே:

"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி"

என்னும் பாலைக்கலியுள்,

"கிழவ 2ரின்ன ரென்னாது பொருடான்
பழவினை மருங்கிற் [பெயர்பு]பெயர் புறையும்", [கலித் ௧- உக]

எனக் கூறினாள் என்றுகொள்க. (௩௩)

௨௱௩௫. உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே.

என்-னின், இதுவு மது.

உயர்த்துச் சொல்லுங் கூற்றும் உரித்து தோழிக்கு என்றவாறு.

"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே." [கலித் - ருஉ]

என்பது உயர்த்துச் சொல்லியவாறு. (௩௪)

௨௱௩௭. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த
றாவின் றுரிய தத்தங் கூற்றே.

என்-னின், வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல்நுதற்று.

தத்தங் கூறுபாட்டினான் வாயில்கள் கூறுங் கிளவி வெளிப்படக் கிளத்தல் கேடின்றி யுரிய வென்றவாறு.

தத்தங்கூறுவது அவரவர் சொல்லத்தகுங் கூறுபாடு. ஆனுருபு தொக்கு நின்றது. எனவே வாயில்களல்லாத தலைமகளும் நற்றாயும் மறைத்துச் சொல்லப்பெறுவர் என்றவாறு.

வருகின்ற சூத்திரம் மறைத்துச் சொல்லு முள்ளுறை சொல்லுகின்றா ராதலின், அவ்வுள்ளுறை வாயில்களை விலக்கியவாறு. இவர் மறைத்ததனாற்குற்றமென்னை? இவர் குற்றேவன் முறைமையராதலானுங் கேட்போர் பெரியோர் ஆதலானும் வெளிப்படக் கூறாக்காற் பொருள் விளங்காமையானும் அவ்வாறு கூறினா லிவர் கூற்றிற்குப் பயனின்மையானும் வெளிப்படவே கூறும் என்க. (௩௫)

௨௱௩௮. உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே.

என்-னின், உள்ளுறையாமாறு உணர்த்துதல்நுதலிற்று. உடனுறையும் உவமமுஞ் சுட்டும் நகையும் சிறப்பும் எனக் கெடலரு மரபினையுடைய உள்ளுறை ஐந்துவகைப்படும் என்றவாறு.

(பிரதி)—1. யன்றேன. 2. கன்னு.

உள்ளுறையாவது பிறிதொருபொருள் புலப்படுமாறு நிற்பதொன்று. அது கருப்பொருள்பற்றிவருமென்பது அகத்திணையியலுட் [அகத்திணை - ருய] கூறப்பட்டது.

உடனுறையாவது உடனுறைவ தொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொரு பொருள் விளங்குவது.

“விளையாட் டாயமொடு வெணமர லழுத்தி
மறந்தனன் துறந்த [1]காள்முளை யகைய
நெய்பெய் தீம்பால் பெய்தனம் வளர்த்தது
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது நலனே
யம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலு மிலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கி
னிறைபடு நீழற் பிறவுமா ருளவே.” [நற்றிணை - ௱௭௨]

இதனுள் ‘புன்னைக்கு நாணுதும்’ எனவே, அவ்வழித் தான் வளர்த்த புன்னை யென்றும், ‘பல்காலும் அன்னைவருவள்’ என்றுடனுறைகூறி விலக்கியவாறு. பிறவுமன்ன.

உவமம் என்பது உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது.

“வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும்—நிறைமதுச்சேர்ந்
துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைப்பிரிந்த வண்டு.” [தண்டி-ருரு-உரை]

இது வண்டைக்கூறுவாள் போலத் தலைமகன் பரத்தையிற்பிரிவு கூறுதலின் உள்ளுறையுவம மாயிற்று.

சுட்டு என்பது ஒருபொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல்.

“தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.” [குறள் - ௲௨௱௭௯]

இதனுள் இப் பூப்[பறிப்]பேமாயின் வளைகழன்று தோண்மெலிய நடத்தல் வல்லையாக வேண்டும் என ஒருபொருள் சுட்டித்தந்தமை காண்க.

நகையாவது நகையினாற் பிறிதொரு பொருளுணர நிற்றல்.

“அசையியற் குண்டாண் டோ ரேரியா னேக்கப்
பசையினள் பைய நகும்.” [குறள் - ௲௯௮]

இதனுள் நகையினாற் பிறிதோர் குறிப்புத் தோன்றியவாறுகாண்க.

சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இது எனக் கூறுவதனானே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது. (௪௬)

௨௱௩௧. அந்தமில் சிறப்பி னாகிய வின்பந்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.

(பிரதி)—1. காள்முளை. 2. செய்பெய்.

என்-னின், இதுவும் உள்ளுறைப்பாற் படுவதோர் பொருள் உணர்த்-ற்று.

அந்தமிலாத சிறப்பினாகிய வின்பத்திடத்து உள்ளுறைப் பொருண்மை வருதலும் வகுத்த வியல்பு என்றவாறு.

'அந்தமில் சிறப்பு' என்பது மேன்மேலுஞ் சிறப்புச் செய்தல்.

"நுண்ணெழின் மாமை சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையா
ரொண்ணுத னீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்" [கலித் - ௪]

என்றவழி, இன்பத்தின் கண்ணும் பிறிதோர் பொருள் உண்டென்பது தோற்று கின்றது. (௪எ

௨௱௪௮. மங்கல மொழியு மவையன் மொழியு
மாறி லாண்மையிற் சொல்லிய மொழியுங்
கூறிய மருங்கிற் கொள்ளு மென்ப.

என்-னின், இதுவும் உள்ளுறைப்பாற் படுவதோர் சொல் உணர்த்-ற்று.

மங்கலமொழி முதலாகச் சொல்லப்பட்டனவு முள்ளுறைப் பாற்படும் என்றவாறு.

மங்கல மொழியாவது—மங்கலத்தாற் கூறுஞ்சொல். அது செத்தாரைத் துஞ்சினார் என்றல்.

அவையன்மொழியாவது இடக்கரடக்கிக் கூறுதல். அது கண்கழீஇ வருதும் என்றல்.

மாறிலாண்மையிற் சொல்லிய மொழியாவது ஒருவனைச் சிங்கம் வந்த தென்றாற் போற் கூறுவது.

அவையெல்லாஞ் சொல்லாற் பொருள் படாமையின் உள்ளுறைப்பாற்படும். இன்னும் இவ்வாற்றாற் பொருள் கொள்ளுமாறு 'ஒல்லுவ தொல்லும்' என்னும் புறப்பாட்டினுள் [புறம் - ௱௬௬] 'நோயில ராகநின் புதல்வர்' எனவும் 'சிறக்கநின் னாளே' எனவும் வரும் மங்கலச்சொல் கெடுக என்னும் பொருள் பட்டவாறு காண்க.

"இதுவுமோ ராண்மைக் கொத்த படிறுடைத்து" [கலித்-அ௬] [1]என்றது தீயொழுக்கம் ஒழுகினாய் என இடக்கரடக்கி யவையன்மொழியால் ஒழுக்கக் குறைபாடு கூறியவாறு. (௪அ)

௨௱௪௯. சினனே பே[தை]மை நிம்பிரி நல்குர
வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

என்-னின், மெய்ப்பாட்டியலுள் நடுவண் ஐந்திணைக்குரிய தலைமக்கட் [2]காகாதன எடுத்தோதுகின்றா ராகலின், அவற்றுள் ஒருசாரன ஓரோவிடத்து வருமென்பது உணர்த்-ற்று.

இச்சூத்திரம் எதிரதுநோக்கிற்று.

சினமும் பேதைமையும் நிம்பிரியும் நல்குரவும் என்று சொல்லப்பட்ட அந்நான்கு வகையும் யாதானும் ஒருபொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும் என்றவாறு.

(பிரதி)—1. என்றவாறு. 2. காகாதென.

"கொடியிய னல்லார் குரனூற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
[1]தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்று தவர்." [கலித் - அஅ]

இதனுள் 'தொடிய எமக்கு நீயாரை' என்பது சினம்பற்றி வரினும் காமக்குறிப்பி னாற் புணர்ந்த தலைமகள் கூறுதலின் அவள் காதலைச் சிறப்பிக்க வந்தது.

"செவ்விய திவ்விய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய [2]வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாத லி[யா]ன்யாங் கறிகோம[ற்] றைய" [கலித் - ௰௯]

என்பதனுள் 'யான்யாங் கறிகோ' என ஏதம்பற்றி வந்த பிரிவாற்றாமையைச் சிறப் பிக்க வந்தது.

"அகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி." [கலித் - ௰௯]

என்பதனுள் தலைவி 'மகனல்லை' என[ல்] நிம்பிரியாகிய வெறுப்புப் பற்றி வந்தது.

இதுவும் பிரிவாற்றாமையைச் சிறப்பிக்க வந்தது.

"உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
[3]விழைவொடு வருதி நீயே யிஃதோ
வோரான் வல்சிச் சீறில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகன் வந்தென
வின்விழ வாயிற் றென்னுமிவ ளூரே." [குறுந் - உ௯௫]

இதனுள் 'ஓரான் வல்சிச் சீறில் வாழ்க்கை' எனத் தலைமகன் செல்வக்குறைபாடு கூறிப் 'பெருநலக் குறுமகன் வந்தென விழவாயிற்றென்னு மிவளூர்' என்றமையான் நல் குரவு பற்றித் தலைமகனைச் சிறப்பிக்க வந்தது. இச்சூத்திரத்துள் வரைந்து கூறாமையின் தலைவியுந் தலைவனுந் தோழியுஞ் செவிலியுங் கூறப்பெறுவர் என்று கொள்க. (௩௯)

உ௱௪உ. அன்னை யென்னை யென்றலு முளவே
தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந்
தோன்றா மரபின வென்மனார் புலவர்.

என்-னின், இதுவு மொருசார் மரபுணர்த்துதல் நுதலிற்று.

அன்னை என்னை என்று சொல்லுதலும் உள. அவை முன்புள்ளார் சொல்லிப் போந்த முறைமை. அவைதாம் சொல்லினானும் சொல்லிற் கங்கமாகிய எழுத்தினானும் பொருள் தோன்றாத மரபினையுடைய என்றவாறு.

எழுத்தென்பது எழுத்தாகப் பிரித்தாற் படும் பொருள்வேறுபாடு. இவை யகத் தினும் புறத்தினும் வரும்.

---

(பிரதி)—1. தொடீய. 2. வன்ஞன். 3. விளிவொடு வருந்தி.

"ஓரியி[ன]ஞெழுகு மென்னைக்குப்
[பரியன் மன்யான் பண்டொரு காலே."]

என்பது தலைமகள் தலைமகனைக் கூறியது.

"அன்ன யிவனோ விளமாணுக்கன்" [குறுந் - ௩௩]

என்[பது] தோழிக்குக் கூறியது.

"என்னைமுன் நில்லன்மின் றெவ்வீர் [பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்"] [குறள் - எ௭௧]

"என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே" [புறம் - அ௪]

இவையும், 'என்றலும்' என்ற வும்மையால் நிகரனவுங் கொள்க.

"எந்தைத னுள்ளங் குறைபடா வாறு"

... வரும். (௫௰)

௨௭௪௩. ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா
கற்பு மேரு மெழிலு மென்றா
சாயலு நாணு மடனு மென்றா
[1]நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங்
காவயின் வரூஉங் கிளவி யெல்லா
நாட்டியன் மரபி னெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப.

என்-னின், மேற் பொருட்பாகு [பாடு] முதல் கரு வுரிப் பொருளென வுணர்த்தி அவற்றின்பாகுபாடு இத்துணையும் ஓதினர். அவற்றுட் பாகுபடுத்திக் [2]காட்டலாகாதன சிலபொருள் கண்டு அவற்றைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

ஒப்புமுதலாக நுகர்ச்சி யீறாக அவ்வழிவருஞ் சொல்லெல்லாம் நாட்டின்வழங்கு கின்ற மரபினானே பொருளை மனத்தினான் உணரினல்லது மாணுக்கர்க்கு இது பொருள் என வேறுபடுத்தி யாசிரியன் காட்டலாகாத பொருளையுடைய என்றவாறு.

ஒப்பாவது—தந்தையையொக்கும் மகனென்பது. அவ்விருவர்க்கும் பிறப்பு வேறாயினவழி ஒப்பாகிய பொருள் யாதென்றார்க்கு இதுவெனக் காட்டலாகாமையின், அவ் விருவரையுங் கண்டான் அவ்வொருவ ரொருவரை ஒக்குமது பிறனொருவன் மாட்டுக் காணுமையிற் றானே யப்பொருண்மையை உணரும் என்பது.

உரு என்பது—உட்கு. அது பயிலாத பொருளைக் கண்டுழி வருவதோர் மன நிகழ்ச்சி. இவருட்கினர் என்றவழி மனத்தினான் உணரக் கிடந்தது.

வெறுப்பு என்பது—செறிவு. அது அடக்கங்குறித்து நின்றது. அவரடக்கமுடையர் என்றவழி யதுவும் மனத்தினான் உணரக் கிடந்தது.

கற்பு என்பது—மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி. அதுவும் மனத்தா னுணரக் கிடந்தது.

ஏர் என்பது—தளிரின்கட் டோன்றுவதோர் பொலிவுபோல எல்லாவுறுப்பினும் ஒப்பக்கிடந்து கண்டார்க் கின்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு. அது எல்லாவண்

(பிரதி)—1. நோயினும் வேட்கையின்னுகர்வு. 2. காட்டலாகாதென.

ணத்திற்கும் பொதுவாகலின் வண்ணம் அன்றாயிற்று. இது வண்ணம் பற்றிவரும். 'இவன் ஏருடையன்' என்றால் அதுவும் மனங்கொளக் கிடந்தது.

எழில்என்பது—அழகு. அது மிக்குங் குறைந்தும் நீடியும் குறுகியும் நேர்ந்தி உயர்ந்தும் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைந்த வழி வருவதோர் அழகு. இதுவும் அழகியன் என்றவழி அழகினைப்பிரித்துக் காட்டல் ஆகாமையின் ஈண்டோதப்பட்டது.

சாயல் என்பது—மென்மை. அது நாயும் பன்றியும் போலாது மயிலுங் குயிலும் போல்வதோர் தன்மை. அதுவுங் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

நாண் என்றது—பெரியோர் ஒழுக்கத்துமாறாயின செய்யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி. அதுவுங் காட்டலாகா[து.]

மடன் என்பது—பெண்டிர்க் குள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக்காது கேட்டவாற்றானுணரும் உணர்ச்சி. அதுவும் காட்டலாகா[து.]

நோய் என்பது—துன்பம். இவன் துன்பமுற்றான் என்றவழி அஃதெத்தன்மைய[து] என்றார்க்குக் காட்டலாகாமையின் அதுவும் ஈண்டோதப்பட்டது.

வேட்கை என்பது—யாதானும் ஒன்றைப் பெறல்வேண்டு மெனச் செல்லும் மன நிகழ்ச்சி. இவன் வேட்கையுடையான் என்றவழி அஃது எத்தன்மை என்றார்க்குக் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

ஆவயின் வரூஉங் கிளவியெல்லாம் என்றதனான் அன்பு அழுக்காறு பொறை அறிவு என்பனவும் இவைபோல்வனவுங் கொள்க. இவையெல்லாம் அகத்திணை புறத்திணை இரண்டிற்கும் பொது. இவை காட்டலாகாப் பொருளவாயின் இல்பொருண்மேற் சொன்னிகழ்ந்தவென்றாலோ எனின், இது மேற்கூறப்பட்ட பொருள் பொருளென்பது அறிவித்தல். அவை உள்பொருள் என்ப[து] வருகின்ற சூத்திரத்தான் உரைப்ப. (௫௧)

௨௱௬௪. இமையோர் தே[எ]த்து மெறிகடல் வரைப்பினு
மவையில் கால மின்மை யான.

என்-னின், இதுவும் மேற்கூறப்பட்ட பொருள் பொருள் என்பது அறிவித்தலை நுதலிற்று. தேவருலகத்தினுங் கடல்சூழ்ந்த வுலகத்தினு மேற்சொல்லப்பட்ட பொருளில்லாத காலம் இன்மையான் உள்பொருளென்றே கொள்ளப்படும் என்றவாறு. (௫௨)

ஐந்தாவது - பொருளியல் முற்றிற்று.

---